173 ஜென் கதைகளாலும் 10 மாடு மேய்க்கும்
படங்களிலிருந்தும் விழிப்புணர்வு பெறுங்கள்

# நான் யார்?

## தேடலும் வீடுபேறு அடைதலும்

தொகுப்பும் செம்மையாக்கமும்

**கேரன் சிவன்**



# நான் யார்?

## தேடுதலும் வீடுபேறு அடைதலும்



**173 ஜென் கதைகளாலும்
10 மாடு மேய்க்கும் படங்களிலிருந்தும்
விழிப்புணர்வு பெறுங்கள்**

தொகுப்பும் செம்மையாக்கமும்
**கேரன் சிவன்**

அறிமுகமும் முன்னுரையும்
**ஜென் குரு ஆமா சாமி**
போதி ஜென்டோ, கொடைக்கானல்

ஆங்கிலத்திலிருந்து தமிழில்
**சேஷையா ரவி**

மீள்பார்வை
**அடையாளம் பதிப்புக்குழு**






## உள்ளடக்கம்

## இயல் நான்கு



## இயல் ஐந்து

# முன்னுரை

கடவுள் கதைகளை நேசிப்பதால்தான் அவர் மனிதகுலத்தை படைத்தாராம்! வாழ்க்கை கதைகளை உருவாக்கி கதைகள் வாழ்க்கையை உருவாக்கி, நடத்துகிறது. உருவாக்கக் கதைகளும் நீதிக் கதைகளுமே நல்லொழுக்க போதனையின் மையம். கதைகள், நீதிக்கதைகள், முரணுண்மைகள், கேள்விகள் ஆகியவற்றின் மூலமே ஜென் போதிக்கிறது. வாழ்க்கையிலும் உலகத்திலும் பல சாத்தியங்கள் உள்ளன என்னும் பார்வையைக் கதைகள் தருகின்றன, அர்த்தத்தைத் தந்து கேள்விகளை எழுப்புகின்றன. இந்தக் கேள்விகள் கதை கேட்பவரை அலைக்கழித்து, தூண்டி விட்டு, கேட்பவருக்குச் சவால் விடுகின்றன. கதைகள் எழுப்பும் கேள்விகள் ஆற்றல் வாய்ந்தவை; அவை உண்மையில் நம்பத் தகுந்தவையாக இருக்கும்போது, ஒருவரின் அன்றாட வாழ்வைத் தலைகீழாக மாற்றி, புதிய பாதைகளையும் புதிய உலகங்களையும் திறந்துவிடுகின்றன. உண்மையில் கேள்விகள்தான் விடுதலைக் கான கதவுகளைத் திறந்துவிடுகின்றன. ஜென் கதைகள் வழக்கமாக மாணவர்களுக்கான கேள்விகளோடு முடிகின்றன. இந்தக் கேள்விகள் பாரம்பரியமாக 'கோவான்' (koan) என்று அழைக்கப்படுகின்றன.

கேரன், *173* கதைகளைச் சேகரித்து, அவற்றோடு சில சூத்திரங் களையும் எதிர்வினைகளையும் தந்திருக்கின்றார். இந்தக் கதைகளில் பலவும் ஏற்கெனவே தெரிந்தவைதாம். ஆனால் ஜென் சொல்வதைப் போல் உங்களுக்கு 'தொடக்க நிலையினரின் மனம்' இருக்குமானால், இந்தக் கதைகள் உங்களுடைய சொந்த மனத்தின் அறியாத ஆழங்களையும் ஏக்கங்களையும் உங்களுக்குத் திறந்துவிடும். இந்தக் கதைகளின் மறைக்கப்பட்ட அறைகளுக்குள் நுழைய உங்களை இவை அனுமதிப்பதற்குமுன் இவற்றுடன் சற்றே நீங்கள் வாழ வேண்டும். வாசிப்பவரிடம் தங்கள் சொந்தக் கதைகளைச் சொல்லி, சொந்தக் கேள்விகளைக் கேட்கும்படி

இந்தக் கதைகள் தூண்டிவிடுகின்றன. வாசிப்பவர்கள் தங்கள் சொந்த வாழ்வுக்குள்ளும் உலகத்துக்குள்ளும் அவற்றின் அர்த்தத்துக்குள்ளும் நுழைந்து பார்க்கவும் தங்கள் மனம் எழுப்பும் கேள்விகளைக் கவனித்துக் கேட்கவும் இவற்றில் இடம் தரப்பட்டுள்ளன. தொகுத்தவரின் தொல்லை தரும் கருத்துகளோ, விளக்கங்களோ நட்டுவைத்த கேள்விகளோ இல்லாதது வாசகருக்குக் கூடுதல் வாய்ப்பைத் தருகிறது. பிறகு இந்தக் கதைகளும் அவற்றின் கேள்விகளும் எப்படியும் முடிவதாக இருந்து, வாசகருக்கு அவர் எதைப் பெறுவதற்கோ உருவாக்குவதற்கோ ஆசைப்படுகிறதோ அதற்கான இடத்தைத் தருகின்றன.

ஜென் கதைகளைப் படிப்பது ஒரு கலை. அது ஒரு படைப்புச் செயல். இந்த ஜென் கதைகள் ஒரு குறிப்பிட்ட சமூக வரலாறு மற்றும் சமூக வாழ்வுக் கட்டத்தில் தோன்றியவை, அவற்றுக்கு ஒரு வரலாறு உண்டு. இருந்தும் அவை நம் தேடலையும் வியப்பையும் உள்ளடக்கியுள்ளன. அவை மனிதத் தேடலையும் ஏக்கத்தையும் பேசும் முடிவற்ற கதைகளாக இருப்பதோடு மனித இன்பவியல், துன்பவியல் நாடகங்களாகவும் இருக்கின்றன. அவர்கள் சொல்லும் கதைகளும் கேட்கும் கேள்விகளும் இங்கும், இப்போதும் நிகழ்கின்றன. ஜென் கதைகள் காவிய வகையைச் சேர்ந்தவை அல்ல, அவை சின்னஞ் சிறியதாக, சட்டென்று முடிபவையாக, கொடுத்து வாங்கும் நேரெதிராகப் பேசும் உரையாடல்களாக உள்ளன; அவை திரும்பத் திரும்பவரும், முரண்பாடுகளாகவும் சவால்களாகவும் இருக்கின்றன. வாசகரே, அவை உங்களுடைய கதைகள், உங்களுடைய கேள்விகள்; அவை உங்களுடைய உலகத்தையும், வாழ்க்கையையும், உறவுகளையும் பேசுகின்றன.

தயவுசெய்து, கதவைத் திறந்து உள்ளே நுழையுங்கள்.

ஆனால், நீங்கள் வெளித்தோற்றத்துக்கு அமைதியாகவும் நிசப்தமாகவும் உள்ள வனத்துக்குள் நுழைவது போலிருக்கும். ஆனால், உண்மையில் அவை இருண்ட, மயக்கிக் கவரும் வனமாகவும் இருக்கும். அங்கே உங்கள் வாழ்க்கையே பணயமாகிவிடலாம் என்ற எச்சரிக்கையோடு இருங்கள்!

ஆமா சாமி



## திரி-சரணம்

புத்தம் சரணம் கச்சாமி
தம்மம் சரணம் கச்சாமி
சங்கம் சரணம் கச்சாமி
ஓம் சாந்தி
சாந்தி சாந்தி

## நான்கு பெரும் உறுதிமொழிகள்

உயிரினங்கள்
எண்ணற்றவையாக இருந்தாலும் அவற்றை
விடுதலைக்கு இட்டுச் செல்வேன் என உறுதிமொழிகிறேன்;

மயக்கும் பேரார்வங்களும்
எண்ணங்களும் முடிவற்று எழுந்தாலும்,
அவற்றை மாற்றுவேன் என்று உறுதிமொழிகிறேன்.

தர்மம் பரந்து விரிந்ததாக,
ஆழ்ந்து அறிய முடியாததாக இருந்தாலும்,
அதில் நான் முழுமையாக நுழைவேன் என்று
உறுதிமொழிகிறேன்.

விழிப்புணர்வை அடைந்தவரின் பாதை
விஞ்ச முடியாததாக இருந்தாலும்,
தொடர்ந்து இறுதிவரை நடப்பேன் என்று
உறுதிமொழிகிறேன்.

# அறிமுகம்

உனக்குப் பற்றுதலின் மீதிருக்கும் பற்றுதலையும் சுய பிம்பங்களையும் மனக்கண் படிவங்களையும் விட்டகலவிடும் பயிற்சியே ஜென் பயிற்சி. அது விட்டகல விடுவதும் சுயத்தை வெறுமையாக்குவதும் மட்டுமல்ல, விழிப்புணர்வைத் தரக்கூடிய மற்றவரிடமும், உலகத்திடமும், ஓர் இலையிடமும், ஒரு மலரிடமும், ஓர் ஒலியிடமும், ஒரு சைகைக் குறிப்போடும் அல்லது ஒரு சொல்லிலும் ஆதாரமான திறந்த மனத்துடன் இருத்தல். ஒரு மலர் மலர்கிறது; அது சுயமற்ற சுயத்தின் மலர்ச்சி. ஒரு பறவை கிறீச்சிடுகிறது, அது சுயமற்ற சுயத்தின் கிறீச்சொலி. அது ஒருவருடைய இதயத்தையும் மனத்தையும் வெறுமையானதாகவும், கட்டற்ற திறந்த தன்மையான தாகவும் உலகத்தை சுயமாகவும், சுயத்தை உலகமாகவும் உணர்வது. அது வெறுமைக்கு விழிப்படையும் வெறுமையாகும்.

**மாடு மேய்க்கும் படங்கள்**

12ஆம் நூற்றாண்டில் குவோ அன் ஷிஹ் யுவான் (அவருடைய ஜப்பான் பெயரான ககுவான் என்று நன்கறியப்படுவர்) ஞானமடைவதற்கான ஜென் பயணக் கட்டங்களை உருவகப் படுத்துகிற படங்களின் தொடரை வரைந்தார். ஜென் மரபில் அவை மாடு மேய்க்கும் படங்களென அறியப்படுகின்றன. ககுவானுக்கு முன்பே இது போன்ற படங்கள் புழக்கத்தில் இருந்தாலும், வேறெந்தத் தொடரிலும் இல்லாத இரண்டு கூடுதல் படங்களோடு ககுவானின் படத்தொடர் முழுமையானதாகக் கருதப்படுகிறது.

ககுவான் 10 படங்களில் ஒவ்வொன்றுக்கும் ஒரு தலைப்பைத் தந்ததோடு சிறு விளக்கத்தையும் ஒரு செய்யுளையும் தந்தார். ஜென் குருக்கள் மரபாக இந்தப் படங்களையும் அவற்றின்

தலைப்புகளையும் பயன்படுத்தியதோடு, ஜென் ஞானம் பற்றிய தங்களுடைய தனிப்பட்ட பார்வையைப் பதிவு செய்கிற விதமாக ஒரு சிறு விளக்கத்தையும் தந்தார்கள்.

**கோவான்களும் கதைகளும்**

ஜாஜெனில் 'சும்மா உட்கார்ந்திருப்பது, கோவான்களைப் பயன்படுத்துவது' இரண்டுமே முக்கியமானவை என்றாலும் மெய் உணர்தலுக்கும் பண்படுத்துவதற்கும் கோவான் பயிற்சி அவசியமானது. ஒரு தகுதியான குருவின் (ஆசானின்) வழிகாட்டலோடு மட்டுமே ஜென்னைச் சரியாகக் கற்றுக் கொள்ள இயலும். குறிப்பாக, கோவான் பயிற்சிக்கு, ஆசான் இன்றியமையாதவர்.

ஆசானால் உங்களுக்கு ஞானம் தர இயலாது; அவர் வழிகாட்டவும், சவால் விடவும், பரிட்சை செய்து பார்க்கவும், உறுதிப்படுத்தவுமே இருக்கிறார்.

உண்மையில், உலகம் முழுமையுமே உங்களுடைய ஆசான் தான், பிறப்பும் இறப்புமான மொத்த வாழ்க்கையுமே பயிற்சிக் களம்தான். ஒரு வகையில், ஜென் கதைகள் விழிப்பூட்டும் குரலாக இருக்கின்றன.

இந்த நம்பிக்கையிலேயே இந்தக் கதைகள் வழங்கப்படுகின்றன.

# தொகுப்புரை

*நான் யார்?: தேடுதலும் வீடுபேறு அடைதலும்* – மாடு மேய்க்கும் படங்களையும் கோவான்கள், கதைகள், குறிப்புகள், சூத்திரங்கள், கவிதைகள், மேற்கோள்கள் ஆகியவற்றையும் ஒன்றாகத் தருகிறது.

ஒவ்வொரு இயலும் மாடு மேய்க்கும் படம், ககுவானின் சித்திரம், செய்யுள் ஆகியவற்றுடன் தொடங்கி, ஆங்காங்கே ஆமா சாமியின் கருத்துகளும் தேர்ந்தெடுக்கப்பட்ட கதைகளும் இடம்பெறுகின்றன. பல கதைகளும் ஒன்றுக்கு மேற்பட்ட இயல்களோடு ஒன்றிப் போகக்கூடியவை. அவை சித்திரங்களை விவரிக்கும் நோக்கத்தோடு அவ்வியல்களில் சேர்க்கப்பட்டுள்ளன.

இந்தப் புத்தகத்தைத் தொகுக்க எனக்குச் சவால் விடுத்ததோடு, அப்பணியில் எனக்குத் தொடர்ந்து உற்சாகமளித்தவர் பங்குத் தந்தை ஆமா சாமி. அவரே இந்நூலில் இடம்பெறும் *முன்னுரை, அறிமுகம், அழைப்பைப் பின்பற்றுதல், வாழ்வு துக்கம் நிறைந்தது, பயணம் செய்தல், போதி ஜென்டோ பற்றி, ஜாஜென்* ஆகிய பகுதிகளையும் எழுதியிருக்கிறார்.

இந்தப் புத்தகத்தைத் தமிழில் சிறந்த முறையில் மொழி பெயர்த்து வெளியிடும் அடையாளம் பதிப்புக் குழுவினர்,

அனைவருக்கும் நன்றி.

இப்போது காலங்கடந்த கதை சொல்லும் மரபில், நாம் தொடங்கலாம்...

கேரன்

## முதல் கதை

### கெம்போவின் ஒரு வழி

குரு கெம்போவிடம் கேட்கப்பட்டது:

'முக்தியின் பாதை எங்கே இருக்கிறது?'

அவர் தனது கையில் இருந்த கம்பை எடுத்து ஒரு கோட்டை வரைந்து, 'இங்கிருக்கிறது' என்றார்.

கெம்போவின் இந்த ஒரு வழி குறித்து ஒருவர் ஒரு குருவிடம், 'அதில் எப்படி நுழைவது?' என்று கேட்டார்.

அந்தக் குரு, 'அருகில் சலசலத்து ஓடிக்கொண்டிருக்கும் ஓடையின் சப்தம் உனக்குக் கேட்கிறதா?' என்று கேட்டார். (அங்கே ஓர் ஓடை சலசலத்து ஓடிக்கொண்டிருந்தது)

'ஆமாம்!'

'நல்லது, அதன்வழி நுழை!'

அந்த மனிதர் மேலும் கேட்டார்:

'ஒருவேளை அங்கு ஓடையும் இல்லாமல், சப்தமும் இல்லாமல் இருந்தால்?'

அந்த மனிதரின் பெயரால் அவரைக் கூப்பிட்டார் குரு;

'ஆம்!' என்று பதில் கொடுத்தார் அவர்.

குரு சொன்னார்: 'இதன்வழி நுழை!'

## இயல் ஒன்று

## மாட்டைத் தேடுதல்



உலகின் மேய்ச்சல் நிலத்தில்,
உயர்ந்து நிற்கும் புற்களை முடிவற்று
விலக்கிக் கொண்டிருக்கிறேன், மாட்டைத் தேடி.

பெயரறியா நதிகளைப் பின்பற்றி,
தூரத்து மலைகளின் பிணைந்து ஊடுருவும்
பாதைகளில் காணாமல் போகிறேன்.

என் பலம் குன்றுகிறது; என் உயிர்ச்சக்தி தளர்கிறது;
என்னால் மாட்டைப் பார்க்க முடியவில்லை.

இரவில் காட்டின் வெட்டுக்கிளிகள் போடும்
சப்தத்தை மட்டுமே கேட்கிறேன்.

‘தொலைந்துபோன தன் மாட்டைத் தேடும்
ஓர் இளம் விவசாயி சித்திரத்தில் காட்டப்படுகிறார்.
இது முற்றுண்மைக்கான தேடல்.
மெய்யான சுயத்துக்கான தேடல்.
விட்டுவிட்டுத் தேடும் வெறும் தேடல் போதாது.
ஒருவருக்கு முனைப்பும், தயார்நிலை, தைரியம்,
அர்ப்பணம், இடைவிடா முயற்சி ஆகியவையும் வேண்டும்.’

## 2

## ஜென் என்பது என்ன?

'மின்னல் மின்னுகிறது,
தீப்பொறிகள் பொழிகின்றன,
உங்கள் கண்களின் ஒரு சிமிட்டலில் நீங்கள் பார்க்க
வேண்டியதைப் பார்க்கத் தவறிவிட்டீர்கள்.'

ஒரு மீன் குஞ்சு தன் அம்மாவிடம் கேட்டது:

'நான் கடலைப் பற்றி எப்போதும் கேள்விப்படுகிறேன். அதென்ன கடல்? அது எங்கே இருக்கிறது?'

'நீ வாழ்வதும், அசைவதும், உன் உயிர் இருப்பதும் கடலில் தான். கடல் உனக்குள்ளும் இருக்கிறது, நீ இல்லாமலும் இருக்கிறது. நீ கடலால் ஆனவள், நீ கடலில்தான் முடிவாய், கடல் உன் சொந்த உயிரைப் போல உன்னைச் சூழ்ந்துள்ளது' என்று சொன்னாள் அம்மா.

ஆகவே 'ஜென் என்பது என்ன?' என்ற இந்தக் கேள்விக்கு உண்மையான ஒரு பதிலைத் தேடிக் காண்பது உன்னால் மட்டுமே முடியும்.

# 3

## வழிமுறைகள்

முன்னொரு காலத்தில் செட்டன், ஜென்
மடாலயங்களுக்கான வழிமுறைகளை எழுதினார்:

'ஜென்னைக் கற்பதற்கு மூன்று விஷயங்கள் அத்தியாவசிய மானவை என்று பழங்கால மனிதர் ஒருவர் குறிப்பிட்டார்.

ஒன்று, முழுமையான நம்பிக்கை.
இரண்டாவது, கேள்வி கேட்பதில் முழுமையான ஆழம்.
மூன்றாவது, முழுமையான மனவுறுதி.
இவற்றில் ஒன்று இல்லாவிட்டாலும்
ஒரு காலற்ற முக்காலி போல் ஆவீர்கள்.'

'இங்கே எனக்குத் தனித்த வரையறைகள் ஏதுமில்லை. ஒவ்வொரு வருக்கும் உணரத்தக்க ஒரு தனி இயல்பு இருக்கிறது என்பதை நீங்கள் அங்கீகரிக்க வேண்டும் என்று விரும்புகிறேன். அதைப் போலவே ஒவ்வொருவராலும் ஊடுருவிப் பார்க்க முடிந்த அத்தியாவசிய உண்மையொன்று உள்ளது. நாம் அதிசயிக்கத் தக்க முதுமொழிகள் உள்ளன. மனிதர்கள் பாதி கவனத்தோடும், பாதி விழிப்போடும் போனால் அவர்களால் ஜென்னில் வெற்றி காண இயலாது.

மிகக் கவனமாகவும் முழுமையாகவும்
தேடிப் போவது அத்தியாவசியமானது.'

# 4

## புல்லும் மரங்களும் எப்படி ஞானமடைந்தன

காமகுரா காலத்தில், டெண்டைத் தத்துவத்தை ஆறு ஆண்டுகளும், பிறகு ஏழு ஆண்டுகள் ஜென்னையும் கற்றார் ஷிங்கன். அதன்பிறகு சீனாவுக்குச் சென்று அங்கு பதின்மூன்று ஆண்டுகளுக்கும் மேலாக ஜென் குறித்துக் கூர்ந்து ஆராய்ந்தார்.

ஜப்பானுக்கு அவர் திரும்பிய போது பலர் அவரைச் சந்தித்துப் பேச விரும்பினர். குழப்பமான கேள்விகளையும் கேட்டனர். ஆனால் ஷிங்கன் எப்போதாவதுதான் பார்வையாளர்களை வரவேற்றார். அவர்களின் கேள்விகளுக்கு அரிதாகத்தான் பதில் சொன்னார்.

ஒருநாள் 50 வயதான, ஒரு ஞானத்தேடல்கொண்ட ஒரு மாணவர் ஷிங்கனிடம் சொன்னார்: 'டெண்டை சிந்தனைப் பள்ளியில் நான் சின்ன வயதிலிருந்தே படித்திருக்கிறேன். ஆனால் அதில் ஒரு விஷயத்தை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. புல்லும் மரங்களும்கூட ஞானம் அடையும் என டெண்டை சொல்லிக்கொள்கிறது. எனக்கு அது ரொம்ப விநோதமாகத் தோன்றுகிறது.'

'புல்லும் மரங்களும் எப்படி ஞானமடையும் என்பது குறித்த விவாதத்தினால் என்ன பயன்?' என்று கேட்ட ஷிங்கன், 'நீ எப்படி ஞானமடைய வேண்டும் என்பதுதான் கேள்வி. அதுகுறித்து எப்போதாவது யோசித்தாயா?' என்று கேட்டார்.

'இப்படி நான் ஒருபோதும் யோசிக்கவே இல்லை' வியப்படைந்தார் அந்த முதியவர்.

'அப்படியென்றால் வீட்டுக்குப் போ. அதைப்பற்றி யோசி' என்று சொல்லி முடித்தார் ஷிங்கன்.

# 5

## மெய்யான இயல்பு

'குரு டோஸோட்சூ தம் சீடர்களுக்கு
மூன்று தடைகள் வைத்திருந்தார்:
நீ ஒன்றையும் விடாமல் தேடி உனது உண்மையான
இயல்பின் ஆழத்தை ஆய்ந்து அதைப் பார்க்க வேண்டும்.
இப்போது, நான் உன்னிடம் கேட்கிறேன், எங்கே இருக்கிறது
உனது உண்மையான இயல்பு?
உனது உண்மையான இயல்பை உணர்ந்துவிட்டால்,
நீ பிறப்பிலிருந்தும் இறப்பிலிருந்தும்
விடுதலையாகிவிடுவாய்.
சொல்,
உனது இறப்பின் அந்தக் கணத்தில், பிறப்பிலிருந்தும்
இறப்பிலிருந்தும் எப்படி நீ விடுதலை அடைவாய்?
பிறப்பு இறப்பிலிருந்து விடுதலையடையும் போதுதான்,
உன் இறுதி இலக்கை நீ அறிய முடியும்.
சொல்,
இறப்புக்குப் பிறகு எங்கே போவாய்?'

6

## உள்ளே நடக்கும் வில்வித்தை

இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் ஜப்பானிய கிராமப் புறத்தில் உள்ள ஒரு மடாலயத்தில் ஜப்பானிய ஜென் குரு ஒருவர் இருந்தார். பக்கத்து ஊரில் காய்கறி விற்கும் ஒருவரின் மனைவி அவருக்கு சிஷ்யையாக இருந்தாள். அரசவை அமைச்சர் ஒருவரும் அவருடைய மற்ற சீடர்களில் ஒருவராக இருந்தார். அந்த அமைச்சர் வாரம் ஒருமுறை அம்மடாலயத்துக்கு வந்து இரண்டு மணிநேரம் தியானம் செய்தபிறகு, குருவைச் சந்தித்து விட்டுப் போவார். ஒரு நாளிதழ் தன்னுடைய நிருபர் ஒருவரை ஜென் குருவைச் சந்திக்க அனுப்பியது. அந்த நிருபர், 'இந்த மாதிரி ஒதுக்குப்புறமான இடத்திலிருந்து ஏன் உங்கள் காலத்தை வீணடிக்கிறீர்கள்? தலைநகருக்கு அருகிலுள்ள இடத்துக்கு வருவது நல்லதல்லவா? அப்போது காய்கறிக்காரரின் மனைவி போன்றவர்கள் மட்டுமல்ல அமைச்சரைப் போன்ற பலர் உங்களுக்குச் சீடர்களாவார்களே?' என்று கேட்டதற்கு, குரு தன்னை எப்படித் திட்டினார் என்பதைப் பரிதாபமாகத் தன் எழுத்தில் நிருபர் விவரித்தார். 'இது காய்கறிக்காரரின் மனைவி யாக இருப்பதா அல்லது அமைச்சராக இருப்பதா என்பதைப் பற்றிய விஷயமல்ல. ஆனால் காய்கறிக்காரரின் மனைவி, அமைச்சர் கடந்த விஷயமிது. நாங்கள் இங்கே வில்வித்தை சொல்லித் தருகிறோம்.

காய்கறிக்காரரின் மனைவியாக இருப்பதிலிருந்து தன்னை அம்பாக, அவள் தன் மெய்யான, இயல்பான, புத்த இயல்புக்கு

எய்துகொள்ள வேண்டும். அந்த அமைச்சர் தன்னை அமைச்சரிலிருந்து தன் மெய்யான, இயல்பான, புத்த இயல்புக்கு எய்துகொள்ள வேண்டும். சொல்லப்போனால் காய்கறிக்காரரின் மனைவிக்குக் காய்கறிக்காரரின் மனைவியாக மட்டும் இருப்பதிலிருந்து தன்னை எய்துகொள்வது சுலபமாக இருக்கும். மாண்புமிகு அமைச்சருக்கு அது அத்தனை சுலபமல்ல' என்றார்.

7

## அசையும் மனம்

இரண்டு மனிதர்கள் அசைந்துகொண்டிருந்த ஒரு கொடியைக் குறித்து விவாதித்துக்கொண்டிருந்தனர்.
'காற்றுதான் உண்மையில் அசைந்துகொண்டிருக்கிறது' என முதல் மனிதர் சொன்னார்.
'இல்லை, கொடிதான் அசைந்துகொண்டிருக்கிறது' என தீர்மானமாகச் சொன்னார் இரண்டாவது மனிதர்.
அந்தப் பக்கம் எதேச்சையாக நடந்து வந்துகொண்டிருந்த ஒரு ஜென் குரு, இருவரின் விவாதத்தைக் கேட்டு அதில் தலையிட்டார்.
'அசைவது கொடியுமில்லை; காற்றுமில்லை' என்று சொன்னவர், 'உங்கள் மனம்தான் அசைகிறது' என்றார்.

# 8

## ஆனால் ஏன்?

ஒருமுறை சு போங் சோய்ன்சா கலிபோர்னியாவில் நூறு நாள் தனிமை தியானத்தில் ஈடுபட்டார். கிட்டத்தட்ட மூன்றில் இரண்டு பங்கை அவர் முடித்த நிலையில், இது போன்ற தீவிரமான அட்டவணையை ஏன் தாம் தொடர வேண்டும் என சலிப்படைந்தோ, ஐயத்தோடோ தனக்குள்ளேயே யோசிக்க ஆரம்பத்தார். தாம் தங்கி பயிற்சி செய்த சிறு குடிலிலிருந்து கிளம்பியதோடு வாகனத்தில் இலவசமாக ஏறி, பயணம் செய்து பக்கத்தில் இருந்த ஒரு தொலைபேசி கூண்டுக்குச் சென்று தம் குருவான சியூங்க்சானை அழைத்தார்.

'உங்களிடம் கேட்பதற்கு என்னிடம் ஒரு கேள்வி இருக்கிறது' என்றார் சு போங்.

அவருடைய அழைப்புக்கு குரு பதிலளித்த போது, 'அப்படியா?' என்று அவர் மௌனத்தில் இருந்திருப்பார் என யூகித்திருந்த சியூங்க்சானின் குரல் சந்தேகத்தோடு திரும்ப வந்தது.

'தற்போது இந்தத் தியானத்தை பூர்த்தி செய்யப் போவதை நான் தெளிவாகப் பார்க்கிறேன். ஆனால் இன்னும் யோசிக்கிறேன்—ஏன்? எனக்கு அதைச் செய்யமுடிமென்று ஏற்கெனவே தெரிந்திருப்பதால்—ஏன் அதைத் தொடர வேண்டும்?'

'எல்லா உயிரினங்களுக்காக!' என பெருங் கூச்சலிட்ட சியூங்க்சான், தொலைபேசியின் ஒலிவாங்கியைச் சப்தத்தோடு கீழே வைத்தார்.

சு போங் சோய்ன்சா குடிலுக்குத் திரும்பச் சென்று தனது தியானத்தை முடித்தார்.

# 9

## தங்குவதற்காக விலைபேசும் விவாதம்

நாடோடியாக அலையும் ஒரு துறவி ஜென் கோயில் ஒன்றில் ஏற்கெனவே தங்கியிருப்பவர்களிடம் பௌத்தம் குறித்த விவாதத்தில் ஈடுபட்டு, வென்றால் அவர் அங்கே தங்க ஏற்பாடு செய்யப்படும். ஒருவேளை தோற்றுவிட்டால், அவர் கிளம்பிப் போய்விட வேண்டும்.

ஜப்பானின் வடக்குப் பகுதியில் இருந்த கோயிலில் இரண்டு சகோதரத் துறவிகள் ஒன்றாக வசித்து வந்தனர். மூத்தவர் படித்தவர், தம்பியோ மூடன். அதோடு அவனுக்கு ஒரு கண் மட்டும்தான் இருந்தது.

அங்கு வந்த ஒரு நாடோடித் துறவி அந்த இடத்தில் தங்கிக் கொள்ளலாமா என்று கேட்டார். அங்கிருந்த சகோதரர்களிடம் மேன்மைமிக்க போதனை குறித்து தர்க்கம் செய்ய முறையாக அவர் சவால்விடுத்தார். மூத்த சகோதரர் அன்று அதிகமாகப் படித்துக் களைப்படைந்ததால், தனக்குப் பதிலாக தம்முடைய தம்பியைப் போகச் சொன்னார். 'போ, பேச்சுவார்த்தையில் மௌனத்தைக் கடைப்பிடி' என எச்சரித்தார்.

தம்பியும் புதிதாக வந்த துறவியும் கோயிலுக்குள் சென்று அமர்ந்தனர்.

கொஞ்ச நேரத்திலேயே பயணியாக வந்த துறவி எழுந்து மூத்த சகோதர துறவியிடம் போய்ச் சொன்னார்: 'உங்களுடைய தம்பி அற்புதமான ஆள். அவர் என்னைத் தோல்வியுறச் செய்து விட்டார்.'

'அந்த விவாதங்கள் குறித்து என்னிடம் சொல்லுங்கள்' என்று மூத்தவர் கேட்டார்.

'நல்லது' என்று சொல்லி விவரித்தார் பயணி: 'முதலில், ஞானமடைந்த புத்தரைக் குறிக்கும் விதமாக, நான் ஒரு விரலைக் காட்டினேன். அதற்கு அவர் இரண்டு விரல்களைக் காட்டினார் —புத்தரையும் அவருடைய போதனையையும் குறிப்பிடும் படியாக. நான் புத்தர், அவருடைய போதனை, இசைவான வாழ்வை வாழ்ந்துவரும் அவரைப் பின்பற்றுபவர்கள் ஆகிய வற்றைக் குறிக்கும் விதமாக மூன்று விரல்களைக் காட்டினேன். உடனே அவர் தனது முஷ்டியை எனது முகத்துக்கு முன் ஆட்டி, மெய்யாக உணர்தல் என்ற ஒன்றிலிருந்து வந்ததுதான் மூன்றும் என்பதைச் சுட்டிக் காட்டினார். ஆகவே அவர் வென்று விட்டார். அதனால் இங்கே நான் தங்குவதற்கு எந்த உரிமையும் இல்லை' என்று சொல்லிவிட்டு அந்தப் பயணி போய்விட்டார்.

'எங்கே அந்தப் பயணி?' இளைய சகோதரர் மூத்தவரிடம் கேட்டார்.

'நீ விவாதத்தில் வென்றுவிட்டாய் என்று எனக்குத் தெரிய வருகிறது.'

'வெற்றி ஒன்றுமில்லை. நான் அவரை அடிக்கப் போகிறேன்.'

'என்ன நடந்தது, விவாதத்தை என்னிடம் சொல்' கேட்டார் மூத்தவர்.

'ஏன், எடுத்ததுமே என்னைப் பார்த்து ஒரு விரலைக் காட்டி, எனக்கு ஒரு கண்தான் இருக்கிறது என்று என்னைக் குத்திக்காட்டி அவமானப்படுத்தினார். வந்தவர் புதியவர் என்பதால், மரியாதை கொடுக்க வேண்டும் என நினைத்தேன். ஆகவே அவருக்கு இரண்டு கண்கள் இருக்கின்றன என அவரைப் பாராட்டுவதற் காக இரண்டு விரல்களைக் காட்டினேன். பிறகு மரியாதை யில்லாத அந்தப் பாதகன் மூன்று விரல்களைக் காட்டி, நம் இருவருக்கும் இடையே மூன்று கண்கள் மட்டும்தான் என சூசகமாகச் சொன்னான். எனக்குச் சரியான கோபம் வந்துவிட அவர் முகத்தில் குத்தத் தயாரானேன், அவர் எழுந்து ஓடி விட்டார். அவ்வளவுதான்!'

# 10

## கோபம்

'குருவே, கட்டுப்படுத்த முடியாத அளவுக்கு என்னிடம் கோபம் இருக்கிறது. அதை எப்படி நான் போக்குவது?'

'உன்னுடைய அந்தக் கோபத்தை என்னிடம் காட்டு' என்று கேட்ட குரு பங்கெய், 'இது கேட்பதற்கு வியப்பாக இருக்கிறதே' என்றார். 'இந்தச் சமயத்தில் அது என்னிடம் இல்லை' என்ற மாணவர், 'ஆகவே, இப்போது அதை உங்களுக்கு நான் காட்ட முடியாது' என்றார்.

'சரி அப்போ' என்ற பங்கெய், 'உம்மிடம் இருக்கும்போது அதைக் கொண்டுவந்து என்னிடம் காட்டு' என்றார். 'ஆனால் என்னிடம் அது இருக்கும்போது உடனே அதை எடுத்துக் கொண்டு வரமுடியாதே' என மறுத்தார் அந்த மாணவர். 'எதிர்பார்க்க முடியாத சமயத்தில்தான் அது வருகிறது. மேலும் உங்களிடம் காட்டுவதற்கு முன்பே அது நிச்சயம் காணாமல் போய்விடும்.'

'அப்படியென்றால்' என்ற பங்கெய், 'உனது உண்மையான இயல்பின் ஒரு பகுதியாக நிச்சயம் அது இருக்க முடியாது. அப்படி இருந்தால், எந்தச் சமயத்திலும் நீ அதை என்னிடம் காட்ட முடியும். நீ பிறந்தபோது அது உன்னிடமில்லை. மேலும் உனது பெற்றோர் அதை உனக்குக் கொடுக்கவில்லை. ஆகவே, நிச்சயம் அது வெளியிலிருந்துதான் உனக்குள் வந்திருக்க வேண்டும். எப்போதெல்லாம் கோபம் உனக்குள் மூள்கிறதோ, அப்போதெல்லாம் ஒரு கம்பால் அதை நீ அடி. அது தாங்க முடியாமல் ஓடும்வரை அடி. இதுதான் என் ஆலோசனை' என்றார்.

# 11

## கடவுளை நாடுதல்

ஒரு நதிக்கரையில் முனிவர் ஒருவர் தியானம் செய்து கொண்டிருந்த போது ஓர் இளைஞன் அவரைக் குறுக்கிட்டு, 'குருவே, உங்கள் சீடராக ஆசைப்படுகிறேன்' என்று கேட்டான். 'ஏன்?' எனக் கேட்டார் முனிவர்.

அந்த இளைஞன் ஒரு நிமிடம் யோசித்தான். 'ஏனெனில் நான் கடவுளைக் காண விரும்புகிறேன்' என்றான்.

குரு குதித்தெழுந்து, அவனது கழுத்தின் பிடரியைப் பிடித்து அவனை ஆற்றுக்குள் இழுத்துக் கொண்டுபோய் அவனது தலையை நீருக்குள் அமிழ்த்தினார். ஒரு நிமிடம் அப்படியே அமிழ்த்தி வைத்திருந்தபோது அவன் எட்டி உதைத்துத் தன்னை விடுவித்துக்கொள்ள போராடினான். கடைசியில் குரு அவனை நீரிலிருந்து வெளியே இழுத்துப் போட்டார். அந்த இளைஞன் நீரால் இருமிக்கொண்டு மூச்சிரைத்தான். அவன் ஒருவாறு அமைதியடைந்ததும் அந்தக் குரு பேசினார்: 'சொல், தண்ணீருக்குள் மூழ்கி இருந்தபோது எது முக்கியமாக உனக்குத் தேவைப்பட்டது?'

'காற்று!' என்றான் இளைஞன்.

'ரொம்ப நல்லது' என்ற குரு, 'வீட்டுக்குப் போ. இப்போது காற்று தேவைப்பட்டதைப் போல் கடவுள் தேவைப்படும் போது என்னிடம் திரும்பி வா' என்றார்.

# 12

## வழி எது?

ஆர்வம்கொண்ட துறவி ஒருவர் ஒரு குருவிடம், 'வழி எது?' என்று கேட்டார்.

'உன் கண்களுக்கு முன்னாலேயே அது இருக்கிறது' என்று சொன்னார் குரு.

'ஏன் என்னால் அதைப் பார்க்க முடியவில்லை?'

'காரணம், நீ உன்னை மட்டுமே எண்ணிக்கொண்டிருக்கிறாய்.'

'அப்போ நீங்கள்? அதைப் பார்க்கிறீர்களா?'

'நான் பார்க்கவில்லை', 'நீ பார்க்கிறாய்' என்று சொல்லிக்கொண்டு 'எவ்வளவுக்கு, இரண்டிரண்டாகப் பார்க்கிறாயோ அவ்வளவுக்கு உன் கண்களை மேகம் மறைத்திருக்கும்' என்றார் குரு.

'நானோ, நீயோ இல்லாதபோது ஒருவரால் அதைப் பார்க்க முடியுமா?'

'நானோ, நீயோ இல்லாதபோது அதைப் பார்க்க விரும்புபவர் யார்?'

# 13

## ஒரு கோப்பைத் தேநீர்

மெய்ஜி காலத்தில் *(1868-912)* ஜென்னைப் பற்றித் தெரிந்து கொள்வதற்கு வந்த பல்கலைக்கழகப் பேராசிரியர் ஒருவரை ஜப்பானிய குரு நான்-இன் வரவேற்றார்.

நான்-இன் விருந்தினரின் கோப்பையில் தேநீரை ஊற்றினார். அது நிரம்பிவிட்டது. இருந்தும் அவர் தொடர்ந்து ஊற்றிக் கொண்டே இருந்தார்.

கோப்பை நிரம்பி வழிவதைக் கவனித்த பேராசிரியரால் அதற்கும் மேல் தன்னைக் கட்டுப்படுத்த முடியவில்லை. 'நிரம்பிவிட்டது. இதற்கும் மேல் கொள்ளாது!' என்றார்.

'இந்தக் கோப்பை மாதிரிதான்' என்ற நான்-இன், 'நீங்கள் உங்களை சொந்த கருத்துகளையும் எண்ணங்களையும் கொண்டு நிரப்பி வைத்திருக்கிறீர்கள். முதலில் நீங்கள் உங்கள் கோப்பையைக் காலி செய்யாவிட்டால் நான் எப்படி உங்களுக்கு ஜென்னைக் காட்ட முடியும்?' என்றார்.

14

## இனி கேள்விகள் இல்லை

சமூக நிகழ்ச்சி ஒன்றில் ஜென் குரு ஒருவரைச் சந்தித்தபோது, ஒரு மனநல மருத்துவர் தன் மனதில் இருந்த ஒரு கேள்வியை அந்தக் குருவிடம் கேட்க தீர்மானித்தார்:

'எப்படி நீங்கள் மக்களுக்கு உதவுகிறீர்கள்?' விசாரித்தார் அந்த மருத்துவர்.

'இனிமேலும் கேள்விகள் ஏதும் அவர்கள் கேட்கமுடியாத நிலைக்கு அவர்களைக் கொண்டுவந்துவிடுகிறேன்' என்றார் குரு.

15

## எந்தப் பக்கமும் இல்லை

வடக்கு அல்லது தெற்கு வியட்நாமுக்கு இடையில் நடந்து கொண்டிருக்கும் சண்டையில் யாருக்கு ஆதரவளிக்கப் போகிறீர்கள் என திக் நாட் ஹாங்கிடம் கேட்டபோது, அவரிடமிருந்து வந்த பதில்: 'நான் மையத்தை ஆதரிக்கிறேன்.'

# 16

## இசே கடலில்

இசே கடலில், பத்தாயிரம் அடிகள் ஆழத்திற்குக் கீழே ஒரேயொரு ஒரு கல் கிடக்கிறது;

என்னுடைய கைகள் நனையாமல் அந்தக் கல்லை எடுக்க விரும்புகிறேன்.

அந்தக் கல்லில் ஒரு பெயர் பொறிக்கப்பட்டுள்ளது.

அந்தப் பெயர் என்ன?

அந்தக் கல்லின் ஒருபக்கம் சொல்கிறது,

'நனைய முடியாது.'

கல்லின் இன்னொரு பக்கம் சொல்கிறது,

'காய முடியாது.'

ஏன்?

நீங்கள் இருக்கும் இடத்தில்
உண்மையைக் கண்டுபிடிக்க முடியாவிட்டால்
வேறெங்கு கண்டுபிடிக்கலாம் என்று நினைக்கிறீர்கள்?
– டோஹன் ஜென்ஜி

# இயல் இரண்டு

## மாட்டின் சுவடுகளைக் கண்டறிதல்



見跡

நதிக்கரை நெடுக உள்ள மரங்களின் கீழ்
நான் குளம்படிகளைக் கண்டுபிடிக்கிறேன்!
நறுமணமுள்ள புற்களுக்குக் கீழும்
நான் அதன் குளம்புச் சுவடுகளைப் பார்க்கிறேன்.
வெகுதூரத்திலுள்ள மலைகளில் அவை காணக் கிடைத்தன.
விண்ணைப் பார்க்கும் ஒருவர் மூக்கை
மறைக்க முடியாதது போல,
இனியும் இந்தத் தடயங்களை
மறைக்க முடியாது.

'மாட்டின் குளம்புச் சுவடுகளைக் கண்டவுடன்
தேடலில் உள்ளவர்கள் அவற்றின் பாதையை
விரைவாகத் தொடர வேண்டும்.
தன் மெய்யான சுயத்தைக் கண்டுணர
வெறும் தேடல் போதாது.
ஒரு வழியை, ஒரு மார்க்கத்தை
ஒருவர் கண்டறிந்தாக வேண்டும்.
அந்த வழி உன்னுடைய வழியாக இருக்க வேண்டும்,
மேலும் அது மெய்யான சுயத்துக்கான
அத்தாட்சி பெற்ற வழியாக இருக்க வேண்டும்.
இது போகிற வழியில் ஒரு வழிகாட்டியை ஒரு மெய்யான
ஜென் குருவைக் காண்பதையும் குறிக்கிறது.'

## 17

## குகைப் பாதை

ஒரு சாமுராயின் மகனான ஸெங்கை, எடோவுக்குப் பயணித்து அங்கே பெரிய அதிகாரி ஒருவரின் சேவகனாக ஆனார். அந்த அதிகாரியின் மனைவிமீது அவருக்கு காதல் மலர, அது வெளியே தெரிந்துவிட்டது. தன்னைப் பாதுகாக்க அந்த அதிகாரியைக் கொன்றுவிட்டு, அதிகாரியின் மனைவியைக் கூட்டிக்கொண்டு ஓடிவிட்டார்.

இருவரும் பின்னர் திருடர்களாக மாறிவிட்டனர். ஆனால், அந்தப் பெண்ணுக்குப் பேராசை ரொம்ப அதிகமானதும், ஸெங்கைக்கு வெறுப்பு வளர்ந்தது. கடைசியில், அவளைக் கைவிட்டுவிட்டு மிகத் தொலைவில் இருந்த பூஸன் என்ற பிரதேசத்துக்குச் சென்று அங்கே அலைந்து திரியும் பிச்சைக் காரனாக மாறிவிட்டார்.

தம் கடந்த காலத்தை ஈடுசெய்ய, தம் வாழ்வில் ஏதாவது நல்ல காரியத்தை முடிக்க வேண்டுமென்று ஸெங்கை உறுதி கொண்டார். மலை விளிம்பிலிருந்த செங்குத்தான ஆபத்தான சாலை ஒன்று பலரின் உயிர்போகவும் காயமடையவும் காரணமாக இருக்கிறது என்பதைத் தெரிந்துகொண்டதும், அவர் அந்த மலையில் ஒரு குகைப் பாதையை உருவாக்க உறுதிகொண்டார்.

பகலில் உணவுக்காகப் பிச்சையெடுத்த ஸெங்கை இரவில் அந்தக் குகைப் பாதையைத் தோண்டினார். இப்படி முப்பது ஆண்டுகள் கழிந்தபோது அந்தக் குகைப் பாதை 2,280 அடி நீளம், 20 அடி உயரம், 30 அடி அகலமுள்ளதாக மாறியது.

இந்தப் பாதை முடிவதற்கு இரண்டு ஆண்டுகளுக்கு முன்னர், கொல்லப்பட்ட அதிகாரியின் மகனான திறமையுள்ள வாள்வீரன், ஸெங்கையைக் கொலை செய்து பழிவாங்க எண்ணி அவரைக் கண்டுபிடித்துவிட்டான்.

'என் உயிரை விருப்பத்தோடு உனக்குக் கொடுப்பேன்' என்ற ஸெங்கை, 'என் வேலை முடியும்வரை விடு. இந்த வேலை முடியும் நாளன்றே நீ என்னைக் கொல்லலாம்' என்றார்.

ஆகவே அந்த மகன் அந்த நாளுக்காகக் காத்திருந்தான். பல மாதங்கள் கழிய ஸெங்கை தோண்டிக்கொண்டே இருந்தார். எந்த வேலையும் செய்யாமல் இருந்த அவன் களைத்துவிட்டான். எனவே ஸெங்கை செய்யும் குகை தோண்டும் வேலையில் அவருக்கு உதவ ஆரம்பித்தான். இப்படியே அவருக்கு உதவிக் கொண்டு ஓர் ஆண்டுக்கும் மேல் கழிந்தது. ஸென்கையின் வலிமையான உறுதி, அவர் குணம் ஆகியவற்றால் அவன் ஈர்க்கப்பட்டான்.

கடைசியாக குகைப் பாதை முடிந்தது. மக்கள் அதைப் பயன் படுத்திப் பாதுகாப்புடன் பயணம் செய்ய முடிந்தது.

'இப்போது என் தலையை வெட்டிக்கொள்' என்ற ஸெங்கை, 'என் வேலை முடிந்துவிட்டது' என்றார்.

'என் ஆசிரியரின் தலையை நான் எப்படி வெட்ட முடியும்?' என்ற இளைஞனின் கண்களில் கண்ணீர் வழிந்தது.

## 18

## புரிந்துகொள்ளவில்லை

'உங்களிடம் நீண்ட காலமாக இருந்திருக்கிறேன். ஆனால்
உங்கள் பாணியில் நீங்கள் பார்க்கும் விஷயங்களை இதுவரை
என்னால் உள்வாங்க முடியவில்லை' என்று
ஒரு துறவி எய்மியோவிடம் சொன்னார்.
'புரிந்துகொள்ளவில்லை என்று நீ புரிந்துகொள்!'
என்றார் எய்மியோ.
'நான் புரிந்துகொள்ளவில்லை என்றால், எப்படி நான் எதையும்
புரிந்துகொள்ளமுடியும்?' என்று கேட்டார் துறவி.
'ஒரு பசு தன் கர்ப்பப்பையில் ஒரு யானையைப் பெற்றெடுக்
கிறது, தவிர நீலக்கடல் மஞ்சள் தூசுகளை உருவாக்குகிறது'
எனப் பதிலளித்தார் எய்மியோ.

## 19

## மலைக்கு அப்பால்

முனிவரைப் போல மலையில் வாழ்ந்துகொண்டிருந்த
ஒரு குருவிடம் ஒரு துறவியால்,
'வழி என்பது என்ன?' என்று கேட்கப்பட்டது.
'இந்த மலை எவ்வளவு அழகாக இருக்கிறது'
என குரு பதிலளித்தார்.
'இந்த மலையைப் பற்றி நான் உங்களிடம் கேட்கவில்லை,
வழியைப் பற்றித்தான் கேட்கிறேன்.'
'மகனே, எவ்வளவு தூரம் போனாலும் மலைக்கு அப்பால்
நீ போக முடியாதவரை, வழியையும் அடைய முடியாது'
எனப் பதிலளித்தார் குரு.

20

## இரண்டு முயல்களைத் துரத்துதல்

தற்காப்புக் கலைகள் கற்கும் மாணவர் ஒருவர் ஒரு கேள்வியோடு ஆசிரியரை அணுகினார். 'நான் தற்காப்புக் கலைகள் குறித்த என் அறிவை மேம்படுத்த ஆசைப்படுகிறேன். உங்களிடமிருந்து அதைக் கற்க ஆசைப்படுவதோடு,
இன்னொரு ஆசிரியரோடும் இந்தக் கலையை இன்னொரு பாணியில் கற்க விரும்புகிறேன்.
இந்த யோசனையைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?'
'இரண்டு முயல்களைத் துரத்தும் ஒரு வேட்டைக்காரர் எதையும் பிடிக்கமாட்டார்' என்றார் குரு.

## 21

# ஒருபோதும் திரும்பிப் பார்க்காத மனிதன்

தம் காலத்தில் கூடோ, பேரரசரின் ஆசானாக இருந்தார். இருந்தபோதிலும் பரதேசியைப் போல் தனியாக அலைந்து திரிவது அவருடைய பழக்கம். ஒருமுறை அவர், கலாசார அரசியல் மையமான, அந்தக் காலத்தில் ஜப்பானின் குடிவழிப் பதவி வகித்த படைத் தலைவருடைய ஊரான எடோவுக்குச் செல்லும் வழியில் டேகேனாகா என்ற சின்னக் கிராமத்தை நெருங்கிக் கொண்டிருந்தார். அப்போது மாலைநேரம். கடுமையாக மழை பெய்துகொண்டிருந்தது. கூடோ தெப்பலாக நனைந்துவிட்டார். அவருடைய வைக்கோல் செருப்புகள் பிய்ந்துவிட்டன. அச்சமயம் கிராமத்துக்கு அண்மையிலிருந்த பண்ணைவீடு ஒன்றின் ஜன்னல் கட்டையில் நான்கு அல்லது ஐந்து ஜோடி உலர்ந்த செருப்புகள் இருப்பதைக் கவனித்த கூடோ அவற்றில் ஒன்றை வாங்க முடிவுசெய்தார்.

அவர் மிகவும் நனைந்திருப்பதைப் பார்த்துவிட்டு அவருக்கு செருப்புகளைக் கொடுத்த பெண், இரவு அவரைத் தன் வீட்டில் தங்கிவிட்டுப் போகச் சொன்னாள். கூடோ சம்மதித்து அவளுக்கு நன்றி சொன்னார். அவர் நுழைந்ததும் வீட்டின் பூஜை அறைக்குள் நுழைந்து ஒரு ஜெபத்தை உச்சரித்தார். அதன்பிறகு அந்தப் பெண்ணின் தாய்க்கும், அவளுடைய குழந்தைகளுக்கும் அவர் அறிமுகம் செய்யப்பட்டார். மொத்தக் குடும்பமும் மிகவும் மகிழ்ச்சியற்று இருப்பதைக் கவனித்த கூடோ 'என்ன நேர்ந்தது' எனக் கேட்டார்.

அவரிடம் குடும்பத் தலைவி சொன்னாள்: 'என் கணவன் சூதாடி, குடிகாரர். அவர் ஜெயித்துவிட்டால், குடித்துவிட்டு

மோசமாகத் திட்டுவார். தோற்றுவிட்டால், மற்றவர்களிடம் கடன் வாங்குவார். சமயத்தில் அத்துமீறி குடித்திருந்தால் வீட்டுக்கு வரவேமாட்டார். நான் என்ன செய்வது?'

'அவருக்கு நான் உதவி செய்கிறேன்' என்ற கூடோ, 'இதோ கொஞ்சம் பணம் இருக்கிறது. அதை வைத்து நல்ல ஒயினும் உண்பதற்கு ஏதாவது நல்ல உணவும் வாங்கி வாருங்கள். பிறகு நீங்கள் ஓய்வெடுக்கப் போய்விடுங்கள். பூஜை அறைக்கு முன்பு நான் தியானம் செய்கிறேன்' என்றார்.

நள்ளிரவில் அந்த மனிதன் நல்ல போதையோடு வீட்டுக்குத் திரும்பிய போது, எருமைபோல் உறுமினான்: 'ஏய், வந்துட்டேன். சாப்பிடறதுக்கு ஏதாவது இருக்காடி?' என்றான்.

'என்னிடம் கொஞ்சம் இருக்கிறது' என்றார் கூடோ. 'மழையில் மாட்டிக்கொண்டேன். உங்கள் மனைவி இரவு தங்கிவிட்டுப் போகலாம் என்று அன்போடு சொன்னார். அதற்குப் பதிலாக நல்ல ஒயினையும் மீனையும் வாங்கி வைத்திருக்கிறேன். வேண்டுமென்றால் நீங்கள் சாப்பிடலாம்' என்றார்.

அவன் பரவசப்பட்டான். ஒயினை முழுக்கக் குடித்துவிட்டுத் தரையில் படுத்துவிட்டான். அவனுக்குப் பக்கத்தில் அமர்ந்து கூடோ தியானித்தார்.

காலையில் தூங்கி எழுந்தபோது, முந்தைய இரவு நடந்த விஷயங்கள் அவனுக்கு மறந்துவிட்டன. அப்போதும் அப்படியே தியானத்தில் அமர்ந்திருந்த கூடோவிடம், 'யார் நீ? எங்கிருந்து வந்திருக்கிறாய்?' என்று கேட்டான்.

'நான் கியோட்டோவில் இருக்கும் கூடோ. எடோவுக்குப் போய்க் கொண்டிருக்கிறேன்' என்று பதில் சொன்னார் ஜென் குரு கூடோ.

அந்த மனிதனுக்கு மிகவும் அவமானமாகப் போய்விட்டது. பேரரசரின் ஆசானிடம் மறுபடி மறுபடி மன்னிப்புக் கேட்டான்.

கூடோ சிரித்தார். 'இந்த வாழ்வில் எதுவுமே நிலையானதல்ல. வாழ்க்கை மிகவும் குறுகியது. தொடர்ந்து நீ சூதாடிக் குடித்துக்கொண்டிருந்தால், வேறெதையும் செய்வதற்கு உனக்கு நேரமே கிடைக்காது. உம் குடும்பமும் துயரப்படுவதற்கு

நீயே காரணமாகிவிடுவாய்.'

ஒரு கனவிலிருந்து விழித்ததுபோல் உணர்ந்த அவன், 'நீங்கள் சொல்வது ரொம்ப உண்மை' என்றவன், 'இந்த அற்புதமான படிப்பினைக்கு எதை நான் உங்களுக்குத் திருப்பிக் கொடுக்க முடியும்! நீங்கள் கிளம்பும் போது உங்கள் பொருள்களைக் கொஞ்ச தூரம் தூக்கிக்கொண்டு செல்ல என்னை அனுமதியுங்கள்.'

'அப்படியே ஆகட்டும்' என்று சம்மதித்தார் கூடோ.

இருவரும் வெளியே கிளம்பினர். மூன்று மைல்களைக் கடந்த பிறகு, கூடோ 'திரும்பிப் போ' என அவனிடம் சொன்னார். 'இன்னும் ஒரு ஐந்து மைல் மட்டும்' கூடோ விடம் அவன் கெஞ்சினான். இருவரும் தொடர்ந்தனர்.

'இப்போது நீ திரும்பலாம்' என்றார் கூடோ.

'அடுத்த பத்து மைல்களுக்குப் பிறகு' என அவன் பதிலளித்தான்.

பத்து மைல்களைத் தாண்டியபோது, 'இப்போது நீ போகலாம்' என்று சொன்னார் கூடோ.

'என் வாழ்நாள் முழுவதும் உங்களைத் தொடர்ந்து வரப் போகிறேன்' அந்த மனிதன் பதிலளித்தான்.

ஜப்பானின் நவீன ஜென் குருமார்கள், கூடோவின் புகழ் பெற்ற வழித்தோன்றலான ஒரு குருவின் வம்சாவளியில் வந்தவர்கள்தாம். அவர் பெயர் மு-னான்—'ஒருபோதும் திரும்பிப் பார்க்காத மனிதன்' என்று பொருள்.

## 22

## மௌனத்தின் சப்தங்கள்

நான்கு துறவிகள் இரண்டு வாரங்கள் பேசாமல் தியானம் செய்வதென முடிவெடுத்தனர். முதல் நாள் இரவில் அங்கிருந்த மெழுகுவர்த்தி மினுமினுத்து அணைந்தே போய்விட்டது.

'ஆ, மெழுகுவர்த்தி அணைந்துவிட்டது' என்றார் முதல் துறவி. இரண்டாவது துறவி, 'நாம் பேசக்கூடாது இல்லையா?' என்றார். மூன்றாவது துறவி, 'நீங்கள் இருவரும் ஏன் மௌனத்தைக் கலைத்து விட்டீர்கள்?' என்றார். நான்காவது துறவி சிரித்துக் கொண்டே, 'ஹா, நான் ஒருவன் மட்டும்தான் பேசவே இல்லை' என்றார்.

## 23

## இங்கே எவ்வளவு சீடர்கள் இருக்கிறார்கள்?

மாபெரும் ஜென் குரு லின் சி. அவருடைய மடாலயங்களைப் பார்க்க அரசர் வந்தபோது, அங்கே குருவோடு பத்தாயிரத்துக்கும் மேலான துறவிகள் இருப்பதை அறிந்து வியப்படைந்தார். அங்கு துல்லியமாக எவ்வளவு துறவிகள் இருக்கிறார்கள் என்பதைத் தெரிந்துகொள்ள விரும்பிய அரசர், 'உங்களிடம் எவ்வளவு சீடர்கள் இருக்கிறார்கள்?' என்று கேட்டார். லின் சி, 'அதிகபட்சம் நான்கு அல்லது ஐந்து பேர் இருக்கலாம்' என்றார்.

## 24

## மூன்று வகையான சீடர்கள்

டோகுகாவா காலத்தின் பிற்பகுதியில் கெட்டன் என்ற பெயர் கொண்ட ஜென் குரு வாழ்ந்துவந்தார். அவர் வழக்கமாகச் சொல்வார்: 'மூன்று வகையான சீடர்கள் இருக்கிறார்கள்: மற்றவர்களுக்கு ஜென்னைக் கற்றுக் கொடுப்பவர் ஒரு வகையினர்; கோயில்கள், புண்ணியத் தலங்களைப் பராமரிப்பவர்கள் ஒரு வகையினர்; பிறகு அரிசி மூட்டைகள், ஆடைகளைத் தொங்கவிடும் கொக்கிகள் மூன்றாமவர்.'

காஸன் இதே கருத்தை வெளிப்படுத்தினார். அவர் பாடம் கேட்ட குருவான டெகிசுய் மிகவும் கண்டிப்பானவர். சமயத்தில் அவர் காஸனை அடிக்கவும் செய்வார். மற்ற மாணவர்கள் இதுபோன்ற கற்றலைத் தாங்க முடியாமல் போய்விடுவார்கள்.

கூடவே இருந்த காஸன் சொல்கிறார்: 'மோசமான சீடர் ஆசிரியரின் செல்வாக்கைப் பயன்படுத்துகிறார். சுமாரான சீடர் ஆசிரியரின் கருணையை மெச்சுகிறார். ஒரு நல்ல சீடர் ஆசிரியரின் ஒழுக்கத்தின் மூலம் தன்னைப் பலமானவனாக ஆக்கிக் கொள்கிறார்.'

# 25

## பயனற்ற துன்பமும் அவநம்பிக்கையும்

ஒரு மக்கள் குழுவிடம் ஜென் குருவான பங்கெய் ஒரு காலத்தில் சொன்னார்: 'எனக்கு ஞானமடையும் ஆர்வம் முதன்முறையாக வந்தபோது, என்னால் ஒரு ஞானம்பெற்ற குருவைக் கண்டு பிடிக்க முடியவில்லை. அதனால் எல்லா வகையான துறவுப் பழக்க வழக்கங்களையும் கடைப்பிடித்து என் உடலை வீணடித்தேன். சில சமயம் மனிதர்களுடனான எல்லாத் தொடர்புகளையும் துண்டித்துவிட்டுத் தனித்திருப்பேன். சில சமயம் காகிதத்தால் ஒரு அறையைக் கட்டி அதற்குள் அமர்ந்து கொள்வேன், அல்லது திரைசீலைகளைக் கட்டித் தொங்கவிட்டு இருட்டறையில் அமர்வேன். என் கால்கள் புண்பட்டுச் சீழ்பிடித்து நிரந்தரத் தழும்புகளாகும்வரை படுக்காமல் பத்மாசனமிட்டு அமர்ந்திருப்பேன்.

'பிறகு இந்தந்த மாகாணத்தில் இந்தந்த இடத்தில் ஒரு குரு இருக்கிறார் என்று தெரிந்தவுடன் அவரைச் சந்திப்பதற்காக நேராகச் செல்வேன். பல ஆண்டுகள் கழித்து ஜப்பானில் என் காலடித் தடம் படாத இடமே இல்லை என்று ஆனது. இதுவெல்லாம் ஒரு ஞானமடைந்த குருவைக் காணாததால் நேர்ந்தது.

'பின்னர் ஒரு நாள் சட்டென்று என் மனம் திறந்துகொண்டது. முதன்முதலாக அத்தனை ஆண்டு உழைப்பும் வலியும் எவ்வளவு பயனற்றவை என்பதை உணர்ந்தேன், அமைதியடைந்தேன்.

'உங்களைச் சிரமப்படுத்திக் கொள்ளாமல் தற்போதைய வாழ்வில் நிறைவு காண்பது எப்படி என்று இப்போது உங்களுக் கெல்லாம் சொல்கிறேன். ஆனால், நீங்கள் முழுமையாக நம்ப மறுக்கிறீர்கள். ஏனெனில், நீங்கள் உண்மையில் தீவிரமாக வில்லை.'

## 26

# பன்ஸோவுடைய வாளின் ருசி

மடாஜூரோ யாக்யூ, பிரபலமான வாள்வீரர் ஒருவரின் மகன். தான் எதிர்பார்க்கும் அளவுக்கு மகனின் வாள்வீச்சு இல்லை என்பதைத் தந்தை கண்டார். மேலான திறமையை எட்டும் அளவுக்கு அவனுடைய உழைப்பு இல்லையென்பதால் அவனோடு தனக்குள்ள உறவை நிராகரித்தார்.

ஆகவே, மடாஜூரோ ஃப்டரா மலைக்குச் சென்று அங்கிருந்த பிரபலமான வாள்வீரனான பன்ஸோவைக் கண்டான். ஆனால் பன்ஸோ அவன் தந்தை சொன்ன முடிவையே உறுதிப்படுத்தினார். 'என் வழிகாட்டலில் நீ வாள் வீரனாக ஆசைப்படுகிறாயா?' என்று கேட்ட பன்ஸோ, 'அதற்குரிய தகுதிகளை உன்னால் பூர்த்தி செய்ய முடியாது' என்றார்.

'ஆனால், நான் கடுமையாக உழைத்தால், சிறந்த திறமை சாலியாக ஆவதற்கு எனக்கு எவ்வளவு ஆண்டுகள் தேவைப் படும்?' என்று பிடிவாதமாகக் கேட்டான் அந்த இளைஞன்.

'உன் வாழ்க்கை முழுதும் தேவைப்படும்' என்று சொன்னார் பன்ஸோ.

'என்னால் அவ்வளவு காத்திருக்க முடியாது' என்றான் மடாஜூரோ. 'நீங்கள் எனக்குப் பயிற்சி கொடுத்தால் எந்தவித மான உழைப்பையும் மேற்கொண்டு வெற்றிபெற நான் தயாராக இருக்கிறேன். நான் உங்களுடைய அர்ப்பணிக்கப்பட்ட சேவகனாக மாறினால், எவ்வளவு காலம் தேவைப்படும்?'

'ஓ, பத்து ஆண்டுகள் ஆகலாம்' என்று சொல்லி பன்ஸோ கொஞ்சம் இளகினார்.

'என் தந்தைக்கு வயதாகிவிட்டது. நான் அவரைக் கவனித்துக் கொள்ள வேண்டும்' என்ற மடாஜுரோ, 'இன்னும் அதி தீவிரமாக நான் உழைத்தால், எனக்கு எவ்வளவு காலம் வேண்டும்?' என்று கேட்டார்.

'ஓ, முப்பது ஆண்டுகள் ஆகலாம்' என்றார் பன்ஸோ.

'என்ன இது?' என்று கேட்டான் மடாஜுரோ. 'முதலில் பத்து ஆண்டுகள் என்று சொன்னீர்கள், இப்போது முப்பது ஆண்டுகள் என்கிறீர்கள். வெகு சீக்கிரத்தில் அந்தக் கலையை நான் கற்க எந்தக் கடும் உழைப்பையும் மேற்கொள்வேன்!' என்றான்.

'நல்லது' என்ற பன்ஸோ, 'அப்படியென்றால், நீ என்னோடு எழுபது ஆண்டுகள் கழிக்க வேண்டும். உன்னைப்போன்ற அவசரத்தில் இருப்பவன் கற்பது அபூர்வம்' என்றார்.

'ரொம்ப நல்லது' என்ற இளைஞன், கடைசியாக தனது பொறுமையின்மைக்காகவே தன்னைக் கடிந்துகொள்கிறார் என்பதைப் புரிந்துகொண்டு, 'நான் ஒப்புக்கொள்கிறேன்' என்றான்.

மடாஜுரோ ஒருபோதும் வாள்சண்டை குறித்துப் பேசக் கூடாது; வாளையும் அவன் ஒருபோதும் தொடக்கூடாது என்று பன்ஸோ சொல்லிவிட்டார். குருவுக்காக சமைத்தான், அடுப்படிச் சாமான்களைக் கழுவினான், அவருக்கான படுக்கையை விரித்தான், தாழ்வாரத்தைச் சுத்தப்படுத்தினான், தோட்டத்தைப் பராமரித்தான், எல்லாவற்றையும் செய்தவனுக்கு வாள்சண்டைக் கலை குறித்து ஒரு வார்த்தைகூட சொல்லப்படவில்லை.

மூன்று ஆண்டுகள் கழிந்தன. அப்போதும் மடாஜுரோ அப்படியே உழைத்தான். தன் எதிர்காலத்தைக் குறித்து யோசிக்கும் போது கவலைப்பட்டான். எந்தக் கலைக்காகத் தன் வாழ்க்கையை அர்ப்பணித்தானோ அதை இன்னும் தொடங்கக்கூட இல்லை.

ஆனால் ஒருநாள் பன்ஸோ மடாஜுரோவுக்குப் பின்னால் வந்து அவனுக்கு மரக்கத்தியால் பயங்கரமான ஓர் அடியைக் கொடுத்தார்.

அடுத்த நாள், மடாஜுரோ சோறு சமைத்துக் கொண்டிருந்த

போது, எதிர்பாராமல் பன்ஸோ மீண்டும் அவன்மேல் பாய்ந்தார்.

அதற்குப் பிறகு, மடாஜுரோ இரவும் பகலும், எதிர்பார்க்க முடியாத தாக்குதல்களிலிருந்து தன்னைத் தற்காத்துக் கொண்டான். பன்ஸோவுடைய வாளின் ருசி குறித்து அவன் நினைத்துப் பார்க்காமல் ஒரு கணமும் கழிந்ததில்லை.

அவன் மிகவும் விரைவாகக் கற்றுக்கொள்ளவே, அவனுடைய குருவின் முகத்தில் புன்னகையை வரவழைத்தான். அந்த நாட்டில் மடாஜுரோ மாபெரும் வாள்சண்டை வீரனாகிவிட்டான்.

# 27

## சரியும் தவறும்

சில வாரங்களுக்குத் தனித்திருந்து மேற்கொள்ளும் தியானத்தில் பங்கெய் ஈடுபட்டிருந்தபோது, ஜப்பானின் பல பகுதிகளிலிருந்து வந்த மாணவர்கள் அதில் கலந்துகொண்டனர். அப்படிப்பட்ட கூட்டங்களில் ஒன்றில் ஒரு மாணவன் திருடிப் பிடிபட்டான். இந்த விவகாரத்தைப் பங்கெய்யிடம் சொல்லி அந்தக் குற்றவாளியை நீக்கவேண்டும் என்று கோரிக்கை வைத்தனர். பங்கெய் அந்தப் புகாரை நிராகரித்துவிட்டார்.

பின்னர் அதே மாணவன் இதுமாதிரியான திருட்டில் பிடிபட, மீண்டும் பங்கெய் அந்த விஷயத்தை அலட்சியம் செய்தார். இதனால் கோபப்பட்ட மற்ற மாணவர்கள், அந்தத் திருடனை நீக்க வேண்டும், அப்படிச் செய்யவில்லையென்றால் தாங்கள் அனைவரும் இந்தக் கூட்டத்திலிருந்து வெளியேறிவிடுவோம் எனச் சொல்லி ஒரு விண்ணப்பத்தைக் கொடுத்தனர்.

பங்கெய் அந்த மனுவைப் படித்த பிறகு அனைவரையும் தமக்கு முன்னால் வரவேண்டும் என சொன்னார். 'நீங்கள் எல்லாம் விவேகமான சகோதரர்கள்; எது சரி எது தவறு என உங்களுக்குத் தெரியும். நீங்கள் விரும்பினால்; இங்கிருந்து எங்கு வேண்டுமானாலும் சென்று கற்கலாம். ஆனால், பரிதாபமான இந்தச் சகோதரரால் தவறு எது, சரி எது என்று கூடத் தெரிந்துகொள்ள முடியவில்லை. இவருக்கு நான் போதிக்கவில்லை என்றால் யார். போதிப்பார்கள்? நீங்கள் அனைவரும் போய் விட்டால்கூட நான் அவரை இங்கே வைத்திருப்பேன்.'

திருடும் அந்தச் சகோதரரின் வழிந்த கண்ணீர்த் துளிகள் அவர் முகத்தை சுத்தப்படுத்தின. திருடும் ஆசை அனைத்தும் அப்படியே மறைந்துவிட்டது.

# 28

## கல்மனம்

சீன ஜென் ஆசிரியரான ஹோகன், கிராமப்புறத்திலுள்ள ஒரு சிறிய கோயிலில் தனியாக வாழ்ந்துகொண்டிருந்தார். ஒரு நாள் பயணம் செய்துகொண்டிருந்த நான்கு துறவிகள் அங்கு வந்து அவருடைய கோயிலின் முற்றத்தில், குளிர் காய்வதற்கு மரங் களை எரித்துக் கணப்பு போடலாமா எனக் கேட்டனர்.

அந்த நேரத்தில் நெருப்புப் பற்ற வைக்க முயற்சி செய்கையில், அவர்களிடையே அக உண்மை, புற உண்மை பற்றி விவாதம் நடந்துகொண்டிருக்க அதை ஹோகன் கேட்டார். அவர் அவர்களோடு இணைந்துகொண்டு சொன்னார்: 'இங்கே ஒரு பெரிய கல் இருக்கிறது. அது உங்கள் மனதில் உள்ளே இருக்கிறதா அல்லது அது வெளியே இருப்பதாக நீங்கள் நினைக்கிறீர்களா?'

அவர்களில் ஒரு துறவி பதிலளித்தார்: 'பௌத்தக் கண்ணோட் டத்தில், ஒவ்வொன்றும் மனதின் புறவயமாக்கலே. ஆகவே இந்தக் கல் என் மனதின் உள்ளே இருக்கிறது என்று நான் சொல்வேன்.'

'உங்கள் மனதில் அப்படி ஒரு கல்லைச் சுமந்து திரிந்தால், உங்கள் தலை கனக்குமே' என்றார் ஹோகன்.

## 29

## டோஹனுடைய பயணம்

சீடர் டோஹனிடம் வேறொரு ஆசிரமத்துக்கு ஒரு நீண்ட பயணத்தை மேற்கொள்ளும்படிச் சொல்லப்பட்டது. அவர் இந்தப் பயணத்துக்குப் பல மாதங்கள் ஆகும் என்பதால், தன் படிப்பு பாதிப்படையும் என்று மனக்கவலையில் இருந்தார். அவர் தன்னோடிருந்த மூத்த மாணவரும் நண்பருமான சோகனிடம், 'இந்தப் பயணத்தில் நீயும் என்னுடன் வருவதற்கு அனுமதி கேள். எனக்குத் தெரியாத பல விஷயங்களிருக்கின்றன; நீயும்கூட வந்தால் அவற்றை நாம் கலந்துரையாடலாம். நாம் பயணம் செய்யும் போதே நான் கற்றுக்கொள்வேன்' என்றார்.

'நல்லது' என்ற சோகன், 'ஒரே ஒரு கேள்விக்குப் பதில் சொல்: நீ பசியோடு இருக்கும்போது நான் சோறு தின்றால் உனக்கு என்ன திருப்தி கிடைக்கும்? நீ நொண்டியாக இருக்கும் போது நான் கை, கால்களை வீசி மகிழ்ச்சியாக நடந்துபோனால் உனக்கு என்ன ஆறுதல் கிடைக்கும்? உன்னுடைய சிறுநீர்ப்பை நிரம்பியிருக்கும் போது நான் சிறுநீர் கழித்தால் உனக்கு என்ன நிவாரணம் கிடைக்கும்?'

# 30

## பாலைவனத்தை ஆழ்ந்து சிந்தித்தல்

சிறிய கூண்டுவண்டியில் மூன்று பேர் சென்று கொண்டிருந்த போது, ஒரு மனிதன் மலையின் உச்சியிலிருந்து சஹாரா பாலைவனத்தில் மறையும் சூரியனை ஆழ்ந்து பார்த்துக் கொண்டிருந்தான்.

'அவன் நிச்சயமாக இடையனாக இருக்கவேண்டும். மந்தையிலிருந்து காணாமல் போன ஒரு ஆட்டை கண்டுபிடிக்க அவன் முயன்றுகொண்டிருக்கிறான்' என்றார் முதல் ஆள்.

'இல்லை, அவன் ஏதோ ஒன்றைத் தேடிக்கொண்டிருப்பதாக நான் நினைக்கவில்லை, குறிப்பாக, மறையும் சூரியனை அல்ல — அது உன் பார்வையைக் குழப்பும். ஒரு நண்பருக்காக அவன் காத்திருக்கிறான் என்றே நான் நினைக்கிறேன்.'

'நான் பந்தயம் கட்டுகிறேன், ஞானமடைய பார்த்துக் கொண்டிருக்கும் புனித மனிதன் அவன்' விளக்கினார் மூன்றாவது நபர்.

அவர்கள் அந்த மனிதன் என்னதான் செய்து கொண்டிருக்கிறான் என்பதை விவாதிக்க இந்த விவாதம் இன்னும் தீவிரமடைய, அந்த விவாதம் மூவருக்குமிடையே கிட்டத்தட்ட சண்டை போடும் நிலைக்குப் போனது. இறுதியாக, யார் சொன்னது உண்மை எனக் கண்டறிய, மூவரும் மலை உச்சிக்கு ஏறி அந்த மனிதனிடமே கேட்க வேண்டுமென முடிவெடுத்தனர்.

‘நீங்கள் உங்கள் ஆட்டைத் தேடிக்கொண்டிருக்கிறீர்களோ?’ முதல் ஆள் கேட்டார்.

‘இல்லை, என்னிடம் எந்த மந்தையும் இல்லை’

‘அப்படியானால் யாரோ ஒருவருக்காகத்தான் நீங்கள் காத்திருக்கிறீர்கள்’ உரிமையோடு சொன்னார் இரண்டாவது ஆள்.

‘நான் பாலைவனத்தில் தனியாக வசிக்கும் ஒரு தனிமனிதன்’ என பதில் வந்தது.

‘நீங்கள் பாலைவனத்தில் வாழ்ந்துகொண்டிருக்கிறீர்கள், அதுவும் தனிமையில். பிறகென்ன நீங்கள் கடவுளைத் தேடும் ஒரு புனிதர், அதற்காக நீங்கள் தியானம் செய்கிறீர்கள் என்றே நாங்கள் நம்புகிறோம்!’ உறுதியாக சொன்ன மூன்றாவது ஆள், அவருடைய முடிவில் மனநிறைவு அடைந்தார்.

‘பூமியில் இருக்கும் ஒவ்வொன்றுக்கும் ஒரு விளக்கம் தேவையா? ஆகவே எனக்கு என்னை விளக்க விடுங்கள்: நான் இங்கு வெறுமனே சூரியன் மறைவதைத்தான் பார்த்துக்கொண்டிருக்கிறேன்: நமது வாழ்வுக்கு ஓர் அர்த்தம் கொடுப்பதற்கு இது போதாதா?’

# 31

## தண்ணீர் மெதுவாகச் சூடேறி திடீரெனக் கொதிக்கும்

இயற்கையான நிகழ்வுகளின் ஓட்டத்தை நம்மால் நிச்சயமாகக் கட்டாயப்படுத்த முடியாது; ஒவ்வொன்றும் விஷயமும் அதனுடைய 'சரியான' நேரத்தில் நடக்கிறது. இந்தத் தொடர்ச்சி படிப்படியானது. எனவே எதிர்பார்ப்புகளோடு நாம் மிகவும் பொறுமையில்லாமல் இருப்பதால், அது நமக்கு மெதுவாகத் தோன்றலாம். ஆனால் இந்த மாற்றம் உடனடியாகத் தனக்குரிய இடத்தை எடுத்துக்கொள்கிறது.

அதைப்போலவே, ஞானம் அடைவதைக் கட்டாயப்படுத்த முடியாது. ஆனால் அதை ஊக்கப்படுத்தலாம்; சரியாகச் சொல்வதென்றால், நன்கு உகந்த சூழ்நிலையில் இருக்கும் போது ஒரு விதை இயற்கையாக முளைவிட்டு வளர்கிறது.

## 32

## சீடராக மாறிய திருடன்

ஒரு நாள் மாலையில் ஷிச்சிரி கோஜுன் தியானம் செய்து கொண்டிருந்தபோது கூர்மையான வாளோடு ஒரு திருடன் நுழைந்து, 'பணம் அல்லது உன் உயிர் இரண்டில் ஒன்றைக் கொடு' என்றான்.

ஷிச்சிரி அவனிடம், 'என்னைத் தொந்தரவு செய்யாதே. அந்த இழுப்பறையில் இருக்கும் பணத்தை எடுத்துக்கொள்' என்று சொல்லிவிட்டு, மீண்டும் தம் தியானத்தைத் தொடர்ந்தார்.

கொஞ்ச நேரத்துக்குப் பிறகு தம் தியானத்தை நிறுத்திவிட்டு அவனைக் கூப்பிட்டுச் சொன்னார்: 'எல்லாவற்றையும் எடுத்துக் கொண்டு போய்விடாதே. நாளைக்கு வரி செலுத்தக் கொஞ்சம் பணம் தேவை.'

அந்தத் திருடன் பெருமளவிலான பணத்தை எடுத்துக் கொண்டு புறப்படத் தயாரானான். 'நீ ஒரு பரிசை வாங்கிக் கொள்ளும் போது சம்பந்தப்பட்டவருக்கு நன்றி சொல்ல வேண்டும்' என்றார் ஷிச்சிரி. திருடன் நன்றி சொல்லிவிட்டுப் போய்விட்டான்.

சில நாள்களுக்குப் பிறகு அந்தத் திருடன் சிக்கிக்கொண்டு மற்ற திருட்டுகளோடு ஷிச்சிரி வீட்டில் திருடியதையும் ஒப்புக்கொண்டான். ஷிச்சிரியை சாட்சியாக அழைத்தபோது அவர் சொன்னார்: 'எனக்குத் தெரிந்தமட்டிலுமாவது இவன் திருடனல்ல. நான்தான் அவனுக்குப் பணம் கொடுத்தேன். அவன் அதற்காக எனக்கு நன்றி சொன்னான்.'

அந்தத் திருடன் சிறைவாசத்தை முடித்துவிட்டு ஷிச்சிரியிடம் சென்று அவருடைய சீடர் ஆனான்.

# 33

## கடைசிக் குட்டு

சின்ன வயதிலிருந்தே டாங்கென், ஆசிரியர் செங்கையிடம் படித்தான். அவனுக்கு இருபது வயதானபோது மற்றவர்களோடு படிப்பதற்காகப் கிளம்புகிறேன் என ஆசிரியரிடம் கேட்டான். ஆனால், செங்கை அனுமதி கொடுக்கவில்லை. ஒவ்வொரு முறையும் டாங்கென் அதையே சொல்ல, செங்கை அவன் தலையில் குட்டுவார்.

கடைசியில், செங்கையிடம் இனிமையாகப் பேசி அனுமதி வாங்கித் தாருங்கள் என டாங்கென் தனது மூத்த சகோதரரிடம் கேட்டான். அவரும் அதைச் செய்துவிட்டு டாங்கெனிடம் சொன்னார்: 'எல்லாம் செய்தாயிற்று. உன் புனித யாத்திரைக் கான ஏற்பாடுகள் எல்லாவற்றையும் செய்துவிட்டேன். உடனே புறப்படலாம்.'

தனக்கு அனுமதி தந்ததற்காக செங்கைக்கு நன்றி சொல்ல டாங்கென் போனான். இன்னொரு குட்டு குட்டிப் பதில் கொடுத்தார் குரு.

டாங்கென் இதைத் தன் அண்ணனிடம் சொன்னபோது, அண்ணன், 'என்ன ஆயிற்று? அனுமதி தந்துவிட்டு அவர் எப்படித் தன் முடிவை மாற்றிக்கொள்ளலாம். நான் என்னவென்று அவரைக் கேட்கிறேன்' என்று ஆசானைப் பார்த்துக் கேட்டான்.

செங்கை, 'நான் என் அனுமதியை ரத்து செய்யவில்லை. அவன் தலையில் கடைசியாக ஒரு குட்டு குட்டினேன். அவன் திரும்பும்போது ஞானத்தை அடைந்திருப்பான். அப்போது என்னால் அவனைக் கண்டித்துக் குட்ட முடியாது' என்றார்.

## 34

## விடாது துரத்துதல்

'போதிதர்மர் மேற்கிலிருந்து இங்கு வருவதற்கான நோக்கம் என்ன?' என்று யாரோ கேட்டார்கள். குரு, 'அவருக்கு ஒரு நோக்கம் ஏதேனும் இருந்திருந்தால், அவரால் தன்னைக்கூடக் காப்பாற்றிக் கொண்டிருக்க முடியாது!' என்று சொன்னார். 'அவருக்கு நோக்கமேதும் இல்லையென்றால், இரண்டாம் மூதாதையர் தர்மத்தை அடைந்தது எவ்வாறு?' என்றார் கேள்வி கேட்டவர். குரு, 'அடைவது என்றால் அடைவது அல்ல' என்றார். 'அது அடைவது அல்ல' என்று பொருள்பட்டால்? என்று கேள்வி கேட்டவர், 'அடைவது அல்ல என்று நீங்கள் சொல்வதற்கு என்ன அர்த்தம்?' என்று கேட்டார்.

குரு சொன்னார்: 'எதையோ தேடி உன் மனம் எல்லாவற்றையும் துரத்துவதை உன்னால் அடக்க முடியவில்லை என்று நினைக்கிறேன்.

இதனால்தான் மூதாதை சொன்னார், நம்பிக்கையற்றவர்கள் தங்கள் தலையைத் தேடுவதற்கு, தங்கள் தலையையே பயன்படுத்துவார்கள்! நீ இப்போது உன் ஒளியைத் திருப்பி உன்மீதே வீசிக்கொண்டு ஒளிர வேண்டும், வேறு எங்கோ போய்த் தேடிக்கொண்டிருக்கக்கூடாது. பிறகு நீ புரிந்துகொள்வாய் உடலிலும் மனத்திலும் நீ மூதாதைகளையும், புத்தர்களையும் ஒத்தவன், வேறுபட்டவனல்ல; அங்கே செய்ய ஒன்றுமில்லை என்று புரிந்துகொள்வாய். அதைச் செய், தர்மத்தை அடைவது பற்றி அப்புறம் நீ பேசலாம்' என்றார்.

35

## முமோனின் ஜென் எச்சரிக்கைகள்

விதிமுறைகளுக்கும் ஒழுங்குமுறைகளுக்கும் கட்டுப்படுவது என்பது நீங்கள் உங்களையே கயிறில்லாமல் கட்டிப் போடுவது போல. சுதந்திரமாக, கட்டுப்பாடின்றி வாழ்வது என்பது சமயத்துக்கு முரணானதாகவும் பேய்த்தனமான களியாட்டமாகவும் இருக்கும். மனத்தை உணர்ந்து, அதனைத் தூய்மையாகவும் அமைதியாகவும் வைத்திருப்பது, சும்மா இருப்புப் பொய்யான ஜென். காரண காரியத் தொடர்பை மனம் போனபடி அலட்சியப்படுத்துவது என்பது படுகுழியில் விழுவதே. இருள் ஏதுமின்றி மூலாதாரமான விழிப்புணர்வில் இருப்பது என்பது ஒரு நுகத்தடியோடு சங்கிலியை அணிந்து கொள்வதைப் போன்றது. நல்லது, தீயதைப் பற்றிச் சிந்தித்தல் என்பது சொர்க்கத்திலும் நரகத்திலும் இருப்பதைப் போன்றது. புத்தரையும் தர்மத்தையும் பற்றிய கருத்துகளைக் கொண்டு இருப்பது இரண்டு இரும்பு மலைகளுக்கு இடையே சிறைபட்டிருப்பதைப் போன்றது. எண்ணங்கள் கிளம்பும் போது அதைப் பற்றி விழிப்படைதல் என்பது மனதோடு ஆடும் விளையாட்டு. அமைதியாக அமர்ந்து கவனத்தைக் குவிக்கப் பழகுவது சாத்தான்களின் செயல்பாடு. நீங்கள் முன்னேறினால், சாரத்தை இழந்து விடுவீர்கள். நீங்கள் பின்னே சென்றால், உண்மையை எதிர்ப்பீர்கள். முன்னேயும் போகாமல், பின்னேயும் போகாமல் இருந்தால் நீங்கள் சுவாசிக்கும் பிணம்.

*நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள், இப்போது எனக்குச் சொல்லுங்கள்?* இந்த வாழ்வில் மெய்யுணர்வை முழுமையாக அடைவதற்கு உங்களால் இயன்ற உச்சபட்ச முயற்சியைச் செய்யுங்கள். உங்களை காலமெல்லாம் கர்மாவில் (முன்வினைப் பயனில்) சுழன்று கொண்டிருக்கவிடாதீர்கள்.

## அழைப்பைப் பின்பற்றுதல்

ஆமா சாமி

உங்கள் போராட்டங்களுக்கும், உங்கள் மெய்யுணர்தலுக்கும் சாட்சியாக இருப்பவர் உங்களுடைய அனுபவமிக்க அறிவுரையாளர் அல்லது குரு. அவரே அத்தாட்சியாக இருந்து உங்களுக்கு உறுதிப்படுத்துகிறார். அவ்வாறான சாட்சியமும் அத்தாட்சி அளித்தலும் அவசியம். உங்களால் உங்களுடைய உள்தூண்டுதலையும் போராட்டத்தையும் மற்றவர்களிடம் பகிர்ந்து கொள்ள முடியாது; உங்களுடைய ஆத்ம தேடலையும் மெய்யுணர்வையும் பற்றிப் பேச முடியாது. அது உங்களுடைய மனதில் உள்ள இரகசியம். அதை உங்களால் முழுமையாகவும் தெளிவாகவும் சொல்லக்கூட முடியாது. அனுப்வமிக்க உங்களுடைய அறிவுரையாளரும் குருவும் மட்டுமே சாட்சியாகவும் பார்வையாளராகவும் இருக்க முடியும்; அவர்களாலும் உங்கள் இதயத்திலுள்ளதை முழுமையாகப் பார்த்துவிட முடியாது. ஆனால், நீங்கள் உங்கள் மனதிடமும் இதயத்திடமும் உள்ள தொடர்பிலிருந்து, உங்களால் உங்களுக்கு விடப்படும் அழைப்பைப் பின்தொடர முடிந்தால், அப்புறம் ஒட்டுமொத்த உலகமும் உங்களுக்கு நண்பர்களாகவும், வழிகாட்டிகளாகவும் ஆகும்.

இறுதிவரை நீங்கள் வழிகாட்டப்படுவீர்கள். இதை நீங்கள் அருளென்றோ, கடவுளென்றோ சொல்லிக்கொள்ளலாம். உங்களுடைய விதி, முடிவுவரை வழிகாட்டப்பட்டு மரணத்தில் முழுமை அடைவீர்கள்.

உங்கள் இதயம் சொல்வதைக் கேட்டு, அழைப்பைப் பின் தொடர்வது உங்களையே நீங்கள் வந்தடைந்து உங்களைச் சேர்வதும் உங்களது அத்தாட்சியுள்ள சுயமாக ஆவதுமாகும். இந்த அழைப்பு கடைசியில் உங்களுக்கு, நீங்கள் 'மரணம்

அடைவதற்கு' இட்டுச் செல்லும்; உங்களை வெறுமையில், படுபாதாளத்தில், அறியாத மர்மத்தில் நீங்கள் உங்களைக் கைவிட வைக்கும். இதுதான் நம் அனைவரின் பெரும்பயமும் பதற்றமும்.

ஒன்றுமற்ற வெறுமையும் இருளும் நம் முன்னே இருக்கின்றன. மரணமும் அடியற்ற படுபாதாளமும் நமது ஓய்விடமாகின்றன. ஆனால் இப்படி சூன்யத்திலும் வெறுமையிலும் ஒருவர் தன்னைக் கைவிடுவது உண்மையில் முடிவற்றதற்கும் இறப்பற்றதற்கும் ஒருவரை விழிப்புகொள்ளச் செய்யும். இது அழிவற்றதில் உறைகொள்ள வைப்பதாக, முடிவற்ற திறந்தவெளியில் ஒருவர் தன் வீட்டைக் கண்டுபிடிப்பதாக ஆகும்; இது ஒருவர் தன் சுயத்தைக் கட்டற்ற திறந்த வெளியாகவும் மர்மமாகவும் உணர்வது. அனைத்துலகமும் இந்தக் கட்டற்ற திறந்தவெளியில் உங்கள் இதய-மனதில் தங்கள் வீட்டைக் காணும். ஆனால் முதலில் 'மரணமும்' — படுபாதாளமும் இருக்கின்றன.

# இயல் மூன்று

## மாட்டைக் காணுதல்



見牛 三

நான் வானம்பாடியின் பாடலைக் கேட்கிறேன்.
சூரியன் வெதுவெதுப்பாக இருக்கிறது.
காற்று சாந்தமாக இருக்கிறது.
கரை நெடுக பச்சைப் பசேலென்று இருக்கின்றன
வில்லோ மரங்கள்.
இங்கே எந்த மாடும் ஒளிந்துகொள்ள முடியாது!
அந்தப் பிரமாண்டமான தலையையும்,
அதன் கம்பீரமான கொம்புகளையும்
எந்த ஓவியனால் வரைய இயலும்?

'மாட்டைக் கண்டுபிடித்தாயிற்று.
தேடலில் இதுவொரு முக்கிய கட்டம்.
ஒருவர் தன்னையும், மெய்யான யதார்த்தத்தையும்
அனுபவம்கொள்ள வைக்கும் கட்டம். இது முதல்
விழிப்புணர்வு அல்லது ஞானம் (சட்டோரி).
மெய்மையை உணராமல் நம்பிக்கையோடு காலமெல்லாம்
தேடிக்கொண்டிருப்பது பயனற்றது.
ஆனால் ஜென்னின் இந்த ஞானம்
தொடக்கம் மட்டுமே—முடிவல்ல.'

# 36

## புத்தநிலை வெகுதூரமில்லை

காஸனைச் சந்திக்க வந்த ஒரு பல்கலைக்கழக மாணவர் அவரிடம் கேட்டார்: 'நீங்கள் பைபிளைப் படித்திருக்கிறீர்களா?'

'இல்லை, வாசித்துக் காட்டு' என்றார் காஸன்.

அந்த மாணவர் பைபிளை விரித்துப் புனித மத்தேயுவின் நற்செய்தியிலிருந்து படித்தார்: 'உடைக்காக நீங்கள் கவலைப் படுகிறதென்ன? காட்டுப் பூக்கள் எப்படி வளருகிறதென்று கவனித்துப் பாருங்கள்; அவை உழைக்கிறதுமில்லை, நூற்கிறது மில்லை. என்றாலும் சாலமோன் முதலான சர்வ மகிமை பெற்றவர்களாலும் அவற்றில் ஒன்றைப் போலாகிலும் உடுத்தியிருந்ததில்லை என்று உங்களுக்குச் சொல்கிறேன்... ஆகையால், நாளைக்காகக் கவலைப்படாதீர்கள்; நாளைய தினம் தனக்கு என்ன வேண்டுமென்று பார்த்துக்கொள்ளும். அந்தந்த நாளுக்கு அதனதன் பாடு போதும்.'

'இந்த வார்த்தைகளைச் சொன்னவரை ஞானமடைந்தவராக நான் கருதுகிறேன்' என்றார் காஸன்.

மாணவர் தொடர்ந்து படித்தார்: 'கேளுங்கள், உங்களுக்குக் கொடுக்கப்படும்; தேடுங்கள், கண்டடைவீர்கள்; தட்டுங்கள், உங்களுக்குத் திறக்கப்படும்; ஏனென்றால், கேட்கிறவன் பெற்றுக்கொள்கிறான்; தேடுகிறவன் கண்டடைகிறான்; தட்டுகிறவனுக்குத் திறக்கப்படும்.'

காஸன், 'பிரமாதம். இதைச் சொன்னவர் புத்தநிலையிலிருந்து ரொம்பத் தூரத்தில் இல்லை' என்றார்.

## முழுமையானதொரு விழிப்பூட்டல்

ஆமா சாமியிடம் ஒருவர் கிறிஸ்தவத்துக்கும் பௌத்தத்துக்கும் இடையிலான வேறுபாடுகளை விளக்கமாகச் சொல்லுமாறு கேட்டார். நான் எழுதத் தயாராகப் பேனாவைக் கையில் வைத்திருந்த போது ஆமா சாமி, 'இயேசுவைப் போலிருங்கள், புத்தரைப் போலிருங்கள்' என்று மட்டுமே சொன்னார். இது ஒருவேளை விளையாட்டாகத் தோன்றலாம். ஆனால் எனக்கு இது முழுமையானதொரு விழிப்பூட்டலாக இருந்தது. இந்தப் பெரிய, அருமையான உண்மையின் முன்னால் அபிப்ராயங்களும் அலட்டல்களும் சலிப்பூட்டுபவையாக இருந்தன.

- ஆன் ஸ்டெஃபி
2003ஆம் ஆண்டில் கிரெய்ல்வில்லில் நடந்த ஜென் தியான நிகழ்ச்சிக்குப் பிறகு.

## 37

## நான் உனக்குத் துரோகம் செய்யவில்லை

குரு காஸனுக்குக் கீழிருந்த ஒரு துறவி, சுற்றியிருந்த எல்லா ஜென் கோயில்களுக்கும் சென்றார். ஆனால் அவருக்கு ஏற்றதாக எதையும் அவரால் கண்டுபிடிக்க முடியவில்லை. எவ்வாறாயினும், காஸன் ஒரு மகத்தான குரு என்று அவனிடம் பரவலாக அடிக்கடி சொல்லப்பட்டது. ஆகவே அந்தத் துறவி திரும்ப வந்து காஸனை நேரில் கண்டு, 'உங்களுக்கு ஜென் பற்றிய தனிச்சிறப்பான புரிதல் இருக்கிறது. நீங்கள் ஏன் அதை என்னிடம் வெளிப்படுத்தவில்லை?' என்று கேட்டார்.

காஸன், 'நீ சோறு பொங்கியபோது, நான் நெருப்பைப் பற்றவைக்கவில்லையா? நீ உணவைப் பரிமாறிய போது, என் கிண்ணத்தை உன்னிடம் நீட்டவில்லையா? உன் எதிர்பார்ப்புகளை நான் எப்போது ஏமாற்றினேன்?' என்று கேட்டார்.

துறவி ஞானம் அடைந்தார்.

# 38

## சொல்லற்ற சொல்

குரு ரோஸோவிடம் ஒரு துறவி,
'சொல்லற்ற சொல் என்பது என்ன?' என்று கேட்டார்.
ரோஸோ, 'எங்கே இருக்கிறது உங்கள் வாய்?' என்று கேட்டார்.
'எனக்கு அப்படி ஒன்றும் இல்லை!' என்றார் துறவி.
'அப்படியென்றால் எப்படி நீங்கள் சாப்பிடுவீர்கள்?' என்று
கேட்டார் ரோஸோ.

அந்தத் துறவியிடம் பதிலேதும் வரவில்லை.

39

## வழி எது?

ஜோஷு, நான்செனிடம் ஆர்வத்தோடு,

'வழி எது?' என்று கேட்டார்.

'சாதாரண மனம்தான் வழி' என்று பதிலளித்தார் நான்சென்.

'அதை நோக்கி என்னைச் செலுத்த வேண்டுமா, இல்லையா?' என்று கேட்டார் ஜோஷு. 'நீ அதை நோக்கித் திரும்பினால் அதற்கு எதிர்த் திசையில் போவாய்' என்றார் நான்சென். 'நான் அதை நோக்கிப் போகாவிட்டால் அதுதான் பாதை என்று நானெப்படித் தெரிந்துகொள்வது?' என்றார் ஜோஷு.

'தெரிந்துகொண்டிருப்பதையோ, தெரியாதிருப்பதையோ சார்ந்ததில்லை வழி. அறிவு ஒரு மாயை; அறியாமை வெறுமை யான நனவு மனம். எல்லாச் சந்தேகத்துக்கும் அப்பால் நீங்கள் உண்மையான பாதையை, உண்மையில் அடையும் போது, அது ஆகாயத்தைப் போல பரந்து எல்லையற்றதாக இருப்பதைக் காண்பீர்கள். அதை எப்படிச் சரி அல்லது தவறென்னும் தளத்திலிருந்து பேசுவது?'

இந்தச் சொற்களைக் கேட்டவுடன்
ஜோஷு ஞானம் அடைந்தார்.

# 40

## ஆவியை விரட்டுதல்

ஓர் இளம் மனைவி நோய்வாய்ப்பட்டுச் சாகும் தறுவாயில் இருந்தாள். 'நான் உங்களை மிகவும் நேசிக்கிறேன்' என்று அவள் தன் கணவனிடம் சொல்லி, 'உங்களைவிட்டுப் பிரிய நான் விரும்பவில்லை. என்னைவிட்டு வேறொரு பெண்ணிடம் நீங்கள் போய்விடக் கூடாது. அப்படிச் செய்தால், நான் ஒரு ஆவியாகத் திரும்பி வருவேன். உங்களுக்குத் தீராத தொல்லை யைத் தருவேன்' என்றாள்.

விரைவிலேயே அவள் இறந்துவிட்டாள். அந்தக் கணவன் முதல் மூன்று மாதங்கள்வரை மனைவியின் கடைசி விருப்பத்துக்கு மரியாதை கொடுத்தார். ஆனால், அதன்பிறகு இன்னொரு பெண்ணைச் சந்தித்த அவர், அவளிடம் காதலில் விழுந்தார். இருவரும் திருமணம் செய்துகொள்வதாக நிச்சயித்தனர்.

நிச்சயதார்த்தம் முடிந்ததும் ஒவ்வொரு இரவிலும் ஓர் ஆவி அந்த ஆணிடம் தோன்றி தன் சத்தியத்தைக் கடைப்பிடிக்க வில்லை எனக் குற்றம் சாட்டியது. அந்த ஆவி புத்திசாலியாகவும் இருந்தது. அவருக்கும் அவருடைய புதிய காதலிக்கும் இடையே என்னென்ன நடந்தன என்று மிகச் சரியாக அவரிடம் சொல்லும். தம் வருங்கால மனைவிக்கு எப்போதாயினும் அவர் பரிசு கொடுத்தால், அந்த ஆவி அதுபற்றி விவரமாக விவரிக்கும். அந்த ஆவி இதுகுறித்த உரையாடல்களைக்கூட திரும்பத் திரும்பச் சொல்லும். இதனால் எரிச்சலுற்ற அந்த மனிதனால் தூங்கக்கூட முடியவில்லை. சிலர் இந்தப் பிரச்சினையைக் கிராமத்துக்கு அருகில் இருக்கும் ஒரு ஜென் குருவிடம் சொல்லுங்கள் என அவருக்கு அறிவுரை சொன்னார்கள். கடைசியில், விரக்தி யடைந்த அந்த பரிதாபமான மனிதர் உதவிக்காக அந்தக் குருவிடம் சென்றார்.

'உங்களுடைய முன்னாள் மனைவி இறந்து ஆவியாக மாறிவிட்டதால் நீங்கள் செய்யும் ஒவ்வொன்றையும் அவள் தெரிந்துகொண்டிருக்கிறாள்' என்று சொன்ன குரு, 'நீங்கள் என்ன செய்தாலும் அல்லது சொன்னாலும், அன்புக்குரிய உங்கள் வருங்கால மனைவிக்கு எதைக் கொடுத்தாலும் அந்த ஆவி அதைத் தெரிந்து வைத்திருக்கிறது. அது ஒரு புத்திசாலியான ஆவியாக இருக்க வேண்டும். உண்மையில், நீங்கள் அந்த ஆவியை மெச்ச வேண்டும். அடுத்த முறை அந்த ஆவி வரும்போது அதனிடம் பேரம் பேசுங்கள். உனக்கு நன்றாகத் தெரியும் உன்னிடமிருந்து மறைத்துவைக்க எதுவும் என்னிடம் இல்லை. மேலும் நான் கேட்கும் ஒரு கேள்விக்கு நீ பதிலளித்து விட்டால், எனது நிச்சயதார்த்தத்தை ரத்துசெய்துவிட்டுத் தனியாக இருந்துவிடுகிறேன் என ஆவியிடம் சொல்லுங்கள்.'

'என்ன கேள்வியை அவளிடம் நான் கேட்க வேண்டும்?' கேட்டார் அந்த மனிதர்.

குரு பதிலளித்தார்: 'ஒரு கைப்பிடி அளவு சோயா பீன்ஸு களை வைத்துக்கொண்டு, மிகச் சரியாக என் கையில் எவ்வளவு பீன்ஸுகள் இருக்கின்றன என்று அவளிடம் கேளுங்கள். அவளால் உங்களுக்குப் பதில் சொல்ல முடியவில்லை என்றால், ஆவி வெறும் கற்பனைதான் என நீங்கள் தெரிந்துகொள்ள முடியும். அதோடு உமக்கு இனி இதுபோன்ற தொந்தரவுகள் வராது.'

அடுத்த நாள் இரவில் அந்த ஆவி தோன்றியபோது அவர் அவளைப் புகழ்ந்து உனக்கு எல்லாம் தெரியும் என்று அவளிடம் சொன்னார்.

'உண்மைதான்' பதிலளித்த ஆவி, 'நேற்று ஒரு ஜென் குருவைப் பார்த்திருக்கிறீர்கள் என்றும் எனக்குத் தெரியும்.'

'உனக்கு இந்தளவுக்குத் தெரியும் என்றால்' என்றவன், 'என் இந்தக் கையில் எத்தனை பீன்ஸுகள் வைத்திருக்கிறேன் என்று சொல் பார்க்கலாம்!' என்று கேட்டார்.

அந்தக் கேள்விக்குப் பதில் சொல்ல அங்கு எந்த ஆவியும் இல்லை.

# 41

## பணியாரத்தின் கதை

இளைஞனாக இருந்த காலத்தில் துறவியாக மாறுவதற்கு முன்பு, குரு ஜுங் சின் பரம ஏழையாக இருந்தார். தாவோ வூ என்ற மடாலயத்தின் குரு புத்த விகாரத்துக்கு அடுத்திருந்த இடத்தில் அவருக்கு ஒரு சிறு குடிசையைக் கட்டிக் கொடுத்தார்.

ஜுங் சின் மிகவும் நன்றிகொண்டு, ஒவ்வொரு நாளும் தான் தயாரிக்கும் பத்து பணியாரங்களைப் பரிசாக குருவுக்குக் கொடுத்துவந்தார். ஒவ்வொரு நாளும், அந்தப் பணியாரங்களை வாங்கிக்கொள்ளும் தாவோ வூ அவற்றிலிருந்து ஒன்றை எடுத்து ஜுங் சினுக்கே கொடுப்பதோடு, 'இந்த ஒன்றை உனக்குப் பரிசளிக்கிறேன். உன் மகன்களும் உன் மகன்களின் மகன்களும் வளத்தோடு வாழ நான் வாழ்த்துகிறேன்!' என்றார் தாவோ வூ.

இந்த வாழ்த்து ஜுங் சினுக்கு ஆனந்தமாக இருந்தது.

'இதன் அர்த்தம் என்ன?' என்று தனக்குள்ளேயே யோசித்தவர், 'நான் பணியாரங்களை அவருக்கு அளித்தேன். ஆனால் ஒவ்வொரு சமயத்திலும் அவர் அவற்றிலிருந்து ஒன்றைத் தனது சொந்த பரிசைப் போல எனக்குத் திருப்பிக் கொடுக்கிறாரே!' கடைசியில், தாவோ வூவிடமே இதுகுறித்து நேரடியாகக் கேட்டார். அப்போது குரு, 'நீ எனக்கு ஒரு பரிசைக் கொடுத்தாய்; நான் உனக்கு ஒரு பரிசு கொடுத்தேன். அதனால் என்ன உனக்கு?' என்று பதிலளித்தார்.

அதைக் கேட்டதும், ஜுங் சின் ஞானம் அடைந்தார். கூடவே துறவறத்திலும் நுழைந்தார்.

## 42

# உனது சொந்த பொக்கிஷத்தை திற

டய்ஜு சீனாவில் இருந்த குரு பாஸோவைப் பார்க்கப் போயிருந்தார். பாஸோ கேட்டார்: 'என்ன தேடுகிறாய்?'

'ஞானம்' என்றார் டய்ஜு.

'உன்னிடமே ஒரு சொந்த பொக்கிஷம் இருக்கிறது. நீ ஏன் வெளியில் தேடுகிறாய்?' என்று பாஸோ கேட்டார்.

டய்ஜு விசாரித்தார்: 'எங்கே இருக்கிறது என் பொக்கிஷம்?'

பாஸோ பதில் சொன்னார்: 'நீ எதைக் கேட்கிறாயோ அதுவே உன் பொக்கிஷம்.'

டய்ஜுவுக்கு ஞானம் கிடைத்துவிட்டது. அதற்குப் பிறகு அவருடைய நண்பர்களிடம், 'உங்கள் சொந்த பொக்கிஷத்தைத் திறந்து, அதிலுள்ளவற்றைப் பயன்படுத்துங்கள்' என்று வலியுறுத்தினார்.

## 43

## எனது தர்மத்திற்கு அதிகச் செலவாகும்

ஒருமுறை ஜென் குருவான ஹியாங் போங்கை அணுகிய ஒரு மாணவர், 'குருவே எனக்குத் தர்மத்தைச் சொல்லித் தாருங்கள்' என்றார். ஹியாங் போங், 'மன்னித்துக்கொள், என் தர்மம் அதிகச் செலவு பிடிக்கக்கூடியது' என்றார்.

'எவ்வளவு செலவாகும்?' என்றார் மாணவர்.

'உன்னால் எவ்வளவு தர முடியும்?' என்று கேட்டார் ஹியாங் போங்.

அந்த மாணவர் தம் சட்டைப்பையிலிருந்து சில நாணயங் களை எடுத்து, 'என்னிடம் இவ்வளவுதான் இருக்கிறது' என்றார்.

'ஒரு மலையளவுக்குத் தங்கத்தைக் குவித்துத் தந்தாலும் என் தர்மத்துக்கு அதைவிடக் கூடுதல் செலவாகும்' என்றார் ஹியாங் போங். அதனால் மாணவர் ஜென்னைத் தனியாகப் பயிலப் போய்விட்டார்.

சில மாதங்கள் கடுமையான ஜென் பயிற்சிக்குப் பிறகு அதே மாணவர் ஹியாங் போங்கிடம் மீண்டும் வந்து, 'குருவே, உங்களுக்காக நான் எதையும் செய்கிறேன், உங்கள் அடிமையாக இருக்கிறேன், என் உயிரையும் தருகிறேன். தயவுசெய்து எனக்குச் சொல்லித் தாருங்கள்' என்றார்.

ஹியாங் போங், 'நீ ஓராயிரம் உயிர்களை எனக்குக் கொடுத்தாலும், என் தர்மம் அதைவிடவும் அதிகச் செலவு பிடிக்கும்' என்றார். மிகவும் மனமுடைந்த மாணவன் மீண்டும் திரும்பிப் போய்விட்டார்.

பல மாதங்கள் கடும் பயிற்சிக்குப் பிறகு மாணவர் மீண்டும் திரும்பிவந்து, 'நான் என் மனதைத் தருகிறேன், இப்போது சொல்லித் தருவீர்களா?' என்று கேட்டார்.

ஹியாங் போங், 'ஒரு நாற்றமடிக்கும் குப்பைத்தொட்டி உன் மனம். அதனால் எனக்கு ஒரு பயனும் இல்லை. நீ பத்தாயிரம் மனங்களைத் தந்தாலும், அப்போதும் என் தர்மம் இன்னும் விலை உயர்ந்ததாக இருக்கும்' என்றார்.

மீண்டும் கடும்பயிற்சி செய்த பிறகு அந்த மாணவர், சில காலத்துக்குப் பிறகு ஒட்டுமொத்தப் பிரபஞ்சமும் சூன்யமாக உள்ளதைப் புரிந்துகொண்டார். குருவிடம் திரும்பவும் வந்தவர், 'இப்போது உங்களுடைய தர்மத்துக்கு எவ்வளவு செலவாகும் என்று புரிந்துகொண்டேன்' என்றார்.

'எவ்வளவு செலவாகும்?' என்று கேட்டார் ஹியாங் போங்.

'ஹோ!!!' என்று கத்தினார் மாணவர்.

'இல்லை, அதைவிட அதிகம் செலவாகும்' என்றார் ஹியாங் போங்.

இந்த முறை அந்த மாணவர் கிளம்பும் போது மிகவும் குழம்பி, ஆழ்ந்த மன வருத்தத்தில் இருந்தார். மகத்தான விழிப்புணர்வை எட்டும்வரை குருவைப் பார்ப்பதில்லை என்று உறுதி எடுத்துக்கொண்டார்.

இறுதியில் அந்த நாளும் வந்தது. மாணவர் திரும்பி வந்தார். 'குருவே, இப்போது எனக்கு உண்மையிலேயே புரிகிறது. வானம் நீலம், புல்லோ பச்சை' என்றார்.

'அல்ல, அல்ல, அல்ல' என்ற ஹியாங் போங், 'என் தர்மம் அதைவிட உயர்ந்தது' என்றார்.

இதைக் கேட்டவுடன் கடும் கோபமடைந்த மாணவர், 'எனக்கு ஏற்கெனவே புரிந்துவிட்டது. எனக்கு உங்கள் தர்மம் தேவையில்லை. நீங்கள் அதை எடுத்து உங்களுடைய குண்டியில் சொருகிக்கொள்ளுங்கள்!' என்றார்.

ஹியாங் போங் சிரித்தார். அது மாணவரை மேலும் கோபப்படுத்தியது. மாணவர் அறையைவிட்டு வெளியே திரும்பிப் போக இருந்தார். அவர் குருவின் அறைக்கு வெளியே

கால் வைக்கும்போது, அவரை அழைத்த ஹியாங் போங்,

'ஒரு நிமிடம் பொறு' என்றார். மாணவர் தலையைத் திருப்பிப் பார்த்தார்.

'என் தர்மத்தைத் தொலைத்துவிடாதே' என்றார் ஹியாங் போங்.

இந்தச் சொற்களைக் கேட்டவுடன்
ஞானம் அடைந்தான் மாணவர்.

## 44

## உண்மையானவை எதுவுமில்லை

யமவோகா டெஷ்ஷு இளம் மாணவராக இருந்தபோது ஜென்னைக் கற்க ஒவ்வொரு குருவாகத் தேடிப் போய்க் கொண்டிருந்தார்.

ஷோகோகூ கோயிலின் டோகுவான் குருவைச் சந்திக்க சென்றார்.

அவரிடம் தாம் அடைந்ததைக் காட்ட விரும்பி அவர் சொன்னார்:

'மனம், புத்தர், உணர்ச்சிகொண்ட உயிரினங்கள், எதுவுமே உண்மை இல்லை. உண்மையான இயல்பின் நிகழ்வுகள் அனைத்தும் சூன்யமாகவே இருக்கின்றன. மெய்யுணர்தலும் இல்லை, மாயத்தோற்றமும் இல்லை; ஞானியும் இல்லை, சராசரியும் இல்லை; கொடுப்பதற்கு எதுவுமில்லை, வாங்குவதற்கும் எதுவுமில்லை' என்றார்.

டோகுவான், அமைதியாகப் புகைபிடித்துக் கொண்டிருந்தார். ஒன்றும் சொல்லவில்லை. திடீரென்று அவர் தன் புகைக் குழலால் யமவோகாவை ஓங்கி அடித்தார்.

இந்தச் செய்கை அந்த இளைஞனைக் கோபப்படுத்தியது.

'உண்மையானவை எதுவுமில்லை என்றால்' என்ற டோகுவான், 'இந்தக் கோபம் எங்கிருந்து வந்தது?' என்று கேட்டார்.

# 45

## புத்தரின் போதனைகள்

மூத்தவரான டிங், லின்-சியிடம் கேட்டார்:

'குருவே, புத்தரின் போதனைகளின் மாபெரும் அர்த்தம் என்ன?'

தனது இருக்கையிலிருந்து கீழே வந்த லின்-சி, டிங்கை அறைந்து, தள்ளிவிட்டார். அதிர்ந்து போன டிங் அப்படியே அசைவற்று நின்றார். பக்கத்திலிருந்த துறவி ஒருவர்,

'டிங், ஏன் நீங்கள் தலைவணங்கவில்லை?' என்று கேட்டார்.

அந்த கணத்தில் டிங் மாபெரும்
ஞானத்தை அடைந்தார்.

## 46

## என் மனதை அமைதிப்படுத்தும்

போதிதர்மர் சுவரைப் பார்த்து அமர்ந்திருந்தார்.

ஒரு கையை வெட்டிக்கொண்ட இரண்டாவது மூதாதையர் வெண்பனியில் நின்றுகொண்டிருந்தார்.

அவர், 'உங்களது சீடரின் மனம் இன்னும்கூட அமைதியாக வில்லை. குருவே தயவுகூர்ந்து என் மனதுக்கு சாந்தி கொடுங்கள்' என்று கேட்டார்.

'உன் மனதை இங்கே கொண்டுவா. அதற்கு நான் அமைதி படுத்துகிறேன்' என்று பதிலளித்தார் போதிதர்மர்.

'எங்கும் தேடிவிட்டேன். ஆனால் நான் அதைக் கண்டேன் இல்லை' இரண்டாவது மூதாதையர் சொன்னார்.

'அப்படியென்றால் நான் அதற்கு அமைதி கொடுத்து விட்டேன்' என்றார் போதிதர்மர்.

## 47

## ஏனோவின் நல்லதும் தீயதும்

ஆறாவது மூதாதையான ஏனோ, துறவி மியோவால் டயூரெய்மலைவரை பின்தொடரப்பட்டார். மியோ வருவதைப் பார்த்த மூதாதை தான் பெற்ற, புனித அங்கியையும் கிண்ணத்தையும் ஒரு பாறைமீது வைத்து மியோவிடம் சொன்னார்: 'இந்த அங்கி நம்பிக்கையைக் குறிக்கிறது. இதற்கு வலுக்கட்டாயமாகப் போராட வேண்டுமா? இவற்றை இப்போது நீ எடுத்துக் கொள்ளலாம்' என்றார். மியோ கிண்ணத்தையும், அங்கியையும் நகர்த்தி எடுக்கப் பார்த்தார். ஆனால் அவை மலையெனக் கனத்தன. அவரால் அவற்றை நகர்த்த இயலவில்லை. தயக்கத்தோடும் நடுக்கத்தோடும் மியோ மூதாதையிடம், 'நான் ஞானத்துக்காக வந்திருக்கிறேன். அங்கிக்காக அல்ல. தயவு செய்து எனக்கு ஞானம் அளியுங்கள்' என்றார். மூதாதை, 'உன் பெற்றோர் பிறப்பதற்கு முன்பே இருந்த உன்னுடைய உண்மையான முகம் என்ன? எல்லா ஆய்ந்தறிதல்களுக்கும், நல்லது தீயது எனும் இருமைகளுக்கு அப்பாலும் உன் நிஜ முகம் (அதாவது உண்மையான மெய்யான சுயம்) என்ன?' என்றார்.

அந்தக் கணத்தில் உடல் முழுக்க வியர்த்துப்போன மியோ விழிப்புணர்வடைந்தார்.

மியோ அழுதபடி வணங்கி, 'ஒரு நிமிடத்துக்கு முன் நீங்கள் தந்த பாடத்துக்கும் (ஜென்) உங்கள் இரகசிய சொற்களுக்கும் அப்பால் ஏதாவது முக்கியத்துவம் வாய்ந்தது இருக்கிறதா அல்லது இல்லையா?' என்று கேட்டார்.

மூதாதை, 'நான் உனக்குச் சொன்னது இரகசியமே அல்ல. நீ உன் மெய்யான சுயத்தை உணர்ந்துவிட்டால், ஜென் ஆழம்

உன்னுடையதுதான்' என்றார்.

மியோ, 'நான் ஒபாயிடம் பிற துறவிகளோடு இருந்த போது என் மெய்யான சுயம் எது என்று நான் ஒருபோதும் உணர்ந்து கொள்ளவில்லை.

சூடானதையும் ஜில்லென்று இருப்பதையும் மனிதன் தண்ணீரைச் சுவைத்துப் பார்த்துத் தெரிந்துகொள்வதைப் போல இப்போது நீங்கள் என் அறியாமை என்னும் மேகங்களை விலக்கி, எனக்கு அதை உணர்த்திவிட்டீர்கள். இப்போதிருந்து நீங்களே என் குரு!' என்றார்.

மூதாதை, 'நம் இருவருக்குமே ஒபாய் ஆசிரியராக இருக்கிறார். உன் மெய்யான சுயத்தைப் பாதுகாத்துக்கொள்' என்றார் ஏனோ.

# 48

## டோஸானின் அறுபது அடிகள்

டோஸான் உம்மோனைக் காணச் சென்றார். 'எங்கிருந்து வந்திருக்கிறாய்?' என்று உம்மோன் டோஸானிடம் கேட்டார்.

டோஸான், 'சாடோ கிராமத்திலிருந்து' என்றார்.

உம்மோன் கேட்டார்: 'கோடைக் காலத்தில் எந்த மடத்தில் நீ இருந்தாய்?'

டோஸான் சொன்னார்: 'ஏரியின் தெற்குப் பக்கமுள்ள ஹோஜி கோயிலில்.'

'எப்போது அங்கிருந்து கிளம்பினாய்?' என்று கேட்டார் உம்மோன். எவ்வளவு நேரம் இதுபோன்ற உண்மையான தகவல் விளக்கங்களை டோஸான் தொடர்ந்துகொண்டிருப்பார் எனத் தெரிந்துகொள்ள அவர் விரும்பினார்.

'ஆகஸ்ட், 25,' பதிலளித்தார் டோஸான்.

உம்மோன் சொன்னார்: 'இந்தத் தடியால் உனக்கு அறுபது அடிகள் கொடுத்திருக்க வேண்டும், ஆனால் இன்று உன்னை மன்னிக்கிறேன்.'

அடுத்த நாள் டோஸான் தலைகுனிந்தபடி உம்மோனிடம் கேட்டார்: 'நேற்றைக்கு அறுபது அடிகளைத் தராமல் என்னை மன்னித்தீர்கள், ஆனால் எந்த வகையில் நான் தவறு செய்தேன் என்று இன்னும் எனக்கு புரியவில்லை.'

டோஸானின் உயிர்ப்பில்லாத மறுமொழிகளைக் கேட்டு கடிந்துகொண்ட உம்மோன் சொன்னார்: 'நீ உதவாக்கரை. நீ வெறுமனே ஒரு மடத்திலிருந்து மற்றொரு மடத்துக்கு அலைகிறாய்' என்றார்.

உம்மோனின் பேச்சு முடியும் முன்பே
டோஸான் விழிப்புணர்வடைந்தார்.

49

## காஸ்யபரின் கொடிமரம்

ஆனந்தா, மகா காஸ்யபரிடம், 'புத்தர் அடுத்த வாரிசான உங்களுக்கு அதற்கு அடையாளமான தங்கச் சரிகைகொண்ட அங்கியைக் கொடுத்தார் என்று தெரியும். வேறு எதையெல்லாம் கொடுத்தார்?' என்று கேட்டார்.

'ஆனந்தா' என்றார் காஸ்யபர்.

'ஆம்!' என்றார் ஆனந்தா.

'வாசலில் இருக்கும் கொடிமரத்தைக் கீழே இறக்கு' என்றார் காஸ்யபர்.

இதைக் கேட்டதும்
ஆனந்தா விழிப்புணர்வு அடைந்தார்.

## 50

# இதோ, வாத்து வெளியே இருக்கிறது!

லு கென் என்ற பெரிய அதிகாரி ஒருமுறை சான் குருவான நான்-சுவானிடம் ஒரு கேள்வியைக் கேட்டார்.

'பழைய காலத்தில் சிறந்த பண்புள்ள ஒருவர் தம் கண்ணாடிக் குடுவைக்குள் ஒரு வாத்தை வளர்த்துவந்தார். அந்த வாத்து பெரிதாக வளர்ந்துவிட்டதால் அதை எப்படி வெளியே எடுப்பது என அவருக்குத் தெரியவில்லை' என்றார்.

'அந்த வாத்தைக் காயப்படுத்தாமல் அல்லது குடுவையை உடைக்காமல் அதைக் குடுவையிலிருந்து வெளியே எடுக்க ஏதாவது உபாயம் உங்களுக்குத் தெரியுமா?' என்று கேட்டார்.

'ஓ, லு கென்!' என்று சட்டென்று குரல் கொடுத்தார் குரு.

'சொல்லுங்கள்' லு கென் தாமதம் இல்லாமல் பதில் சொன்னார்.

'பாருங்கள்' கூவிய நான் சுவான்,

'இதோ, வாத்து வெளியே வந்துவிட்டது!'

# 51

## வெறுமையை எப்படி எடுத்துக்கொள்வது

தன்னுடைய தேர்ச்சியடைந்த துறவி ஒருவரிடம், 'வெற்றிடத்தை (சூன்யம்) உன்னால் பிடிக்க முடியுமா?' என்று கேட்டார் செக்கோ.

'முடியும் குருவே' என்று பதில் சொன்னார் அவர்.

'எப்படிச் செய்வாயென்று எனக்குக் காட்டு.'

அந்த துறவி தம் கையை விரித்துச் சட்டென்று வெற்றிடத்தை இறுக்கமாகப் பிடித்தார்.

செக்கோ, 'இதுதானா வெற்றிடத்தைப் பிடிக்கும் வழி? நீ எதையும் பிடிக்கவில்லை' என்று சொன்னார்.

'உங்கள் வழியைச் சொல்லுங்கள்' என்று கேட்டார் துறவி.

குரு சீடரின் மூக்கை இறுகப் பிடித்துக் கடுமையாக இழுத்தார். இதைக் கண்டு வியப்படைந்து கத்தினார் துறவி,

'நீங்கள் என் மூக்கை ரொம்பவும் கடுமையாக இழுத்துப் பிடித்து உண்மையில் காயப்படுத்திவிட்டீர்கள்!' என்றார்.

'இதுதான் வெற்றிடத்தை நன்றாகப் பிடிக்கும் வழி' என்றார் குரு.

## 52

## உருவற்ற ஒருவர் யார்?

தோண்டப்படாத கிணறு ஒன்றில்
ஓடாத தண்ணீர்
ஊற்றில் இருந்து குமிழியிடுகிறது;
அங்கே, உருவமும் நிழலுமற்ற ஒருவர்
தண்ணீர் இறைத்துக்கொண்டிருக்கிறார்
யாரந்த ஒருவர்?

# இயல் நான்கு

## மாட்டைப் பிடித்தல்



四 得牛

பயங்கரமான போராட்டத்துக்குப் பிறகு,
நான் அதைக் கைப்பற்றுகிறேன்.
அதன் மகத்தான மன உறுதியும் வலிமையும்
தீர்ந்து போகாதவை.
மலைச் சிகரத்தின் பனி படர்ந்த மேகங்களுக்கு
அப்பாலுள்ள மேட்டு நிலத்துக்குப் பாய்கிறது.
அல்லது ஊடுருவ முடியாத மலை இடுக்கில் அது நிற்கிறது.

‘தேடுபவன் மாட்டைப் பிடிக்கிறான்,
விடுவித்துக்கொள்ள மாடு முயல்கிறது.
பார்த்தால் மட்டும் போதாது,
மெய்ம்மையை ஒருவர் தொட்டு
அனுபவித்துணர வேண்டும்.’

## 53

# இறக்கும் நேரம்

ஜென் குரு இக்கியூ சின்னப் பையனாக இருந்தபோதே மிகவும் புத்திசாலியாக இருந்தார். அவருடைய ஆசிரியர் விலை உயர்ந்த தேநீர்க் கோப்பையை வைத்திருந்தார். அது அரிதான தொரு பழங் கலைப்பொருள். எதேச்சையாக இக்கியூ அந்தக் கோப்பையை உடைத்துவிட, அவர் பெரும் குழப்பத்தில் ஆழ்ந்தார். அப்போது ஆசிரியரின் காலடி ஓசை கேட்க, இக்கியூ உடைந்துபோன கோப்பையின் துண்டுகளைப் பின்னால் மறைத்துக்கொண்டார். அங்கு ஆசிரியர் வந்தபோது, இக்கியூ கேட்டார்: 'மக்கள் எதற்காக இறக்கவேண்டும்?'

'அது இயற்கை' என்ற வயதானவர், 'ஒவ்வொன்றும் குறிப்பிட்ட காலம் வாழவேண்டியதுபோல் இறக்கவும் வேண்டும்' என்றார்.

நொறுங்கிப்போன கோப்பையைக் காட்டி, 'உங்களின் கோப்பை இறப்பதற்கான நேரம் வந்தது. அது இறந்தும் விட்டது' என்றார் இக்கியூ.

# 54

## குரங்குமனம்

முன்னொரு காலத்தில், ஒரு இந்திய பிராமணர் பண்டைய இந்தியாவில் அதீத/தெய்வீக சக்திகளைப் பெறுவதற்கு பேராவலுடன், அதில் தனக்கு உதவக்கூடிய ஒரு குருவைத் தேடியலைந்துகொண்டே இருந்தார். அவர் பல குருமார்களைச் சந்தித்தார். ஆனால், அதில் ஒருவராலும் தனக்கு உதவ முடியாது என்று உணர்ந்தார். ஒரு நண்பர் மூலம் திபெத்தில், மக்கள் அனைவரும் உண்மையான குருவாகக் கருதும் ஒருவர் இருப்பதை அவர் அறிந்தார். எனவே மிகுந்த உற்சாகத்துடனும் நம்பிக்கையுடனும் அந்தக் குருவைச் சந்திக்க திபெத்தை நோக்கி ஒரு நீண்ட பயணத்தைத் தொடங்கினார். இமயமலை வழியாக அவர் பயணிக்கும் பொழுது அந்தக் குரு மிகவும் பிரபலமானவர் என்பதையும் அறிந்தார். அதனால் வழி கண்டுபிடிப்பது சிரமமாக இல்லை.

கடைசியில், துறவி இருக்குமிடத்தை அடைந்து, அந்த பிராமணர் தம் பணிவான வணக்கத்தைத் தெரிவித்து, தமக்கு தாம் விரும்பும் சித்திகளை (சக்திகளை) அடைய வழி காட்டுமாறு வேண்டினார்.

அந்தத் தெய்வீக சக்திகளைப் பெற அவர் செய்ய வேண்டிய தெல்லாம், குரு கற்பிக்கும் மந்திரத்தைத் தொடர்ந்து உச்சரிக்க வேண்டும் என்பதே:

'புத்தம் சரணம் கச்சாமி
தம்மம் சரணம் கச்சாமி
சங்கம் சரணம் கச்சாமி

என்று மூன்று முறை கூறினால் போதும்; நீ விரும்பும் சக்தியை அடைந்துவிடுவாய்' என்றார்.

இது மிக எளிதாக இருந்ததால், உண்மையாக இல்லாதது போல தோன்றினாலும், அந்தப் பிராமணர் ஆர்வத்துடன் மந்திரம் சொல்ல அமர்ந்தார். அவர் அதைத் தொடங்கும் போது குரு மேலும் கூறினார்: 'நான் இப்பொழுது சொல்லப் போகும் இன்னுமொரு முக்கியமான அறிவுரையை நீ நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும். குரங்குகளைப் பற்றி சிந்தித்தால் இந்த மந்திரம் வேலை செய்யாது. எனவே, நீ என்ன செய்தாலும், குரங்குகளைப் பற்றி மட்டும் சிந்திக்காதே.' பிராமணர் தமக்குள் புன்னகைத்தபடி எண்ணினார்: 'நான் எத்தகைய ஒரு கல்விமான். நான் ஏன் மந்திரங்களை உச்சரிக்கும்போது குரங்குகளைப் பற்றி சிந்திக்கப் போகிறேன்?'

அவர் மந்திரத்தை உச்சரிக்கத் தொடங்கியவுடனே தாம் எண்ணியது எவ்வளவு தவறு என்பதை உணர்ந்தார். அவருடைய மனத்தில் முதலில் வந்த சிந்தனையே குரங்கைப் பற்றித்தான். அவர் மந்திரம் சொல்ல முயன்று கொண்டே இருந்தார். ஆனால் குரங்குகளைப் பற்றித்தான் அவரால் யோசிக்க முடிந்தது. அவருடைய உணர்வெங்கும் குரங்குகளே சுற்றித் திரிந்தன—அவர் தம் மன அமைதியையே முற்றிலும் இழக்கும்வரை.

அவரைக் கவனித்துக்கொண்டிருந்த குரு, அவருடைய நிலையைக் கண்டு புன்னகைத்தபடி கூறினார்: 'நீ உன் மனத்தை ஒரு குறிப்பிட்ட திசையில் செல்ல கட்டாயப் படுத்தினால் அது அதற்கு எதிர் திசையில்தான் செல்லும்.'

# 55

## ஜென் உரையாடல்

இரண்டு ஜென் கோயில்கள். ஒவ்வொரு கோயிலிலும் குழந்தை பயிற்சியாளர் இருந்தனர். ஒவ்வொரு நாளும் ஒரு பையன் காலையில் காய்கறிகள் வாங்கச் செல்லும் போது, வழியில் அவனை மற்ற கோயிலின் பையன் சந்திப்பான்.

'எங்கே போகிறாய்?' என்று அடுத்தவன் கேட்பான்.

'எனது பாதங்கள் என்னை எங்கே கொண்டு செல்கிறதோ அங்கு' என்பான் மற்றவன்.

புதிரான இந்தப் பதிலைக் கேட்ட பையன் உதவிக்காகத் தன் ஆசிரியரிடம் சென்றான். 'நாளை காலையில் நீ அந்தக் குட்டிப் பயலைப் பார்க்கும்போது. அதே கேள்வியைக் கேள். அவன் அதே பதிலைச் சொல்வான், உடனே நீ அவனிடம் கேள்: ''ஒருவேளை உனக்குப் பாதங்களே இல்லையென்றால், அப்புறம் எங்கே போவாய்?'' அவன் மாட்டிக்கொள்வான்.'

அடுத்த நாள் காலை அந்தச் சிறுவர்கள் மீண்டும் சந்தித்துக் கொண்டனர்.

'எங்கே போகிறாய்?' முதல் பையன் கேட்டான்.

'காற்றோடு காற்றாகச் செல்கிறேன்' பதிலளித்தான் அடுத்தவன்.

இது மறுபடியும் அவனை மௌனமாக்க, இந்தத் தோல்வியைத் தன் ஆசிரியரிடம் கொண்டு போனான்.

'அவனிடம் கேள், காற்று வீசவில்லை என்றால் எங்கே போவாய்' குறிப்பு கொடுத்தார் ஆசிரியர்.

அடுத்த நாள் இருவரும் மூன்றாவது தடவை சந்தித்தனர்.

'எங்கே போகிறாய்?' முதல் பையன் கேட்டான்.

'நான் சந்தைக்குச் சென்று காய்கறிகள் வாங்கப் போகிறேன்' என்று பதில் சொன்னான் அடுத்தவன்.

## 56

## தூர்த்துப் பெருக்குதல்

ஒரு ஜென் கோயிலுக்கு நுழைய அனுமதி கேட்டு, தயாரிப்பு ஏதுமின்றி வந்திருந்த ஒரு வெளிநாட்டவர் மனுச் செய்திருந்தார். முறையான ஆசனத்தில் அவரால் வலியின்றி அமரவோ, என்ன சொல்லப்படுகிறது என்பதைப் புரிந்துகொள்ளவோ முடிய வில்லை. குரு அவரிடம் மொழிபெயர்ப்பாளர் மூலமாக இது மிகவும் கஷ்டமாக இருக்கப் போகிறது என்று குரு சொன்னார். ஆனால், அந்த வெளிநாட்டவர் அடம்பிடித்ததால் உள்ளே நுழைய இறுதியில் அனுமதிக்கப்பட்டார். இந்த மாதிரி விஷயங் களில் எப்போதும் நடப்பதைப் போல் கோயிலுக்குத் தன்னால் ஆன பங்களிப்பைச் செய்ய வேண்டுமென அந்த வெளிநாட்டவர் நினைத்தார். அவரால் உடலுழைப்பை மட்டுமே தர முடிந்தது. தீர்மானமாகக் காலையில் சீக்கிரம் எழுந்து காலைக் கடன்களை முடித்துக்கொண்டு காலையில் தோட்டத்தைப் பெருக்கித் தள்ளி சுத்தப்படுத்தினார். தலைமை மதகுரு அங்கு காலையில் ஒரு குறிப்பிட்ட நேரத்தில் மற்ற துறவிகளை எழுப்புவதில்லை, முதல் நாள் பயிற்சி கடுமையாக இருந்தால் அவர் மற்ற மதகுருக்களைவிட சற்றே அதிக நேரம் தூங்கிவிடுவதை வெளி நாட்டவர் கவனித்தார். ஆனால், அவர் எப்போதும் சீக்கிரம் எழுந்து தம் வேலைகளைச் செய்து வந்தார். ஆனால் நாள்பட நாள்பட தம்முடைய நேரத்துக்கு மற்றவர்கள் எழுந்திருக்காமல் இருப்பதைக் குறித்து வருந்த ஆரம்பித்தார். அவர் இந்த அனுபவத்தைப் பின்னர் சிறு குறிப்பு எழுதிப் பதிவு செய்தார். அதில் அவர் தாம் வேலை செய்துகொண்டிருந்த போது மற்ற மதகுருக்கள் தூங்கிக் கொண்டிருந்ததால் வெளிப்படையாகத் தாம் அவர்களை வெறுத்ததைக் குறிப்பிட்டார்.

உறங்குமிடத்துக்கு அருகில் வரும்போது அவருடைய துடைப்பம் ரேழியை விபத்து போல் தட்டிவிடும்.

அவருடைய கோபம் கொதிநிலையை அடைந்ததும், குருவிடம் அவர் பேசினார். குரு, 'நீ ஏன் இப்படி செய்கிறாய்?' என்று கேட்டார்.

'நான் சீக்கிரம் எழுந்திருக்கும் விதியை ஒரு ஆன்மிகப் பயிற்சியாகச் செய்கிறேன்' என்றார்.

அதற்கு குரு, 'அது உன்னுடைய ஆன்மிகப் பயிற்சி மட்டும் தான் என்றால், அடுத்தவர்கள் என்ன செய்கிறார்கள் அல்லது என்ன செய்யவில்லை என்பது உனக்கொரு பொருட்டல்ல. வேறெதாவது இருக்க வேண்டும்' என்றார்.

'நல்லது, நான் முன்னுதாரணமாக நடந்துகொள்கிறேன். ஆனால் நான் காட்டும் முன்னுதாரணம் வீணடிக்கப்படுகிறது' என்றார் வெளிநாட்டவர். 'நீ காட்டும் முன்னுதாரணம் தற்பெருமையோடும், வெறுப்போடும் தூர்த்துப் பெருக்குவது. இதுவொரு நல்ல முன்னுதாரணமல்ல, அதைப் பின்பற்றக் கூடாது' என்றார் குரு.

'ஒருவர் எப்படி முன்னுதாரணமாகத் திகழ்வது?' என்று கேட்டார் வெளிநாட்டவர். 'புத்தர் எழுந்து புத்த துடைப்பத்தை எடுத்து புத்த பூமியில் படிந்திருக்கும் புத்தப் புழுதியைப் பெருக்குகிறார். அது யாருக்கும் தெரியவுமில்லை—என்னும் போது ஒரு முன்னுதாரணம் கிடைக்கிறது. அது பயனுடையதாக இருக்கும்' என்றார் குரு.

## 57

## அது கடந்துவிடும்

தியானப் பயிற்சி கொடுக்கும் தமது ஆசிரியரிடம் சென்ற ஒரு மாணவர், 'எனது தியானம் கொடுமையாக இருக்கிறது! கவனம் மிகவும் சிதறுவதாக உணர்கிறேன், அல்லது என் கால்கள் வலிக்கின்றன அல்லது தொடர்ந்து தூங்கி வழிகிறேன். இது மிகவும் கொடுமை!' என்று சொன்னார்.

'அது கடந்துவிடும்' என்று சாதாரணமாகச் சொன்னார் ஆசிரியர்.

ஒரு வாரம் கழிந்ததும், அந்த மாணவர் ஆசிரியரிடம் திரும்ப வந்தார். 'எனது தியானம் அற்புதமாக உள்ளது! மிக விழிப்போடு, மிக அமைதியோடு, மிக உயிர்ப்போடு உணர்கிறேன். அது மிகவும் அருமை!' என்றார்.

'அது கடந்துவிடும்' என்று சாதாரணமாகச் சொன்னார் ஆசிரியர்.

## 58

## தேநீர்க் கோப்பைகள்

ஜப்பானியர்கள் தாங்கள் தயாரிக்கும் தேநீர்க் கோப்பைகளை ஏன் மிக லேசாகவும் மென்மையாகவும் செய்கிறார்கள், இதனால் அவை சீக்கிரத்தில் உடைந்துவிடுகின்றன என்று சுஸுகி ரோஷியிடம் கேட்டார் ஒரு மாணவர்.

'அதை அவர்கள் மிகவும் மென்மையானதாகச் செய்வதோ, செய்யவில்லையோ—உனக்குத் தெரியவில்லை எப்படி அவற்றைக் கையாள்வது என்று. சுற்றுச்சூழலுக்கு ஏற்ப நிச்சயம் நீ உன்னை மாற்றிக் கொள்ள வேண்டும், அதற்கு நேர்மாறாக அல்ல' என்று பதிலளித்தார் ரோஷி.

# 59

## இதுதான் அகந்தை

டாங் அரச பரம்பரையின் பிரதமர் ராஜதந்திரியாகவும் இராணுவத் தலைவராகவும் தம் வெற்றிகளால் நாட்டின் கதாநாயகனாகவும் இருந்தார். ஆனால், அவருக்குப் புகழ், அதிகாரம், செல்வம் எல்லாம் இருந்தும், அவர் புத்த சமயத்தைப் பணிவாகவும் சமயப் பற்றோடும் அணுகினார். தமக்கு விருப்பமான ஜென் குருவின் கீழ் ஜென்னைக் கற்றுக் கொள்ள அடிக்கடி அவரைச் சந்தித்தார். அவர்கள் இருவரும் நல்லுறவில் இருப்பதாகத் தெரிந்தது. பிரதமராக இருந்தது உண்மையில் அவர்களுடைய உறவில் எந்தத் தாக்கமும் ஏற்படுத்தவில்லை. அது மதிப்பிற்குரிய குருவுக்கும் மரியாதை யுள்ள மாணவருக்கு மான உறவாகவே தோன்றியது. ஒரு நாள், வழக்கமான ஒரு சந்திப்பில், பிரதமர் தம் குருவிடம், 'பெருமதிப்புக்குரியவரே, புத்த சமயத்தின்படி அகந்தை என்றால் என்ன?' என்று கேட்டார். குருவுடைய முகம் சிவந்தது. அவமதிக்கும் தொனியில், 'என்ன இது முட்டாள்தனமான கேள்வி?' என்றார். இந்த பதிலைக் கொஞ்சம்கூட எதிர்பார்க்காத பிரதமர் மிகவும் அதிர்ச்சியடைந்து முகம் சுளித்துக் கோபமடைந்தார்.

பிறகு புன்னகைத்த ஜென் குரு, 'பெருமைக்குரியவரே, இதுதான் அகந்தை' என்றார்.

60

## மொக்குசென்னின் கை

டாம்பா பிரதேசத்தில் இருந்த கோயில் ஒன்றில் மொக்குசென் ஹிகி வாழ்ந்துகொண்டிருந்தார். அவரைப் பின்பற்றுபவர் களில் ஒருவர், தம் மனைவியின் கஞ்சத்தனத்தைக் குறித்து மொக்குசென்னிடம் முறையிட்டார். மொக்குசென் அவருடைய மனைவியைச் சந்தித்து, தம் உள்ளங்கையை இறுக்கி மூடிக் கொண்டு அதை அவர் முகத்துக்கு முன்பு காட்டினார்.

'என்ன சொல்ல வருகிறீர்கள்?' வியப்போடு கேட்டாள் அந்தப் பெண்.

'என் உள்ளங்கை எப்போதும் இப்படித்தான் என்று நினைத்துக்கொள்ளுங்கள். அதை என்னவென்று சொல்வீர்கள்?'

'உருச்சிதைந்தது' என்று பதிலளித்தாள் அந்தப் பெண்.

பிறகு தம் கையை அந்தப் பெண்ணின் முகத்துக்கு நேராக விரித்துக் காட்டிக் கேட்டார்: 'இது எப்போதும் இப்படித்தான் இருக்கிறது என நினைத்துக்கொள்ளுங்கள். அப்போ அது என்ன?'

'உருச்சிதைந்ததின் இன்னொரு வகை' என்று சொன்னாள் அந்த மனைவி.

'உங்களுக்கு இவ்வளவு புரிந்தது எனில், நீங்கள் ஒரு நல்ல மனைவி' என்று சொல்லி முடித்த மொக்குசென், அங்கிருந்து கிளம்பிவிட்டார்.

அந்தச் சந்திப்புக்குப் பிறகு, அந்த மனைவி சேமிப்பது போலவே கொடுப்பதற்கும் தம் கணவருக்கு உதவினாள்.

## 61

## கீழ்ப்படிதல்

குரு பங்கெய் பேசும் கூட்டங்களில் அவருடைய பேச்சை ஜென் மாணவர்கள் மட்டுமின்றி, சமூகத்தின் எல்லாப் பிரிவு மக்களும் வந்து கேட்பார்கள். அவர் ஒருபோதும் தம் பேச்சில் சூத்திரங்களையோ கற்றறிந்தவர்களின் ஆய்வுரைகளையோ மேற்கோள் காட்டியதில்லை. பதிலாக, அவருடைய இதயத்தி லிருந்து வரும் வார்த்தைகள் கேட்பவர்களின் மனங்களுக்கு நேரடியாகப் போகும்.

ஜென் குறித்த பங்கெய் பேச்சைக் கேட்டு அவரைப் பின்பற்று பவர்கள் அதிகமாகி வருவதைக் கண்டு, நிச்சிரன் பிரிவைச் சேர்ந்த மதகுரு ஒருவர் மிகவும் கோபப்பட்டார். தம்மை மட்டுமே மையப்படுத்தி இயங்கும் அந்த மதகுரு பங்கெய்யோடு தர்க்கம் செய்ய முடிவுசெய்து அந்தக் கோயிலுக்கு வந்தார்.

'ஏய், ஜென் ஆசிரியரே! ஒரு நிமிடம் நில்! உன்னை மதிப்பவர்கள் ஒவ்வொருவரும் உனக்குக் கீழ்ப்படிவார்கள். ஆனால் என்னை மாதிரி ஒருவன் உனக்கு மரியாதை கொடுக்கமாட்டான். என்னைக் கீழ்ப்படிய வைக்க உன்னால் முடியுமா?'

'இங்கே எனக்குப் பக்கத்தில் வாருங்கள். நான் உங்களுக்குக் காட்டுகிறேன்' என்றார் பங்கெய்.

கர்வத்தோடு அந்தக் குரு கூட்டத்தை நெட்டித் தள்ளிவிட்டு ஆசிரியரிடம் போனார்.

பங்கெய் புன்னகைத்தார். 'எனது இடப் பக்கம் வாருங்கள்.'

அந்த மதகுரு கீழ்ப்படிந்தார்.

'இல்லை' என்ற பங்கெய், 'நாம் நன்றாகப் பேச வேண்டும் என்பதால் எனக்கு வலப்பக்கமாக இங்கே வாருங்கள்' என்றார்.

அகந்தையோடு அவர் வலப்பக்கத்துக்கு வந்தார்.

'பாருங்கள், நீங்கள் எனக்குக் கீழ்ப்படிந்து நடக்கிறீர்கள். நீங்கள் மிகவும் பண்பானவர் என்று நினைக்கிறேன். இப்போது உட்கார்ந்து கேளுங்கள்' என்றார் பங்கெய்.

# 62

## கொடுப்பவர்தான் நன்றியுள்ளவராக இருக்க வேண்டும்

காமகுராவில் இருந்த எங்காகு மடாலயத்தின் குருவாக செய்செட்சூ இருந்தபோது, அவரிடம் கற்க வந்தவர்களின் கூட்டம் அதிகமாகிவிட்டது. அதனால் அவருக்குப் பெரிய தங்குமிடம் தேவைப்பட்டது. எடோ நகரின் வியாபாரியான உமேஸு செய்பெய் என்பவர் தாராளமாக பள்ளியின் இட வசதியைக் கூட்ட ரியோ என சொல்லப்படும் ஐந்நூறு தங்கக் காசுகளை நன்கொடையாகக் கொடுக்க முடிவு செய்தார். அந்தப் பணத்தை ஆசிரியரிடம் கொண்டுவந்தார்.

செய்செட்சூ சொன்னார்: 'நல்லது. நான் அதை வாங்கிக் கொள்கிறேன்.'

தங்கம் நிறைந்த அந்தச் சாக்குப்பையை செய்செட்சூவிடம் கொடுத்தார் உமேஸு. ஆனால், ஆசிரியரின் மனப்பாங்கால் அவர் மனநிறைவற்று இருந்தார். மூன்று ரியோவை வைத்துக் கொண்டு ஒருவர் நிச்சயம் ஓர் ஆண்டை ஓட்ட முடியும், ஆனால் ஐந்நூறு ரியோ கொடுத்த அந்த வியாபாரிக்கு நன்றிகூட சொல்லப்படவில்லை.

'இந்தப் பையில் ஐந்நூறு ரியோ இருக்கின்றன' என்று குறிப்புக் கொடுத்தார் உமேஸு. 'முன்பே என்னிடம் சொல்லி விட்டீர்கள்' என்று பதிலளித் தார் செய்செட்சூ.

'நான் பெரிய செல்வந்தனாக இருந்தாலும், ஐந்நூறு ரியோ என்பது ஒரு பெரிய தொகை' என்றார் உமேஸு. 'அதற்காக உங்களுக்கு நான் நன்றி சொல்ல வேண்டும் என விரும்பு கிறீர்களா?' கேட்டார் செய்செட்சூ.

'நிச்சயம் நீங்கள் சொல்ல வேண்டும்' என்றார் உமேஸு.

'நான் ஏன் சொல்ல வேண்டும்?' என்ற செய்செட்சூ, 'கொடுப்பவர்தான் நன்றியுள்ளவராக இருக்கவேண்டும்' என்றார்.

# 63

## நான்சென் பூனையை இரண்டாக வெட்டுகிறார்

கிழக்கு மடத்திலும் மேற்கு மடத்திலும் இருந்த துறவிகள் ஒரு பூனையைக் குறித்துச் சண்டை போட்டுக்கொண்டிருப்பதை நான்சென் பார்த்தார். அவர் அந்தப் பூனையைக் கைப்பற்றி துறவிகளிடம், 'உங்களில் யாராவது ஒருவர் ஒரு நல்ல ஜென் வார்த்தை சொன்னால், நீங்கள் பூனையைக் காப்பற்ற முடியும்' என்றார்.

யாரும் பதில் சொல்லவில்லை. ஆகவே நான்சென் துணிச்சலாக அந்தப் பூனையை இரண்டு துண்டுகளாக வெட்டினார்.

அன்று மாலையில் ஜோஷு திரும்பினார். அவரிடம் நான்சென் நடந்ததைச் சொன்னார். ஜோஷு தம் செருப்புகளைக் கழற்றி அவற்றைத் தம் தலையின் மீது வைத்துக் கொண்டு வெளியே போனார்.

'நீங்கள் அங்கே இருந்திருந்தால், நீங்கள் அந்தப் பூனையைக் காப்பாற்றியிருக்க முடியும்' என்றார் நான்சென்.

64

## ஜென் என்பது...

நடப்பது ஜென், அமர்வது ஜென்;
பேசிக்கொள்வது அல்லது மௌனம்,
செயலூக்கம் அல்லது அமைதி,
சாரம்சத்தில் அது அமைதி.
சாவின் வாளை எதிர்கொள்ளும் போதுகூட,
நமது மனம் அசையாது;
விஷத்தைக் குடித்தாலும்,
நமது மனம் அமைதியாக இருக்க வேண்டும்.

— செங்-டாவ்-கோ (ஷோடோகா),
*ஞானத்தின் பாடல்.*

65

## புத்தருடைய பிட்டத்தைத் துடைத்தல்

ஜென் குரு ஹக்குயினுடைய குழுவில் கிறுக்குத்தனமான ஒரு துறவி இருந்தார். அவர் தம்மையும் புத்தரையும் உணர்ந்து விட்டதாக நினைத்தார். அவர் புத்த சமய புனித நூலைக் கிழித்து அதன் தாள்களைக் கழிப்பறைக் காகிதமாகப் பயன் படுத்தினார். இந்தத் துறவி செய்த காரியத்தை மற்ற துறவிகள் கண்டித்துப் பேச, அந்தத் துறவியோ அதைப் பொருட் படுத்தாமல், திமிரோடு சுருக்கென்று, 'புனித நூலின் தாள்களைப் பயன்படுத்தி ஒரு புத்தருடைய பிட்டத்தை சுத்தமாக்குவதில் என்ன தப்பு?' என்றார்.

இந்தக் காரியம் தொடர்ந்து நடப்பதைக் கண்டு சிலர் இந்த விவகாரத்தை குரு ஹக்குயினிடம் சொன்னார்கள். அவர் அந்தக் கிறுக்குத் துறவியிடம், 'நீ புத்த நூல்களைக் கிழித்துக் கழிப்பறைக் காகிதமாகப் பயன்படுத்துவதாக அவர்கள் சொல்கிறார்களே, அப்படியா?'

கிறுக்குத் துறவி, 'ஆமாம். நானே புத்தர். புனித நூலின் பக்கங்களைப் பயன்படுத்தி ஒரு புத்தருடைய பிட்டத்தை சுத்தமாக்குவதில் என்ன தப்பு?' என்று கேட்டார். ஹக்குயின், 'நீ செய்வது தவறு. ஒரு புத்தரின் பிட்டமென்றால், எழுதப் பட்டிருக்கும் பழைய காகிதத்தை ஏன் பயன்படுத்துகிறாய்? தூய்மையான வெள்ளைக் காகிதத்தை வைத்து நீ சுத்தப்படுத்தி யிருக்க வேண்டும்.'

கிறுக்குத் துறவி வெட்கமடைந்து
வருத்தம் தெரிவித்து மன்னிப்புக் கோரினார்.

## 66

## ரியோனென்னின் தெளிவான உணர்தல்

ரியோனென் என அழைக்கப்பட்ட புத்த பெண் துறவி 1797இல் பிறந்தார். இவர், ஷிங்கென் என்ற பிரபலமான ஜப்பானிய போர்வீரனின் பேத்தி. கவித்துவம் மிக்க மேதை, மயக்கும் அழகோடு அவர் தம் பதினேழு வயதிலேயே மகாராணியின் மாமன்றத்தில் சேவை செய்துகொண்டிருந்தார். அந்த இளம் வயதிலேயே அவருக்குப் புகழ் கிடைத்துவிட்டது.

ஆனால் அன்புக்குரிய மகாராணி திடீரென இறந்துவிட, ரியோனென்னின் நம்பிக்கை குறித்த கனவுகள் காணாமல் போயின. இந்த உலகில் மனித வாழ்வின் நிலையின்மை குறித்து அறிந்துகொண்டார். அதன் பிறகு அதை அறிய ஜென்னைக் கற்க விரும்பினார்.

அவருடைய உறவினர்கள் இதை ஏற்றுக்கொள்ளவில்லை. திருமணம் செய்துகொள்ள வேண்டும் என அவரைக் கட்டாயப் படுத்தினர். திருமணம் செய்து, மூன்று குழந்தைகளைப் பெற்றெடுத்த பிறகு அவள் நிச்சயம் பெண் துறவியாக மாறிக் கொள்ளலாம் என அவர்கள் கொடுத்த வாக்குறுதிக்குப் பிறகே, ரியோனென் திருமணத்தை ஏற்றுக்கொண்டார். தமக்கு இருபத்தைந்து வயதாகும் முன் இந்த நிபந்தனைகள் அனைத்தையும் அவர் பூர்த்திசெய்துவிட்டார். அதன் பிறகு அவருடைய கணவரும் உறவினர்களும் அவருடைய மனதில் இருந்த விருப்பத்தை மாற்ற புத்திமதி சொல்ல முடியவில்லை. அவர் மொட்டையடித்துக்கொண்டு, தெளிவான அறிவு என்னும் பொருள்படும் ரியோனென் எனப் பெயரை மாற்றிக்கொண்டு, தம் புனிதப் பயணத்தை ஆரம்பித்தார்.

அவர் எடோ நகரத்துக்குச் சென்றார். அங்கு டெட்சுக்யு குருவைச் சந்தித்து, தம்மைச் சீடராக ஏற்றுக்கொள்ள வேண்டும் என்றார். ஒரே பார்வையில், அவர் மிகவும் அழகானவர் என்பதைக் கண்டு குரு நிராகரித்துவிட்டார்.

ரியோனென் வேறொரு குருவான ஹகுவோவிடம் போனார். அதே காரணத்தால் அவரும் ரியோனென்னை மறுதலித்து விட்டு, அவருடைய அழகு தொல்லையை மட்டுமே தரும் என்று சொன்னார்.

ரியோனென் ஓர் இரும்புக்கம்பியை நெருப்பில் காய்ச்சி அதைத் தம் முகத்தில் தேய்த்தார். ஒரு சில நிமிடங்களிலேயே அவருடைய அழகு நிரந்தரமாகப் போய்விட்டது.

அதன் பிறகு ஹகுவோ அவரைத் தம் சீடராக ஏற்றுக் கொண்டார்.

இந்த நிகழ்வின் நினைவாக, ரியோனென் ஒரு சிறிய கண்ணாடிக்குப் பின்னால் ஒரு கவிதையை எழுதி வைத்தார்:

'மகாராணிக்குச் சேவை செய்தபோது அழகுமிக்க என்
ஆடைகள் நறுமணம் வீச ஊதுபத்தி கொளுத்தினேன்.
இப்போது வீடற்ற பிச்சைக்காரியான நான்,
ஒரு ஜென் கோவிலுக்குள் நுழைய என் முகத்தைப்
பொசுக்கிக்கொண்டேன்.'

ரியோனென் இந்த உலகத்திலிருந்து பிரியும் சமயத்தில், அவர் இன்னொரு கவிதையை எழுதினார்:

'அறுபத்தாறு தடவை இலையுதிர் காலம் மாறும் காட்சிகளை
இந்தக் கண்களால் பார்த்தேன்.

போதுமான அளவு நிலவொளியைப் பற்றிப் பேசிவிட்டேன்,
எனக்கு இனியேதும் வேண்டாம்.

காற்று வீசாதபோது தேவதாரு மரங்களின் குரலையும்
செவ்வகில் மரங்களின் குரலையும் கேட்டால் போதும்.'

# 67

## சங்கிலிகள்

ஒருவர் தம் ஆசிரியரிடம், 'சாராய கடைகளுக்கும் விபச்சார விடுதிகளுக்கும் போய்க்கொண்டிருக்கும் என் பழக்கத்தை நிறுத்த எவ்வளவோ முயன்று இருக்கிறேன், ஆனால் என்னால் முடியவில்லை. என் இயல்போடு பிணைக்கப்பட்டிருக்கிறேன். சங்கிலிகளில் கட்டப்பட்டிருக்கும் ஒரு மனிதர் எதையும் செய்வதற்கு நீங்கள் எதிர்பார்க்க முடியாது.'

ஒரு மாலை நேரத்தில் அவர் நகருக்குப் போய்க்கொண்டு இருக்கும் போது ஆசிரியர் அவரைச் சந்தித்தார். அப்போது அந்த ஆள் கம்பீரமான ஆடை அணிந்து சுறுசுறுப்பாக எதிர் பார்ப்போடு நடந்து போய்க்கொண்டு இருந்தார்.

ஆசிரியர், 'உங்களைப் பார்த்தால் சங்கிலிகளில் கட்டப் பட்ட மனிதனைப் போல் இல்லையே!' என்றார்.

# 68

## ஒரு துளி நீர்

கிஸான் என்ற பெயர்கொண்ட ஜென் குரு, ஓர் இளம் மாணவரிடம் ஒரு வாளியில், தம் குளியல் தொட்டியில் விளாவுவதற்குக் குளிர்ந்த நீரை எடுத்துவரச் சொன்னார்.

அந்த மாணவர் தண்ணீரைக் கொண்டுவந்து. குருவின் குளியல் தொட்டியில் விளாவிய பிறகு மீதியிருந்த சிறிதளவு தண்ணீரைத் தரையில் ஊற்றினார்.

'முட்டாளே!' குரு அந்த மாணவரைக் கடிந்துகொண்டார். 'மீதியிருந்த தண்ணீரை ஏன் செடிகளுக்கு ஊற்றவில்லை? இந்தக் கோயிலில் உள்ள தண்ணீரின் ஒரு துளியைக்கூட வீணாக்க உனக்கு உரிமை இல்லை' என்றார்.

அந்த இளம் மாணவர் அந்தக் கணத்திலே ஜென்னை அடைந்து விட்டார். அந்த மாணவர் டேகிசுய் எனத் தம் பெயரை மாற்றிக்கொண்டார். அந்தப் பெயரின் பொருள் 'ஒரு துளி நீர்.'

## 69

# இயற்கையின் அழகு

ஒரு புகழ்பெற்ற ஜென் கோயிலுக்குள் இருந்த தோட்டத்துக்கு குரு ஒருவர் பொறுப்பேற்றிருந்தார். அவர் மரங்களையும், புதர்களையும், மலர்களையும் நேசித்ததால் அவருக்கு அந்தப் பணி தரப்பட்டிருந்தது. அந்தக் கோயிலுக்கு அருகில் வேறொரு சிறு கோயில் இருந்தது. அங்கு ஒரு வயதான ஜென் குரு வாழ்ந்துவந்தார். ஒரு நாள் சிறப்பு விருந்தினர்கள் சிலர் வருவதை எதிர்பார்த்து ஒரு கூடுதல் அக்கறையோடு தோட்டத்தைப் பராமரித்தார். களைகளைப் பிடுங்கினார், புதர்களை ஒழுங்கு படுத்தினார், பாத்திகளைக் கோதிவிட்டார், இலையுதிர் காலமாதலால் விழுந்த இலைகளைப் பொறுக்கியெடுத்துக் கவனமாக அடுக்கினார். குரு வேலை செய்துகொண்டிருந்த போது வயதான குரு தடுப்புச் சுவருக்கு அந்தப்பக்கம் அவருடைய இடத்திலிருந்து குருவை ஆர்வத்தோடு பார்த்துக்கொண்டிருந்தார்.

குரு தம் வேலையை முடித்ததும் சற்று தள்ளி நின்று தாம் செய்ததைப் பார்த்துக்கொண்டு, 'அழகாக இருக்கிறதில்லையா?' என்று வயதான குருவிடம் கேட்டார். வயதான குரு, 'ஆம்' என்றவர், 'ஆனால் ஏதோவொன்று குறைகிறது. இந்தத் தடுப்புச் சுவரைத் தாண்ட உதவு. நான் உனக்காக அதைச் சரி செய்கிறேன்' என்றார். கொஞ்சம் தயங்கிய குரு, பின்னர் வயதான குருவை அந்தப் பக்கத்திலிருந்து தூக்கி இந்தப் பக்கம் இறக்கிவிட்டார்.

வயதான குரு தோட்டத்துக்கு நடுவிலிருந்த மரத்திற்கு அருகில் மெதுவாகச் சென்று மரத்தைப் பிடித்து உலுக்கினார். தோட்டமெங்கும் இலைகள் சொரிந்தன.

'இதோ, இதுதான்' என்று கூறிய வயதான குரு,
'என்னை இபோது அந்தப் பக்கம் இறக்கிவிடு' என்றார்.

# 70

## சொர்க்கத்தின் வாயில்
## நரகத்தின் வாயில்

நோபுஷிகே என்ற வீரன் ஹக்குயினிடம் வந்து, 'உண்மையில் சொர்க்கமும் நரகமும் இருக்கின்றனவா?' என்று கேட்டான்.

'யார் நீ?' என்றார் ஹக்குயின்.

'நான் ஒரு சாமுராய்' வீரன் பதிலளித்தான்.

'நீ ஒரு வீரனா!' என்று வியப்படைந்த ஹக்குயின், 'எந்த அரசன் உன்னை மெய்க்காப்பாளராக வைத்துக்கொள்வான்? உன் முகம் பிச்சைக்காரனுடையதைப் போல் அல்லவா இருக்கிறது' என்றார்.

நோபுஷிகே கடுமையாகக் கோபமடைந்து தன் வாளை உருவத் தயாராக, ஹக்குயின் தொடர்ந்தார், 'ஓ உன்னிடம் வாளும் இருக்கிறதா! உன் ஆயுதம் அநேகமாக மொன்னையாக இருக்கும், என் தலையை அதனால் வெட்டக்கூட முடியாது' என்றார்.'

நோபுஷிகே வாளை வெளியே எடுக்கும்போது ஹகுயின் சொன்னார்: 'இங்குதான் நரகத்தின் வாசல்கள் திறக்கின்றன!'

அந்த வார்த்தைகளால் குருவின் எண்ணத்தைத் தெரிந்து கொண்ட சாமுராய் தன் வாளை உறையில் போட்டுத் தலை வணங்கினான்.

'இங்கே திறக்கின்றன சொர்க்கத்தின் வாசல்கள்' என்றார் ஹக்குயின்.

## 71

## அரிசிக்கஞ்சி குடித்தல்

சோஸான் ஒரு துறவியிடம் அவர் எங்கிருந்து வருகிறார் என்று கேட்டார். அவர், 'குரு செப்போவிடமிருந்து' என்றார்.

'போன தடவை இங்கிருந்த போது உனக்குத் திருப்தியாக இல்லையே. இப்போது எப்படி?' என்றார் சோஸன். 'இப்போது நான் திருப்தியாக இருக்கிறேன்' என்றார் துறவி. 'கஞ்சியில் திருப்தியாக இருக்கிறாயா, அரிசியில் திருப்தியாக இருக்கிறாயா?' என்றார் சோஸான்.

துறவி பதிலேதும் சொல்லவில்லை.

***

*ஆர்.ஹெச். பிளித்தின் விளக்கம்:*

சோஸானின் கேள்வி வெறும் வசையல்ல. நாம் ஆன்மிகத் திருப்தியோடு இருக்கிறோமா என்பதல்ல கேள்வி. பொருளாதாரத் திருப்தியோடு இருக்கிறோமா என்பதே கேள்வி. நாம் பொருளாதார ரீதியாகத் திருப்தியோடு இருந்தால், உண்மையில் திருப்தியோடு இருக்கிறோம். நமக்குக் கஞ்சி பிடித்திருந்தால், அது கொஞ்சம் தீய்ந்து போனாலோ அதில் உப்பு அதிகமாக இருந்தாலோ நாம் பொருட்படுத்த மாட்டோம்—இதுதான் சொர்க்கம், இதுதான் நிப்பனா (முக்தி), இதுதான் ஜென்.

ஆனால், எப்படி இருந்தாலும், நாம் நமது சொர்க்கம் பற்றிய நம்பிக்கைகளோடு இருந்தும், உணவைப் பற்றி முணுமுணுத்தால் அந்த சொர்க்கம் மாயையானது.

## 72

## கல்புத்தரைக் கைதுசெய்தல்

பருத்தியால் நெய்யப்பட்ட துணிச் சரக்குகளின் ஐம்பது சுருள்களைத் தோள்களில் சுமந்தபடி வந்த ஒரு வியாபாரி, கடுமையாகக் கொளுத்திய வெயிலில் ஓய்வெடுக்க, பெரிய கல்புத்தர் நின்றுகொண்டிருந்த கூரைக்குக் கீழ் பயணத்தை நிறுத்தினார். அங்கு அவர் படுத்துவிட்டார். தூங்கி விழித்த போது அவருடைய சரக்குகள் மாயமாகிவிட்டன. உடனே அவர் போலீஸிடம் புகார் கொடுத்தார்.

இந்தப் புகாரை விசாரிக்க நியமிக்கப்பட்ட ஓ-ஒகா என்ற நீதிபதி விசாரணையை ஆரம்பித்தார். 'நிச்சயம், இந்தக் கல்புத்தரே வியாபாரியின் சரக்குகளைத் திருடிவிட்டார்' என்று சொன்ன நீதிபதி, 'பொதுமக்களின் நலனைப் பாதுகாப்பதே புத்தரின் கடமையாக இருக்க வேண்டும். ஆனால் அவரோ தம் புனிதமான கடமையில் தவறிவிட்டார். அவரைக் கைது செய்யுங்கள்' என்றார்.

காவலர்கள் கல்புத்தரைக் கைதுசெய்து நீதிமன்றத்துக்குத் தூக்கிக்கொண்டு வந்தனர். அந்தச் சிலைக்குப் பின்னால் ஒரு கூட்டம் கூச்சலிட்டபடி, இந்தப் புகாருக்கு என்ன மாதிரியான தண்டனையை நீதிபதி கொடுக்கப் போகிறார் என ஆர்வத்துடன் வந்தது.

நீதிபதி தம் இருக்கைக்கு வந்தபோது, ஆரவாரமாகத் தொடர்ந்த பார்வையாளர்களைக் கண்டித்தார். 'நீதிமன்றத்துக்கு முன்னால் சிரித்துக்கொண்டும் கிண்டலடித்துக்கொண்டும் இருப்பதற்கு உங்களுக்கு என்ன உரிமை இருக்கிறது? நீங்கள் நீதிமன்ற அவமதிப்பால் அதற்கான அபராதத்துக்கும் சிறைத் தண்டனைக்கும் உள்ளாகிறீர்கள்.'

பொதுமக்கள் அவசரமாக நீதிபதியிடம் மன்னிப்புக் கேட்டனர். 'நான் உங்களுக்கு அபராதம் விதிக்க வேண்டும்' என்ற நீதிபதி, 'ஆனால், இன்னும் மூன்று நாள்களுக்குள் நீங்கள் ஒவ்வொருவரும் ஒரு பருத்தித்துணிச் சுருளை நீதிமன்றத்திடம் கொடுக்க வேண்டும். அப்படிச் செய்யாதவர் கைது செய்யப்படுவார்' என்றார்.

அதன்படி ஒவ்வொருவரும் பருத்தித்துணிச் சுருளைக் கொண்டுவர, அவற்றில் ஒன்றை அந்த வியாபாரி தன்னுடையது எனச் சட்டென்று கண்டுபிடித்துவிட்டதும் உண்மையான திருடனைச் சுலபமாகக் கண்டுபிடித்துவிட்டனர். வியாபாரி தம் சரக்குகளைப் பெற்றுக்கொண்டார். மற்ற பருத்தித்துணிச் சுருள்கள் உரிய பிறருக்குத் திருப்பிக் கொடுக்கப்பட்டன.

73

## கதவுகளைத் திறந்து மூடுதல்

துறவுமடத்தில் தம் முதல் ஆண்டைக் கழித்த ஜென் மாணவர் ஒருவரிடம் முதல் ஆண்டு பயிற்சிக் காலத்தில் என்ன கற்றுக் கொண்டாய் என்று கேட்டார் தாமஸ் மெர்ட்டன். பயிற்சி மாணவர் தாம் ஞானம்பெற்ற மோதல்கள், ஆன்மிகக் கண்டுபிடிப்புகள் அல்லது சிலசமயம் மாறிய பிரக்ஞைநிலைகள் போன்றவை பற்றிச் சொல்வார் என்று பாதி எதிர்பார்ப்புடன் கேட்டார். ஆனால், தம் சிந்தனைப் பயிற்சி வாழ்வின் முதலாமாண்டில் அவர், கதவுகளைத் திறக்கவும் மூடவும் மட்டுமே கற்றுக் கொண்டதாகச் சொன்னார்.

'கதவுகளைத் திறக்கவும் மூடவும் கற்றுக்கொண்டேன்.'

சிந்திக்காமல் செயல்படுவதைத் தவிர்க்கும் அமைதியான ஒழுக்கம், கதவுகளை மடார் மடாரென்று சாத்திவிட்டு ஓடாதிருப்பது, ஓரிடத்தில் இருந்து மற்றோர் இடத்துக்கு அவசரமாக ஓடாமலிருப்பது ஆகியவற்றிலிருந்துதான் ஆன்மிக வளர்ச்சிப் படிநிலையைக் கற்றுக்கொள்ள அந்த மாணவர் தொடங்க (ஒருவேளை முடிக்கவும்) வேண்டும்.

'கதவுகளைத் திறக்கவும் மூடவும் கற்றுக்கொண்டேன்.'

இந்தப் பதில் தாமஸ் மெர்ட்டனுக்கு மிகவும் பிடித்திருந்தது. அவர் இந்தக் கதையைப் பலமுறை மீண்டும் மீண்டும் சொல்லிக் கொண்டார். ஏனெனில் அவருக்கு இது 'விளையாட்டின்' மிகச் சிறந்த நிலைக்கான முன்மாதிரியாக இருந்தது—எளிய செயல்களைச் செய்துகொண்டிருக்கும் அதேசமயத்தில் அதில் மிகவும் தீவிரமாக, முழுக்க ஒன்றிப்போய்விடுதல்.

# இயல் ஐந்து

## மாட்டை வயப்படுத்துதல்



சாட்டையும் கயிறும் அவசியமானவை.
இல்லையென்றால் அது நிச்சயம் வழியைவிட்டு
விலகி புழுதிச் சாலைகளில் திரியப் போய்விடும்.
நன்கு பயிற்சி பெற்றதால், அது இயல்பாகவே
பண்பட்டு இருக்கிறது. பிறகு, மூக்கணாங் கயிறு
இல்லாமலே எஜமானுக்குக்
கட்டுப்படுகிறது.

'மாட்டை அமைதிப்படுத்தி வயப்படுத்தியாயிற்று. மெய்யான சுயத்தை வெறுமனே பார்ப்பதோ, கேட்பதோ, அனுபவப்படுவதோ மட்டும் போதாது. இது பயிற்சியும் பகுத்தறிவும் அறிவும் கொண்ட நீண்ட செயல்முறை. மனத்தைத் தூய்மைப்படுத்தி உருமாற்றப்பட வேண்டும்.'

## 74

## உங்களுடைய இயல்பு என்ன?

இரண்டு துறவிகள் ஆற்றில் தங்களுடைய உணவுக் கிண்ணங்களைக் கழுவிக்கொண்டிருந்தபோது ஆற்று நீரில் ஒரு தேள் மூழ்கிக்கொண்டிருந்ததைப் பார்த்தார்கள்.

ஒரு துறவி உடனடியாக அந்தத் தேளைத் தண்ணீருடன் அள்ளி அதைக் கரையில் வைத்தார். அவ்வாறு அவர் செய்த போது அந்தத் தேள் அவரைக் கொட்டியது. அவர் திரும்பத் தம் கிண்ணத்தைக் கழுவ ஆரம்பித்தபோது மீண்டும் தேள் ஆற்றில் விழுந்தது. அந்தத் துறவி தேளைக் காப்பாற்ற, அது மீண்டும் அவரைக் கொட்டியது. உடனிருந்த துறவி அவரிடம், 'நண்பரே, தேளின் இயல்பு கொட்டுவதுதான் என்பதைத் தெரிந்தும் நீங்கள் ஏன் தொடர்ந்து அதைக் காப்பாற்றுகிறீர்கள்?' என்று கேட்டார். 'ஏனென்றால்' எனப் பதில் சொன்ன முதல் துறவி, 'காப்பாற்றுவது எனது இயல்பு' என்றார்.

## 75

### ஒன்றுதானா?

குரு உம்மோன் தலைமைத் துறவியிடம் கேட்டார்:

'மலைகளையும் நதிகளையும் கொண்ட பூமி உங்களைப் போன்றதா அல்லது உங்களிடமிருந்து வேறானதா?' துறவி, 'ஒன்றுதான்' என்றார். 'அந்துப்பூச்சி, வண்டு, எறும்பு போன்ற அனைத்து உயிரினங்களின் உயிர்களும் உங்களைப் போன்றதா, உங்களிடமிருந்து வேறானதா?' என்று கேட்டார் உம்மோன்.

'ஒன்றுதான்' என்று பதிலளித்தார் துறவி.

'நீங்கள் ஏன் உங்களிடமிருந்தே முரண்படுகிறீர்கள்?' என்றார் உம்மோன்.

## 76

## காதலித்தால் வெளிப்படையாகக் காதலியுங்கள்

ஒரு ஜென் குருவிடம் இருபது துறவிகளும் எஷுன் என்ற பெண் துறவியும் தியானப் பயிற்சியை மேற்கொண்டிருந்தனர்.

மொட்டையடித்த தலை, சாதாரண உடை என இருந்தாலும் எஷுன் பேரழகி. அவரை ஏகப்பட்ட துறவிகள் இரகசியமாகக் காதலித்தனர். அவர்களில் ஒரு துறவி தனியாக அவளைச் சந்திக்கக் கேட்டு வற்புறுத்திக் காதல் கடிதம் ஒன்றை எழுதினார்.

எஷுன் எந்தப் பதிலும் சொல்லவில்லை. அடுத்த நாள் குழுமியிருந்த துறவிகளுக்குச் சொற்பொழிவு ஆற்றினார் குரு. அந்தக் கூட்டம் முடிந்ததும், எஷுன் எழுந்தார். யார் தனக்குக் கடிதம் எழுதினாரோ அவரை அழைத்து 'என்னை நீங்கள் உண்மையில் அவ்வளவு நேசித்தால், வாருங்கள், என்னை இப்போதே தழுவிக்கொள்ளுங்கள்' என்றார்.

77

## சடங்குப் பூனை

ஆன்மிக குருவும் அவருடைய சீடர்களும் தங்களுடைய மாலை நேர தியானத்தைத் தொடங்கியபோது, மடத்துப் பூனை இவர்களுடைய தியானத்தைக் கலைக்கிற விதமாகக் கடுமையாகச் சப்தமிட்டது. அதனால் குரு மாலைநேர தியானத்துக்கு முன்னர் பூனையை வெளியே கட்டிப் போடச் சொன்னார். பல ஆண்டுகளுக்குப் பிறகு குரு இறந்த பின்னும் அந்த மடத்தில் மாலை நேர தியானத்துக்கு முன்பு பூனையைக் கட்டிப் போடும் வழக்கம் தொடர்ந்தது. பின்னர் அந்தப் பூனை இறக்கவும், வேறொரு பூனை கொண்டு வரப்பட்டு அதுவும் கட்டிப் போடப்பட்டது.

பல நூற்றாண்டுகளுக்குப் பிறகு, அந்த ஆன்மிக குருவின் மெத்தப் படித்த வழித்தோன்றல்கள், தியானப் பயிற்சியின் போது பூனையைக் கட்டிப்போட வேண்டிய மத முக்கியத்துவத்தைப் பற்றி விளக்கவுரைகளை எழுதினார்கள்.

## 78

## உண்மையான பயிற்சி

ஒரு நாள் அரசு அதிகாரி வாங், குருவை அழைத்துக்கொண்டு இருவரும் சேர்ந்து துறவிகளுடைய கூடத்தைப் பார்க்கச் சென்றனர். வாங், 'இந்தக் கூடம் நிறைய துறவிகள் இருக்கிறார்கள் – அவர்கள் சூத்திரங்களைப் படிக்கிறார்களா?' என்றுக் கேட்டார்.

குரு பதிலளித்தார்:

'இல்லை, அவர்கள் சூத்திரங்களைப் படிக்கவில்லை.'

'எப்படித் தியானம் செய்வது என்பதைக் கற்றுக்கொள் கிறார்களா?' எனக் கேட்டார் வாங். 'இல்லை, அவர்கள் தியானம் செய்யக் கற்கவில்லை' என்று சொன்னார் குரு.

வாங், 'அவர்கள் சூத்திரங்களையும் படிக்கவில்லை, தியானமும் செய்யவில்லை என்றால், அவர்கள் உண்மையில் என்ன செய் கிறார்கள்?' எனக் கேட்டார். குரு, 'அவர்கள் அனைவரும் புத்தர்களாகவும் மூதாதையர்களாகவும் வளர நாங்கள் பயிற்சி கொடுக்கிறோம்' எனச் சொன்னார். வாங், 'தங்கத்தின் தூசு விலை மதிப்புள்ளது, ஆனால் அது கண்ணுக்குள் விழுந்தால் கண்ணைக் குருடாக்கிவிடும் என உங்களுக்குத் தெரியும்தானே?' எனக் கேட்டார்.

அதற்குக் குரு பதிலளித்தார்:

'நான் உங்களை ஒரு சாதாரண மனிதர் என்றே எப்போதும் நினைத்திருந்தேன்!'

# 79

## மாபெரும் அலைகள்

'மாபெரும் அலைகள்' என்று பொருள்படும் ஓ-நாமி என்ற புகழ்பெற்ற மல்யுத்த வீரன் ஒருவன் மெய்ஜி காலத்தின் தொடக்கத்தில் வாழ்ந்துவந்தான்.

ஓ-நாமி மாபெரும் பலசாலி. அதோடு மல்யுத்தக் கலையையும் அறிந்திருந்தான். தனிப்பட்ட போட்டிகளில் அவன் தன் ஆசிரியரைக்கூடத் தோல்வியுறச் செய்தான். ஆனால், பொது இடங்களில் மிகவும் வெட்கப்பட்டான். அவனுடைய சிஷ்யர்களே அவனைக் கீழே வீழ்த்தினார்கள்.

இதுகுறித்து உதவி பெற ஓ-நாமி ஒரு ஜென் குருவிடம் போக வேண்டும் என நினைத்தான். அருகில் ஒரு சிறு கோயிலில் நாடோடியான ஹகுஜு என்ற குரு இருப்பதை அறிந்து அங்கு சென்று அவரைப் பார்த்துத் தன் பிரச்சினையைச் சொன்னான்.

'மாபெரும் அலைகள்தானே உன் பெயர். இன்றிரவு இந்தக் கோயிலில் தங்கு. நீதான் அந்தப் பெரும் அலைகள் எனக் கற்பனை செய். இதற்கு மேல் நீ பயப்படுகிற மல்யுத்த வீரன் இல்லை. தன் முன்னால் இருக்கும் ஒவ்வொன்றையும் வாரிச்சுருட்டி விழுங்கி விடும் அந்தப் பேரலைகள் நீ. இதைச் செய், இந்த நாட்டிலேயே மாபெரும் மல்யுத்தவீரனாகிவிடுவாய்' என்றார் குரு.

குரு தூங்கச் சென்றார். ஓ-நாமி தியானத்தில் அமர்ந்து தான்தான் அந்தப் பேரலைகள் எனக் கற்பனை செய்தான். அவன் எண்ணத்தில் பல்வேறு விதமான விஷயங்கள் வந்தன. பிறகு அவன் படிப்படியாகத் தானே அலைகள் என்று மேன்மேலும் நினைத்தான். அந்த இரவு கடந்து போகப் போக அந்த அலைகள் பிரமாண்டமாக மாறின. அவை பூக்கள் வைத்திருக்கும் குடுவைகளை அடித்துச் சென்றன. கோயிலில் இருந்த புத்தரின் சிலைகூட

வெள்ளத்தில் மூழ்கியது. விடியற்காலைக்கு முன்பாக கோயிலே இல்லை. புரண்டெழும் அலைகள்கொண்ட பெரும் கடலாக இருந்தது.

காலையில் ஓ-நாமி தியானத்திலேயே மூழ்கியிருந்ததைப் பார்த்த ஆசிரியரின் முகத்தில் மெல்லிய புன்முறுவல் படர்ந்தது. அவர் மல்யுத்த வீரனின் தோள்களில் தட்டிக்கொடுத்தார். 'இப்போது எதுவும் உன்னைத் தொந்தரவு செய்யாது. நீதான் அந்தப் பேரலைகள். உன் முன்னால் இருக்கும் எதையும் நீ சுருட்டித் தள்ளுவாய்' என்றார்.

அன்றே ஓ-நாமி மல்யுத்தப் போட்டிகளில் கலந்துகொண்டு வெற்றியடைந்தான்.

அதன்பிறகு, ஜப்பானில் ஒருவராலும் அவனைத்
தோல்வியுறச் செய்ய முடியவில்லை.

## 80

## முகமற்றவர்கள்

குரு டோஸானிடம் குரு செப்போ பிரியாவிடை பெற்றுக் கொண்டார். ‘இப்போது எங்கே போகப் போகிறீர்கள்?’ என்று கேட்டார் டோஸான்.

‘திரும்பவும் மலைக்குப் போகப் போகிறேன்’ என்றார் செப்போ.

‘எந்த வழியே நீங்கள் வந்தீர்கள்?’

‘ஹியென் மலை வழியே வந்தேன்.’

‘இப்போது எந்த வழியே நீங்கள் செல்கிறீர்கள்?’

‘ஹியென் மலையை நோக்கிப் போகிறேன்.’

ஹியென் மலையை நோக்கிச் செல்லாத ஒருவர் இருக்கிறார். அவரை உங்களுக்குத் தெரியுமா?’

‘எனக்குத் தெரியாது’

‘உங்களுக்கு ஏன் அவரைத் தெரியாது?’

‘அவருக்கு முகமில்லை.’

‘அந்த மனிதனை உங்களுக்குத் தெரியாது என்றால் நீங்கள் எப்படி அவருக்கு முகமில்லை என்று தெரிந்துகொண்டீர்கள்?’

செப்போ வாயடைத்து நின்றார்.

## 81

## நீ யார்?

நாங்காகு ஏஜோ ஆறாவது மூதாதையரைச் சந்திக்க வந்த போது, அவர், 'இப்படி வருவது யார்?' என்று கேட்டார்.

நாங்காகுவுக்குத் தாம் உண்மையில் யார் என்ற விழிப்புணர்வை எட்டுவதற்கு எட்டு ஆண்டுகள் ஆயின.

அவர் தாம் உணர்ந்ததை குருவிடம் இவ்வாறு முன்வைத்தார்:

'நான் என்னை இதுதான் நான் என்று எதைச் சொன்னாலும் அதுவல்ல நான். நான் அதுதான்.'

இப்போது சொல், உண்மையில் நீ யார்?

பெயர்கள், வடிவங்களுக்கு அப்பால் நீ யார்?

சொற்களுக்கும், சொல்லற்றதற்கும் அப்பால்,

ஜனனத்துக்கும் மரணத்துக்கும் அப்பால் நீ யார்?

## 82

## வே ஷான்தான் எருமையா?

ஒரு கூட்டத்தில் சான் குருவான வே ஷான் சொன்னார்: 'ஒரு நூறு ஆண்டுகளில், உங்களுடைய முதிய ஆசிரியர் எருமையாகப் பிறப்பெடுக்கக் கீழே உலகுக்குப் போவார். அந்த எருமையின் இடப்புறத்தில், என் பெயர் வே ஷான் என்று எழுதியிருக்கும். ஒருவேளை யாராவது என்னை வே ஷான் எனக் கூப்பிட்டால், அப்போது நான் எருமையாக இருப்பேன். யாராவது என்னை எருமை என்ற பெயரால் அழைத்தால், நான் வே ஷான் என ஆகியிருப்பேன். இப்போது எனக்குச் சொல்லுங்கள், என் பெயர் என்னவாயிருக்க வேண்டும்?'

அமைதி கோலோச்சியது. பிறகு யாங் ஷான் என்ற துறவி முன்னால் எழுந்து வந்து குருவின் முன்பு மரியாதையோடு முட்டிக்கால் போட்டார்.

ஒரு வார்த்தையும் சொல்லாமல்,

யாங் ஷான் எழுந்து மீண்டும் தனது இருக்கையில் அமர்ந்தார்.

## 83

## கடவுளின் குரல்

ஒரு துறவி நதியைக் கடப்பதற்காகச் சில இளைஞர்களோடு ஒரு படகில் ஏறினார். துறவி சிறிது நேரத்தில் கண்களை மூடித் தியானத்தில் சமாதி நிலையை அடைந்தார். புனிதத் துறவி தியானத்தில் இருப்பதைக் கண்ட இளைஞர்களால் அவமரியாதை செய்வதையும், கிண்டல் செய்வதையும் அடக்கிக்கொள்ள முடியவில்லை. அந்தப் புனிதர் இனி உரிக்கப்பட்ட வாழைப் பழத்தோல்தான் என்று சொல்லியபடி அவர்மீது வாழைப் பழத்தோலை வீசினார்கள். அப்போது சட்டென்று எங்கிருந்தோ ஒரு குரல், 'மகனே, உன் எதிரிகள் உன்னைத் தொந்தரவு செய்கிறார்கள்; நீ விரும்பினால் நான் படகைக் கவிழ்த்து அவர்களை அழித்துவிடுகிறேன்' என்றது. விஷயம் தீவிர மடைவது போல் தெரிந்தது. இளைஞர்களுக்குக் கொஞ்சம் மூடநம்பிக்கை இருக்கவே, அவர்கள் அமைதியாகி, துறவி என்ன சொல்லப் போகிறார் என்று கவனித்தார்கள். கண்களைத் திறந்த துறவி, 'கடவுளே, நீங்கள் சாத்தானைப் போல பேசுகிறீர்கள்; நீங்கள் ஏன் படகைக் கவிழ்த்து அவர்களை அழிக்க விரும்பு கிறீர்கள்? நீங்கள் ஆசைப்பட்டால், அவர்கள் மனங்களையும் புத்திகளையும் மாற்றுங்களேன்' என்றார்.

சிறிது நேர அமைதிக்குப் பிறகு, மீண்டும் ஒரு குரல், 'என் மகனே, முதலில் நீ கேட்டது என் குரலல்ல, அது சாத்தானுடைய குரல்!' என்றது.

## 84

## உழைப்பில்லை, உணவில்லை

சீனாவின் ஜென் குருவான ஹியாக்ஜோ, தோட்டத்தைப் பராமரிப்பது, தரையைச் சுத்தப்படுத்துவது, மரங்களின் தேவையற்ற கிளைகளை வெட்டுவது என தம் எண்பது வயதில் கூட தம்முடைய சீடர்களோடு உழைத்துக்கொண்டிருந்தார்.

தங்களுடைய குரு கடுமையாக உழைத்துக்கொண்டிருப்பதைப் பார்த்துச் சீடர்கள் கவலைப்பட்டனர். ஆனால், தாங்கள் சொல்லும் எந்தப் பேச்சையும் குரு கேட்க மாட்டார் என அவர்களுக்குத் தெரியும். ஆகவே, குருவின் தோட்ட வேலைக் கருவிகளை ஒளித்துவைத்துவிட்டனர்.

அன்றைய நாளில் குரு சாப்பிடவில்லை. அடுத்த நாளும், அதற்கு அடுத்த நாளும் அவர் சாப்பிடவில்லை. 'நாம் கருவிகளை ஒளித்து வைத்துவிட்டதால் அவர் கோபத்தில் இருக்கலாம்' என்று சீடர்கள் யூகித்தனர். 'நாம் அவற்றைத் திரும்ப எடுத்து வைத்துவிடுவதுதான் சரி' என்று எடுத்து வைத்தனர்.

அப்படிச் செய்ததும், ஆசிரியர் முன்புபோல் வேலை செய்தார், சாப்பிட்டார். அன்று மாலையில் சீடர்களுக்கு உத்தரவிட்டார்: 'உழைப்பில்லை, உணவில்லை.'

## 85

## பாதி வழியில்

குரு செகிஸோவிடம் பிரியாவிடை கேட்க ஒரு துறவி வந்தார்.

'சாலை மார்க்கத்திலா அல்லது கடல் மார்க்கத்திலா எப்படி போகப் போகிறீர்கள்?' என அவரிடம் கேட்டார் செகிஸோ.

'நான் ஒரு படகைப் பார்க்கும்போது அதில் பயணிப்பேன். பூமியைப் பார்க்கும்போது நிலத்தில் பயணிப்பேன்' என சொன்னார் துறவி.

'நான் நினைக்கிறேன், பாதிவழியில் தொங்கப் போகிறீர்கள்' என சொன்னார் செகிஸோ.

அந்தத் துறவி மௌனமாகிவிட்டார்.

# 86

## மெய்யான பாதை கடினமானதல்ல

ஜோஷு துறவிகளின் கூட்டமொன்றில் உரையாற்றினார்:

'மெய்யான வழி கடினமானதல்ல;

ஆனால், தேர்ந்தெடுப்பதும், பற்றுதல்களும் முறையல்ல.

ஒரு சொல்லின் மேல் பற்றிருந்தால்கூட அது சார்புடையதையும் வரம்பற்றதையும் சுற்றிக் கட்டிவிடுகிறது. இந்த முதிய துறவிக்குப் பற்றுதல்கள் இல்லை. இதை நீங்கள் தகுதியுடையது என்கிறீர்களா இல்லையா?'

ஒரு துறவி அவரிடம் கேட்டார்:

'நீங்கள் வரம்பு, பற்றுதலுக்குள் இல்லையென்றால், உங்களால் எப்படி மதிப்பிடவும் ஒப்பிடவும் இயலும்?'

ஜோஷு, 'எனக்கு அதுவும் தெரியாது' என்றார்.

துறவி, 'மதிப்புமிக்கவரே, உங்களுக்கு இன்னும் அது தெரியாத போது, பற்றுகளுக்குள் நானில்லை என்று உங்களால் எப்படிச் சொல்ல முடியும்' என்றார்.

ஜோஷு, 'நீங்கள் கேள்வி கேட்கும்முறை திறமையாக இருக்கிறது. தலைவணங்கிவிட்டுச் செல்லுங்கள்' என்றார்.

## 87

## சேற்றிலுள்ள தாமரை

டோரியோ டோகுவான் சொன்னார்: 'எளிய மக்களுடன் உங்களை ஒப்பிட்டுப் பார்த்து உங்களை உயர்ந்தவர் என்று கருதிக்கொள்ளாதீர்கள். சாதாரண மக்கள் புகழ் மற்றும் லாபத்தின் வழியில் எழுகிறார்கள், விழுகிறார்கள். அவர்கள் வழியைப் பயில்வதுமில்லை, வழியைப் பின்பற்றுவதுமில்லை.

அவர்கள் இரங்கத்தக்கவர்கள். அவர்களைச் சபிக்கவோ, வெறுக்கவோ கூடாது. அவர்களோடு உங்களை ஒப்பிட்டுப் பார்த்துத் தீர்ப்பிடும் எண்ணங்கள் எழ அனுமதிக்காதீர்கள்.

இது துறவிகள், புனிதர்கள், புத்தர்கள் மற்றும் போதிசத்துவர்களின் வழியில் நுழைவதற்குத் தேவைப்படும் மனப்பான்மை. ஆகவே நாம் எளிய மக்களின் நிலையில் நம்மை இருத்திக் கொண்டு எளிய மக்களை ஒன்றுபடுத்தி இணைத்துக்கொள்ளும் அதே வேளையில், நம் எண்ணங்கள் அந்தப் பெரும் வழியில் இருக்கிறது, நாம் அதன் வியப்புகளைக் காண்கிறோம்.'

## 88

# ஒவ்வொரு நிமிடமும் ஜென்

ஜென் மாணவர்கள் தாங்கள் மற்றவர்களுக்குச் சொல்லித்தர ஆரம்பிப்பதற்கு முன் பத்து ஆண்டுகளாவது தங்களுடைய ஆசான்களோடு இருக்கிறார்கள். தன் பயிற்சியை முடித்து ஆசிரியராகி இருக்கும் டென்னோ என்பவர் நான்-இன் என்ற குருவைச் சந்திக்கப் போயிருந்தார். அன்று மழை பெய்து கொண்டிருந்தது. ஆகவே டென்னோ மரத்தாலான காலணிகளை அணிந்துகொண்டு, குடை ஒன்றையும் எடுத்துச் சென்றார். அவரை வரவேற்ற பிறகு நான்-இன், 'என் வீட்டின் முன் னறையில் நீ உன் மரக்காலணிகளை விட்டிருக்கிறாய் என நினைக்கிறேன். நீ உன்னுடைய குடையைக் காலணிகளின் வலப்பக்கம் வைத்திருக்கிறாயா அல்லது இடப்பக்கம் வைத்திருக் கிறாயா எனத் தெரிந்துகொள்ள ஆசைப்படுகிறேன்' என்றார்.

டென்னோ குழம்பிவிட்டார். அவரிடம் உடனடியான பதில் இல்லை. ஒவ்வொரு நிமிடமும் ஜென்னைத் தன்னால் உடன்கொண்டு செல்ல முடியவில்லையே என்பதை அவர் உணர்ந்தார். நான்-இன்னின் மாணவராக மாறி, மேலும் ஆறு ஆண்டுகளுக்கு மேல் கற்று ஒவ்வொரு நிமிடத்துக்குமான ஜென்னை வெற்றிகரமாக அடைந்தார்.

## 89

# இறக்கி விடு

துறவிகள் இருவர் பயணம் செய்து ஓர் ஆற்றை அடைந்த போது அங்கே ஓர் இளம்பெண் நின்றுகொண்டிருப்பதைப் பார்த்தார்கள். அவள் நீரோட்டத்தைப் பார்த்துப் பயந்து நின்று கொண்டிருந்தாள். துறவிகளைப் பார்த்ததும் தன்னை அக்கரையில் தூக்கிக்கொண்டு விடுமாறு வேண்டினாள். ஒரு துறவி தயங்கினார். ஆனால் மற்றவர் உடனே அவளைத் தூக்கித் தோள்மேல் வைத்துக்கொண்டு ஆற்றைக் கடந்து மறுகரையில் இறக்கிவிட்டாள். அவள் மனமார நன்றி சொல்லி விட்டுப் போனாள்.

துறவியர் தங்கள் வழியில் தொடர்ந்து நடந்து செல்லும் போது அந்தப் பெண்ணுக்கு உதவாத துறவி யோசித்துக் கொண்டே ஏதோ சிந்தனையில் இருந்தார். கொஞ்ச நேரத் திற்குப் பிறகு மௌனத்தைத் தொடர முடியாமல் பேசி விட்டார்:

'சகோதரரே! நம் ஆன்மிகப் பயிற்சி பெண்களைவிட்டு ஒதுங்கியிருங்கள் என்று சொல்கிறது. ஆனால் நீங்கள் அந்தப் பெண்ணைத் தொட்டுத் தூக்கித் தோளில் வைத்துக்கொண்டு ஆற்றைக் கடந்தீர்களே!'

'சகோதரரே! அவளை ஆற்றின் கரையில் இறக்கி விட்டு விட்டேன். ஆனால் நீங்கள் இன்னும் சுமந்துகொண்டு வருகிறீர் களே?' என்றார் இரண்டாவது துறவி.

90

## சாமுராயின் கோபம்

ஒரு நாள் சாமுராய் ஒருவர், ஒரு மீனவரிடம் கடனை வசூல் செய்யப் போயிருந்தார். மீனவர், 'என்னை மன்னித்துவிடுங்கள். சென்ற ஆண்டு எனக்கு மிகவும் மோசமாகப் போய்விட்டது. உங்கள் கடனைத் திருப்பித் தர என்னிடம் பணமில்லை என்பதை வருத்தத்தோடு தெரிவித்துக்கொள்கிறேன்' என்றார். சட்டென்று கோபப்பட்ட சாமுராய் வாளை உருவி அங்கேயே மீனவரைக் கொல்லத் தயாரானார்.

வேகமாகச் சிந்தித்த மீனவர் துணிச்சலாக, 'நானும் தற்காப்புக் கலையைக் கற்றுக்கொண்டிருக்கிறேன். என் குரு கோபத்தில் ஒருபோதும் தாக்கக்கூடாது என்று சொல்லி இருக்கிறார்' என்றார்.

அந்த மீனவரை ஒரு நிமிடம் பார்த்த சாமுராய் தம் வாளை மெதுவாகத் தாழ்த்தினார். பிறகு அமைதியாக, 'உங்கள் குரு விவேகமானவர். என் குருவும் எனக்கு அப்படித்தான் சொல்லித் தந்திருக்கிறார். சில சமயம் என் கோபம் என்னை வென்று விடுகிறது. நீங்கள் கடனைத் திருப்பித் தர ஒரு ஆண்டு அவகாசம் தருகிறேன். தரவேண்டியதில் ஒரு ரூபாய் குறைந்தாலும் உங்களை நிச்சயம் கொன்றுவிடுவேன்' என்ற சாமுராய் வீடு திரும்பினார்.

வீடு திரும்பக் கால தாமதமாகிவிட்டதால், தன் மனைவியை எழுப்ப விரும்பாமல் நேரடியாகப் படுக்கை அறையில் நுழைந்தார் சாமுராய். அங்கே தம் மனைவியுடன் சாமுராய் உடையணிந்த ஒருவர் படுத்திருப்பதைக் கண்டார். உடனே பொறாமையிலும் கோபத்தின் வேகத்திலும் இருவரையும் கொன்றுவிடத் தம்

வாளை உயர்த்தினார். அப்போது மீனவரின் சொற்கள் நினைவுக்கு வந்தன,

'கோபத்தில் ஒருபோதும் தாக்கக்கூடாது!'

சாமுராய் ஒருகணம் நிறுத்தி ஆழ்ந்து மூச்சிழுத்தார். பிறகு வேண்டுமென்றே ஒரு பெரிய சப்தத்தைப் போட்டார்.

சாமுராயின் மனைவி உடனடியாக எழுந்தாள். கூடவே அந்த 'வேறு ஆளும்' எழுந்தார். அந்த வேற்றாள் சாமுராயின் அம்மாவாக இருந்தாள். 'இதற்கென்ன அர்த்தம்? கொஞ்சம் தாமதமாகி இருந்தால், நான் உங்கள் இருவரையும் கொன்றிருப்பேன்' என்று கத்தினார்.

சாமுராயின் மனைவி, 'நாங்கள் கொள்ளையர்களுக்குப் பயந்து இருந்தோம். அதனால் கொள்ளையர்களைப் பயமுறுத்த உங்களுடைய அம்மாவுக்கு உங்களுடைய உடைகளை அணிவித்தேன்' என்றாள்.

ஓர் ஆண்டு சென்றதும் மீனவர், சாமுராயைப் பார்க்க வந்தார். அவர் சாமுராயிடம், 'இந்த ஆண்டு அருமையாக இருந்தது. நீங்கள் கொடுத்த கடனை வட்டியோடு திருப்பித் தருகிறேன், இந்தாங்க' என்று மீனவர் அவருக்கு மகிழ்ச்சியோடு சொன்னார். 'நீங்களே உங்கள் பணத்தை வைத்துக் கொள்ளுங்கள்' பதில் சொன்னார் சாமுராய். 'ஏற்கனவே நீங்கள் கடனைக் கொடுத்து விட்டீர்கள்.'

## தம்ம பதம்

*(அஜான் முனிண்டோவின் ஆங்கில மொழிபெயர்ப்பிலிருந்து)*

எல்லா மனநிலைகளும் மனதால்தான் தீர்மானிக்கப்படுகின்றன. மாட்டுவண்டிச் சக்கரம் வண்டியை இழுக்கும் மாட்டின் குளம்படியைத் தொடர்வது போல, மனதே வழிகாட்டுகிறது. ஆகவே தூய்மையற்ற மனத்தோடு உணர்ச்சிவசப்பட்டுப் பேசும்போதும், செயல்படும் போதும் துன்பம் நிச்சயம் தொடரும்.

***

எல்லா மனநிலைகளும் மனதால்தான் தீர்மானிக்கப்படுகின்றன. மனதே வழிகாட்டுகிறது. நாம் தூய்மையான மனத்தோடு பேசும்போதும் செயல்படும் போதும் நம் நிழல் நம்மைவிட்டு நிச்சயம் நீங்காதது போல நலவாழ்வு நம்மைத் தொடரும்.

***

'அவர்கள் என்னைத் திட்டினார்கள். என்னைத் தவறாக நடத்தினார்கள்; எனக்குத் தொல்லை தந்தார்கள், என்னைக் கொள்ளையடித்தார்கள்' போன்ற எண்ணங்களை நாம் இறுகப் பிடித்திருக்கும்வரை, நாம் வெறுப்பை நிறைவாக வைத்திருக்கிறோம்.

***

'அவர்கள் என்னைத் திட்டினார்கள், என்னைத் தவறாக நடத்தினார்கள், எனக்குத் தொல்லை தந்தார்கள், என்னைக் கொள்ளையடித்தார்கள்' போன்ற எண்ணங்களிலிருந்து நம்மை நாம் விடுவித்துக்கொண்டால், வெறுப்பு முற்றிலும் மறைந்துவிடும்.

***



வெறுப்பால் வெறுப்பை ஒருபோதும் வெல்ல முடியாது,
அன்பினால் மட்டுமே வெறுப்பை வெல்ல முடியும்,
இது பிரபஞ்ச விதி.

***

சச்சரவு செய்பவர்கள் நாம் அனைவரும் இறக்கப் போகிறோம்
என்பதை மறந்துவிடுகிறார்கள்; விவேகமானவர்கள்
இந்த உண்மையை நினைத்துப் பார்ப்பதால் அவர்களுக்கு
சண்டை சச்சரவில்லை.

# இயல் ஆறு

## மாட்டின் மீது அமர்ந்து வீடு திரும்புதல்



六 騎牛歸家

மாட்டின் மீதேறி, நான் மெதுவாக வீட்டை
நோக்கித் திரும்புகிறேன்.
என் புல்லாங்குழலின் ஒலி மாலையில் இசைந்து ஒலிக்கிறது.
துடிக்கும் பண்ணிசையைக் கைத் தாளத்தால் அளந்து,
முடிவற்ற லயத்தை இயக்குகிறேன்.
இந்த இன்னிசையைக் கேட்பவர்கள் எவராக இருந்தாலும்
என்னோடு சேர்ந்துகொள்வார்கள்.

'மாட்டின் முதுகில் அமர்ந்து,
புல்லாங்குழலை வாசித்தபடி வீடு திரும்புதல்.
தேடியவர் தாம் தொலைத்ததை அல்லது
தான் தேடிக்கொண்டிருந்ததைக் கண்டுவிட்டார்.
அதைப் பிடித்து, பழக்கி
அதன் உடைமையாளராகிவிட்டார்.
அங்கே நிச்சயத்தன்மை, அமைதி, மகிழ்ச்சி,
இசை ஆகிவையும் உள்ளன.

போராட்டம் முடிந்தது,
அல்லது அப்படித்தான் தெரிகிறது.'

## 91

## டோரிட்டென் சூடன்

19ஆம் நூற்றாண்டில், வியாபாரிகளுக்கு உயர்வான மரியாதை தரப்படவில்லை; குறிப்பாக, அவர்கள் துணிச்சலற்றவர்களாகக் கருதப்பட்டனர். அவர்களில் சிலர் இதற்காக இயற்கையாக வருந்தி தாங்கள் அப்படி அல்ல என்று நிரூபிக்க முயன்றார்கள். அந்தக் காலத்தில் வியாபாரி ஒருவர் அப்போது டோரிட்டெ என்று அழைக்கப்பட்ட தற்காப்புக் கலையைப் பயின்றார், தாக்குபவனின் ஆயுதத்தைப் பறித்து அவனைச் சிறைப் பிடிக்கும் கலை அது. அவர் அதை மிக நன்றாகப் பயின்று அந்தக் கலையில் நிபுணத்துவம் பெறுபவர்களுக்குத் தரப்படும் பட்டத்தையும் பெற்றிருந்தார். ஓர் இரவுவேளையில், திருடனொருவன் வியாபாரியின் வீட்டுக்குள் புகுந்து, வாளைச் சுழற்றி பணம் கேட்டுப் பயமுறுத்தினான். வியாபாரி பணம் தர மறுத்தார். சாமுராய் வீரரான திருடன், 'என்ன, ஒரு வியாபாரியான எலிப்பயல் என் எதிரே சவால்விட்டு நிற்பதா! இரு, கிழித்து விடுகிறேன்' என்று கத்தியபடி வியாபாரியை நோக்கி வாளோடு பாய்ந்தான். 'வியாபாரி எலிப்பயல்' என்ற சொற்களைக் கேட்டவுடன் வியாபாரிக்கு வியர்த்துக் கொட்ட ஆரம்பித்தது. முழங்கால்கள் நடுங்கின. வியாபாரி கருணை காட்டச் சொல்லிக் கெஞ்சலாம் என்று இருந்தார்.

அப்போது அவர் மனைவி, 'நீ வியாபாரியல்ல, டோரிட்டென் சூடன்' என்றாள்.

சட்டென வியாபாரியின் உடல் நிமிர்ந்தது. கால்கள் வலுப்பெற்றன. வியாபாரி திருடன் மீது பாய்ந்து, ஆயுதத்தைப் பறித்து அவனை வீட்டுக்கு வெளியில் வீசினார்.

## 92

# பிறப்பும் இறப்பும்

கோஷு ஜென் குருவான யு-இயிடம் வந்து, 'நான் ஜென்னைப் பல ஆண்டுகள் கற்றும் அதில் தேற முடியவில்லை. தயவுசெய்து கொஞ்சம் எனக்கு வழிகாட்டுங்கள்' என்று சொன்னார். யு-இ, 'ஜென்னைப் பயில இரகசியமான தந்திர வழியேதும் இல்லை. பிறப்பு இறப்பிலிருந்து விடுதலை அடைவதுதான் விஷயம்' என்றார்.

கோஷு, 'ஒருவர் பிறப்பு இறப்பைக் கடந்து விடுதலையடைவது எவ்வாறு?' என்று கேட்டார். யு-இ தன் குரலை உயர்த்திச் சொன்னார், 'உனது எண்ணம் ஒவ்வொன்றும் பிறப்பு இறப்புதான்!' இந்தச் சொற்களைக் கேட்டவுடன் கோஷு பெரிய பாரத்தை இறக்கி வைத்ததைப் போல் ஆசுவாசமடைந்து, பேரின்பம் கொண்டார்.

## 93

## எங்கே நான் அமர முடியும்?

ஒரு தாவோயிஸ குரு புத்த ஆலயத்துக்கு வந்தார். அவர் அங்கிருந்த புத்தரின் சிலைக்கு முன்பு தம் பின்பக்கத்தைக் காட்டி அமர்ந்தார்.

'ஓ தாவோயிஸரே, புத்தருக்கு முன்னால் உங்களுடைய பின்பக்கத்தைக் காட்டிக்கொண்டு உட்காரக்கூடாது' என்றார் ஒரு துறவி.

'புண்ணியவான் புத்தர் எங்கும் இருக்கிறார். நீயே சொல், எங்கே நான் உட்கார்வது?' என்று கேட்டார் தாவோயிஸியர்.

## 94

## புத்தரின் உள்ளங்கையில்

ஜப்பானில் வசித்துவந்த பௌத்த பெண் துறவி ஒருவர் தன் சிறந்த பண்புகளாலும், தொலைநோக்காலும், கருணைகொண்ட அணுகுமுறையாலும் தாம் வாழ்ந்த சமூகத்தில் மிகப் பெரும் செல்வாக்குடையவராக இருந்தார். அவர் பௌத்தத்துக்கு எவ்வாறு தம் வாழ்வை அர்ப்பணித்தார் என்று ஒருமுறை அவரிடம் கேட்கப்பட்டது.

அதற்கு அவர், 'சிறு குழந்தையாக இருக்கும்போதே பெற்றோரை இழந்து, ஒரு கோயிலின் பொறுப்பாளராக இருந்த அத்தையால் வளர்க்கப்பட்டேன்' என்று சொன்னார். அத்தை பல காரியங்களில் எப்போதும் ஈடுபட்டுக்கொண்டிருந்ததால், குழந்தைக்குத் தேவைப்படும் அளவுக்கு அதனுடன் நேரத்தைச் செலவிட இயலவில்லை. சிறுமியாய் இருந்த குழந்தையை அத்தை ஒருமுறை கோயிலுக்குள் அழைத்துச் சென்று புத்தருடைய சிலைமுன் நிறுத்தினாள். அது இரண்டு கைகளையும் ஒன்றன் மீது ஒன்றை வைத்து தர்ம உலகத்தின் மீது தியானம் என்றழைக்கப்படும் தியானநிலை புத்தரின் சிலை அது.

வலதுகை இடதுகையின் மீது வைக்கப்பட்டிருக்கும், இரண்டு சுட்டுவிரல்களும் மடிந்திருக்க, இரண்டு கட்டை விரல்களும் சேர்ந்து கிட்டத்தட்ட வட்ட வடிவம் தரும்.

குழந்தையைப் புத்தரிடம் ஒப்படைத்து, அவளைக் கவனித்துக் கொள்ளுமாறு கேட்டாள் அத்தை.

அவர்கள் கோயிலைவிட்டு வெளியே வந்ததும் அத்தை, 'நீ ஏதாவது தவறு செய்து, அது புத்தரைக் கோபப்படுத்திவிடலாம் என்று தோன்றினால் உடனடியாக ஏதாவது நற்செயலைச் செய்து நீ தவறுக்கு வருந்துவதைக் காட்டிவிடு; ஓடிப்போய் யாருக்காவது உதவு. கோயிலைத் துடைத்து சுத்தப்படுத்து அல்லது சிதறிக் கிடப்பவற்றை எடுத்து அடுக்கிவை. அப்புறம் போய் புத்தரைப் பார். அவர் உன்னிடம் கோபமாக இருந்தால், அவருடைய விரல்கள் இரண்டு கூரான கொம்புகள் போலிருக்கும். அந்த இடுக்கில் நீ அப்படியே வழுக்கி நரகில் விழும் ஆபத்து அது. அவர் உன்னை மன்னித்திருந்தால், அவருடைய விரல்கள் இப்போது இருப்பது போல் இரண்டு வட்டங்களாக இருக்கும்' என்று சொன்னார்.

இது என் மனதில் ஆழப் பதிந்துவிட்டது. 'பலமுறை கோயிலுக்கு ஓடி தோட்டத்தை அவசர அவசரமாகச் சில நிமிடங்களுக்குப் பெருக்கிச் சுத்தம் செய்துவிட்டு புத்தரின் விரல்களைப் பார்க்கத் துணிச்சலற்றுக் கோயிலுக்குள் மெல்ல நுழைந்தது நினைவிருக்கிறது. புத்தரின் விரல்கள் வட்டங்களாக இருப்பதைப் பார்க்கும்போது எனக்கு எவ்வளவு நிம்மதியாக இருந்தது என்பதை என்னால் இப்போது உங்களிடம் சொல்ல முடியவில்லை, நான் மன்னிக்கப்பட்டுவிட்டேன் என்பது தெரிந்தது.'

இந்தக் கட்டத்தில் குறுக்கிட்ட ஒருவர், 'குழந்தைகளின் செயல்பாடுகளைக் கட்டுப்படுத்த இந்த மாதிரி மூடநம்பிக்கையுள்ள பொய்களைப் பயன்படுத்துவது என்னால் ஏற்றுக் கொள்ள முடியாது' என்று வாதிட்டார்.

'அவர்கள் தாங்கள் ஏமாற்றப்பட்டுவிட்டதைத் தெரிந்து கொள்ளும் போதுதான் இதற்கெல்லாம் எதிர்வினை ஆற்றுவர். கோபமும் சந்தேகமும் கலந்த எதிர்வினை உங்களுக்கு வரவில்லையா?' என்றார். பெண் துறவி, 'அது பொய்யல்ல. என் அத்தை ஒருபோதும் பொய் சொல்லியிருக்கமாட்டாள். புத்தர் தன் விரல்களை நகர்த்தவே மாட்டார் என்பது எனக்குத் தெரிந்தபோது, புத்தர் எப்போதும் மன்னிப்பார் என்பதை உணர்ந்துகொண்டேன். மனவுறுதியற்ற தருணத்திலும் பாவம் செய்த கணத்திலும் புத்தர் மன்னித்துவிடுகிறார். அவர் ஒருபோதும்

கோபப்படுவதில்லை. இதனால், மீண்டும் மீண்டும் புத்தர் என்னை மன்னித்துக்கொண்டிருக்கவே கூடாது என்று உணர்ந்தேன். அவர் மன்னிக்கத் தேவையில்லாத அளவுக்கு வாழ நான் ஆசைப்பட்டேன். சபலத்தாலும் பயத்தாலும் ஏற்பட்ட சிக்கலான பிரச்சினைகளை எதிர்கொள்ள இது பெருமளவுக்கு எனக்கு உதவியது.

கல் புத்தரின் விரல்களைப் பார்த்து இதைத்தான் நான் புரிந்துகொள்ள வேண்டுமென்று விரும்பினாள் என் அத்தை.'

95

## மெய்யான வளம்

ஒரு பணக்காரர், தம் குடும்பத்தின் வளம் தலைமுறை தலைமுறையாகத் தொடர, வழிசெய்வதற்கு எதையாவது எழுதித் தரும்படி குரு செங்கையிடம் கேட்டார். அதைத் தலைமுறைகளுக்குப் போற்றிப் பாதுகாத்துக்கொள்வதாகச் சொன்னார்.

செங்கை ஒரு பெரிய தாளை எடுத்து அதில் எழுதினார்: 'தந்தை இறப்பார், மகன் இறப்பான், பேரன் இறப்பான்.'

பணக்காரருக்குக் கடுமையான கோபம் வந்துவிட்டது. 'என் குடும்பத்தின் மகிழ்ச்சிக்காக எதையாவது எழுதித் தாருங்கள் என்று நான் கேட்டேன்! இதை ஏன் இப்படிப் பகடி செய்தீர்கள்?'

'பகடி ஏதுமில்லை' என்று விளக்கினார் செங்கை. 'நீங்கள் இறப்பதற்கு முன்னால் உங்கள் மகன் இறந்துவிட்டால், இது உங்களுக்கு மாபெரும் துயரமாகிவிடும். உங்கள் மகன் சாவதற்கு முன்பே உங்கள் பேரன் இறந்துவிட்டால், உங்கள் இருவரின் இதயங்களும் நொறுங்கிவிடும். தலைமுறை தலைமுறையாக உங்கள் குடும்பத்தில் உள்ளவர்கள் இந்த வரிசையில் இறக்க வேண்டும் என்பதை எழுதியிருக்கிறேன். வாழ்வின் இயல்பான ஓட்டம் இப்படித்தான் இருக்கும்.

இதை நான் மெய்யான வளம் என்கிறேன்.'

# 96

## தண்ணீர்க் குடத்தை எட்டி உதைத்தல்

குரு கியாக்ஜோவிடம் தங்கியிருந்த சமயத்தில், ஈசான் சமையல் செய்யும் துறவியாக இருந்தார். பெரிய மலையில் ஒரு புதிய மடாலயம் தொடங்குவதற்கு, ஒரு துறவியை அனுப்ப ஆசைப் பட்டார் கியாக்ஜோ. இதற்கு யார் மிகச் சிறந்தவர் என்பதைத் தேர்ந்தெடுக்கப் போகிறேன் என்று முதன்மைத் துறவியிடமும் பிற துறவிகளிடமும் சொன்னார். பிறகு கியாக்ஜோ ஒரு தண்ணீர்க் குடத்தைக் கொண்டுவந்து வைத்து, 'நீங்கள் அதைத் தண்ணீர்க் குடம் என்று சொல்லக்கூடாது. அப்படி யென்றால், அதை என்னவென்று சொல்வீர்கள்?' என்று கேட்டார்.

தலைமைத் துறவி, 'இதை மரக்கட்டை என்று ஒருவர் சொல்ல முடியாது' என்றார். பிறகு, குரு கியாக்ஜோ ஈசானிடம் திரும்பிய போது, ஈசான், குடத்தைத் தம் காலால் உதைத்து விட்டுப் போனார். கியாக்ஜோ சிரித்துவிட்டு, 'ஈசானிடம் தலைமைத் துறவி தோற்றுவிட்டார்' என்று சொன்னார்.

புகழ்பெற்ற ஈசான் மடாலயத்தின்
நிறுவனராக ஈசானைத் தேர்ந்தெடுத்தார்.

## 97

# இங்கே கொஞ்சம், அங்கே கொஞ்சம்

குரு முஜாக்குவிடம் மஞ்சுஸ்ரி, 'சமீபத்தில் எங்கே போய் இருந்தீர்கள்?' என்று கேட்டார்.

'தெற்கே போயிருந்தேன்' என்றார் முஜாகு.

மஞ்சுஸ்ரி, 'தெற்கே புத்தருடைய போதனை எடுபடுகின்றதா?' என்று கேட்டார். அதற்கு முஜாக்கு, 'புத்தரின் போதனை சரிந்து கொண்டிருக்கிறது, துறவிகள் ஒழுக்கத்தைக் கடைப்பிடிப்ப தில்லை' என்றார்.

'அங்கே எத்தனை துறவிகள் இருக்கிறார்கள்?' என்று கேட்டார் மஞ்சுஸ்ரி.

'சில சமயம் முந்நூறு, சில சமயம் ஐந்நூறு, அது மாறிக் கொண்டே இருக்கும்' என்ற முஜாகு, 'இங்கே எப்படிப் போய்க் கொண்டிருக்கிறது?' என்று கேட்டார். அதற்கு மஞ்சுஸ்ரி, 'மக்களும் துறவிகளும் சேர்ந்து வாழ்கிறார்கள். டிராகன்களும் பாம்புகளும் கலந்துவாழ்கின்றன' என்றார்.

முஜாக்கு, 'இங்கே எத்தனை துறவிகள் இருக்கிறார்கள்' என்று கேட்டார்.

'மூன்று-மூன்று முன்னால், மூன்று-மூன்று பின்னால்' என்றார் மஞ்சுஸ்ரி—அதாவது 'இங்கே கொஞ்சம், அங்கே கொஞ்சம்.'

# 98

## தேநீர்ச் சடங்குச் சண்டை

பண்டைய ஜப்பானில் தேயிலைச் சடங்கில் மிகப் பெரிய குரு ஒருவர் தெரியாமல் ஒரு வீரரை அவமதித்துவிட்டார். அவர் உடனடியாக மன்னிப்புக் கேட்டார். ஆனால், மூர்க்கமான அந்த வீரர் ஒருவரோடு ஒருவர் வாளோடு மோதிக் கணக்கைத் தீர்த்துக்கொள்ளலாம் என்றார். வாள் பயிற்சியில்லாத தேயிலை குரு, வாள்பயிற்சியும் அந்தப் போர்த்திறனும் உள்ள ஜென் குரு ஒருவரிடம் அறிவுரை கேட்டார். தேயிலை குரு தம் நண்பருக்குத் தேயிலை ஊற்றித் தந்த போது அமைதியோடும் கவனத்தோடும் தம் தேயிலைச் சடங்குக் கலையை நடத்தினார். அதைப் பார்த்த ஜென் குரு, 'நாளை, அந்த வீரரோடு நீங்கள் நேருக்கு நேர் மோதும் போது தாக்குவதற்குத் தயாராக இருப்பதைப் போல உங்களுடைய ஆயுதத்தை உங்கள் தலைக்கு மேல் உயர்த்திப் பிடியுங்கள். எத்தனை கவனத்தோடும் அமைதியோடும் இந்த தேயிலைச் சடங்கை நடத்துகிறீர்களோ, அதே கவனத்துடனும் அமைதியோடும் அந்த வீரரை எதிர் கொள்ளுங்கள்' என்றார். தேயிலை குரு ஜென் குருவின் அறிவுரையைப் பின்பற்றினார். அடுத்த நாள் குறித்திருந்த நேரத்தில், மோதலுக்குத் தன்னைத் தயார் செய்துகொண்டிருந்த வீரர், முழுக் கவனத்தோடு, ஆனால் அமைதியாக இருந்த தேயிலை குருவின் முகத்தை நெடுநேரம் வெறித்துப் பார்த்தார்.

கடைசியில், வீரர் தம் வாளைக் கீழிறக்கி தம்முடைய திமிர்த்தனத்துக்காக மன்னிப்புக் கேட்டுவிட்டு வாளை ஒருமுறைகூட வீசாமல் போய்விட்டார்.

## 99

## குருவை வியப்பில் ஆழ்த்துதல்

துறவு மடத்து மாணவர்கள் மூத்த துறவியின் மீது பெரும் மதிப்பு அச்சத்தில் இருந்தனர். அவர் கண்டிப்பாக இருந்ததால் அல்ல, எதுவுமே அவரைத் தடுமாற வைப்பதாகவோ, மனக் கலக்கம் அடைய வைப்பதாகவோ தோன்றவில்லை என்பதால். அவர் இயல்பு கடந்தவராக, பயமுறுத்துகிறவராக இருந்தார். மாணவர்கள் ஒருநாள் அவரை சோதிப்பதற்குத் தீர்மானித்தனர். அவர்களில் சிலர் ஹாலின் இருண்ட பகுதியில் ஒளிந்துகொண்டு, மூத்த துறவி வருவதை எதிர்பார்த்துக் காத்திருந்தார்கள். சில கணங்களுக்குள், முதியவர் ஒரு கோப்பையில் கொதிக்கும் தேநீரை எடுத்துக்கொண்டு நடந்துவந்தார். மாணவர்கள் இருந்த பகுதியை அவர் கடக்கும்போது, மாணவர்கள் தங்களால் இயன்ற அளவுக்குக் கத்திக்கொண்டு அவரை நோக்கி வெளியே ஓடிவந்தனர். ஆனால் துறவி எந்த எதிர்வினையையும் காட்டவில்லை. அவர் அந்த நடைவழியின் கடைசியில் இருந்த சிறிய மேசைவரை அமைதியாக நடந்து சென்று, கோப்பையை மெதுவாக அந்த மேசையில் வைத்தார். பிறகு சுவரின் மீது சாய்ந்தபடி, அதிர்ச்சியில் ஓவென்று அழுதார்.

# 100

## புளித்த மிஷோ

குரு பங்கெய்யின் மடாலயத்தில் சமையல்காரத் துறவியாக இருந்தவர் டைரியோ. வயதான தம் குருவின் ஆரோக்கியத்தை நல்லபடியாக கவனிக்க வேண்டுமென முடிவெடுத்தார். ஜப்பானிய உணவான மிஷோ—அரைத்த சோயா பீன்ஸ் பசையுடன் பார்லியும் ஈஸ்டும் சேர்க்கும்போது, பெரும்பாலும் புளித்துவிடும். இதனால், அவருக்காக அன்றாடம் புதிய மிஷோ தயாரித்துக் கொடுப்பதற்கு முடிவெடுத்தார். பங்கெய் தம் சீடர்களுக்கு இப்படிப் புதிய மிஷோவைக் கொடுக்காமல் தமக்கு மட்டுமே கொடுப்பதைக் கவனித்துவிட்டுக் கேட்டார்: 'இன்று சமைத்த சமையல்காரர் யார்?'

டைரியோ அவர் முன்னால் அனுப்பப்பட்டார். தம் வயதின் காரணத்தாலும், உயர்ந்த பொறுப்பின் பொருட்டும் புதிய மிஷோவை மட்டுமே தாம் சாப்பிட வேண்டுமென அறிந்துகொண்டார். அதனால், அவர் சமையல்காரரிடம் சொன்னார்: 'அப்போ, நீங்கள் நான் சாப்பிடவே கூடாது என்று நினைக்கிறீர்கள்' என்று சொல்லிவிட்டு, தம் அறைக்குச் சென்று கதவைத் தாளிட்டுக்கொண்டார்.

டைரியோ அந்த அறையின் கதவுக்கு வெளியே உட்கார்ந்து கொண்டு ஆசிரியரிடம் மன்னிப்புக் கேட்டார். பங்கெய் பதில் சொல்லவில்லை. ஏழு நாள்கள் டைரியோ வெளியில் உட்கார்ந் திருக்க பங்கெய் உள்ளுக்குள் இருந்தார்.

கடைசியில் விரக்தியடைந்த குருவின் நெருங்கிய சீடர் ஒருவர் சத்தமாக பங்கெயிடம் குரல் கொடுத்தார்: 'நீங்கள்

சொல்வது சரியாக இருக்கலாம், ஆனால் இந்த இளைஞரான சீடர் எப்போதும் உணவின்றி இருக்க முடியாது!'

அந்தச் சமயத்தில் கதவைத் திறந்த பங்கெய் புன்னகைத்தார். டைரியோவிடம் அவர் சொன்னார்: 'என்னைப் பின்பற்றும் மிக எளியவர்கள் உண்ணும் அதே உணவைத்தான் நானும் சாப்பிட விரும்புகிறேன். நீ ஆசிரியராக ஆகும்போதும் இதை மறந்துவிடக் கூடாது' என்று வலியுறுத்தினார்.

## 101

# தலைவிதி

மாபெரும் போர் நடந்து கொண்டிருந்தது. ஒரு ஜப்பானியத் தளபதி, அவருடைய படை மிகவும் சிறியதாக இருந்தபோதும், தாக்குதல் நடத்த முடிவு செய்தார். தாம் வெல்வோம் என்று தளபதி நம்பிக்கையோடு இருந்தார். ஆனால் அவருடைய வீரர்கள் மிகவும் சந்தேகத்தோடு இருந்தார்கள். போர் நடக்கும் இடத்துக்குப் போய்க்கொண்டிருந்தபோது, வழியில் ஒரு கோயிலில் நின்றார்கள். தன் வீரர்களோடு சேர்ந்து பிரார்த்தனை செய்து முடித்த தளபதி ஒரு நாணயத்தை எடுத்து வீரர்களிடம் காட்டி, 'இப்போது நாணயத்தைச் சுண்டிவிடப் போகிறேன். தலை விழுந்தால் நாம் வெல்வோம், பூ விழுந்தால் தோற்று விடுவோம். விதி என்ன என்பது இப்போது தெரிந்துவிடும்' என்றார். அவர் நாணயத்தைச் சுண்டிவிட்டார். வீரர்கள் ஆர்வத்தோடு பார்த்துக்கொண்டிருக்க, நாணயம் தரையில் விழ, அதில் தலை விழுந்தது. வீரர்கள் மிகவும் உற்சாகமடைந்து நம்பிக்கையோடு தீரமாக எதிரிகளைத் தாக்கிப் போரில் வென்றனர். போருக்குப் பின்னர் துணைத் தளபதி, 'விதியை யாராலும் மாற்ற முடியாது' என்று தளபதியிடம் குறிப்பிட்டார். 'மிகவும் சரி' என்ற தளபதி நாணயத்தைத் துணைத் தளபதியிடம் காட்டினார். நாணயத்தின் இரண்டு பக்கங்களிலும் த்லை இருந்தது.

## 102

# அவருடைய வாழ்நாளில் ஒரு புன்னகை

மோக்குகன் வாழ்நாளில் கடைசி நாள்வரை அவர் புன்னகைத் ததை யாரும் பார்த்ததில்லை. அவருடைய காலம் முடியும் தறுவாயில் அவர் தம் நம்பிக்கைக்குரிய சீடர்களை அழைத்துப் பேசினார்: 'பத்து ஆண்டுகளுக்கும் மேலாக நீங்கள் என்னிடம் கற்று வந்தீர்கள். ஜென்னின் அசலான விளக்கத்தை எனக்குச் சொல்லுங்கள். உங்களில் யார் இதைத் தெளிவாக வெளிப்படுத்து கிறார்களோ, அவர் என் வாரிசாவார். அவர் என் மேலங்கியையும் உணவுக்கிண்ணத்தையும் பெறுவார்' என்றார்.

ஒவ்வொருவரும் மோக்குகன்னின் கடுகடுத்த முகத்தைக் கவனித்தனர். ஆனால் யாருமே பதில் சொல்லவில்லை.

ஆசிரியரிடம் வெகு காலமாக கூடவே இருந்துகொண்டிருந்த என்சோ என்ற சீடர், குருவின் படுக்கைக்கு அருகில் போனார். அங்கிருந்த குருவின் மருந்துக் கோப்பையைச் சில அங்குலம் முன்னே தள்ளி வைத்தார். அந்த உத்தரவுக்கு என்சோ கொடுத்த பதில் இதுதான்.

ஆசிரியரின் முகம் இன்னும் கடுமையாக மாறியது. 'நீ புரிந்து கொண்டது அவ்வளவுதானா?' அவர் கேட்டார்.

என்சோ அந்தக் கோப்பையை மறுபடியும் பின்னால் தள்ளி வைத்தார்.

மோக்குகன்னின் முகபாவனையில் அழகான புன்னகை தெறித்தது. 'குறும்புப் பயலே' அவர் என்சோவிடம் சொன்னார். 'நீ என்னோடு பத்து ஆண்டுகளாக இருந்திருக்கிறாய். நீ இன்னும் என் உடலை முழுசாகப் பார்த்ததில்லை. அந்த மேலங்கியையும் உணவுக் கிண்ணத்தையும் எடுத்துக்கொள்.

அவை உனக்குத்தான் சொந்தம்.'

## 103

### நான் அல்ல*

பௌத்தத் துறவியொருவர் ஒருமுறை சொன்னார்:
இந்த நானை நானல்ல என்று மறுப்பது
ஒரு பொய்; இதுவல்ல என்றால்,
'நானல்ல நான்' என்று சொல்வது யாரென்று
தெரிந்துகொள்ள நான் விரும்புகிறேன்.

* நீனா கோல்ட்டார்ட்டின் குறுங்கவிதை.

# 104

## யார் அந்த ஒருவர்?

டோஸான் சொன்னார்:
'சாக்யமுனியும் மைத்ரேயாவும் ஒருவருடைய
சேவகர்களே, எனக்கு இதை மட்டும் சொல்லுங்கள்
யார் அந்த ஒருவர்?'

***

*பண்டைய ஜென் எழுத்துகளில் பதிவு செய்யப்பட்டுள்ள இந்தக் கோவானைப் பற்றி புகழ்பெற்ற கதையொன்று உள்ளது. குரு ஷோகாகு குரு கோசோவின் சீடராக இருந்த போது அவரிடம், 'யார் அவர்?' என்று கேட்டார். அவர் 'கோச்சோசன், கோகுரிஷி' என்றார். ஆங்கிலத்தில் ஜான், ஜார்ஜ் என்னும் புகழ்பெற்ற பெயர்களைப் போல, ஜப்பானிய மொழியில் டாரோ, ஜீரோ என்ற புகழ்பெற்ற பெயர்களைப் போல கோச்சோசன், கோகுரிஷி போன்ற பெயர்களும் புகழ்பெற்றவை. கோசோ இந்தப் பதிலைப் பற்றி எங்கோவிடம் சொன்னார். எங்கோ, 'இந்தப் பதில் சரியானதைப் போல் தெரிகிறது. ஆனால் இதைச் சொன்னவரின் அனுபவம் உண்மையானதா, இல்லையா என்று தெரியவில்லை. அவரை மீண்டும் ஒருமுறை விசாரித்துப் பாருங்கள்' என்றார். ஆகவே, அடுத்த நாள் ஷோகாகு அவரிடம் வந்தபோது, குரு கோசோ மீண்டும் அதே கேள்வியை, 'சாக்யமுனியும் மைத்ரேயாவும் அந்த ஒருவருடைய சேவகர்களே. யார் அந்த ஒருவர் என்பதை மட்டும் கூறுங்கள்' என்றார். ஷோகாகு 'நான் நேற்றே சொன்னேனே' என்றார். கோசோ, 'நீங்கள் என்ன*

*சொன்னீர்?' என்று கேட்டார். ஷோகாகு, 'கோச்சோசன், ஜோகுரிஷி' என்றார். கோசோ, 'சரியல்ல! சரியல்ல!' என்றார். ஷோகாகு, 'நேற்று நீங்கள் சரியென்றீர்களே?' என்றார். கோசோ, 'நேற்று அது சரி, இன்றைக்கு அது சரியல்ல' என்றார்.*

*இதைக் கேட்டதும், ஷோகாகு ஆழ்ந்த விழிப்புணர்வை அடைந்தார்.*

## 105

## ஞானமடைந்தவர் யார்?

ஒரு சமயம் துறவியொருவர் ஒரு கிழவியிடம், 'டய்சானுக்குப் போகும் வழி என்ன?' என்று கேட்டார். அந்தக் கிழவி, 'நேராகச் செல்லுங்கள்' என்று சொல்லிவிட்டு, துறவி சில அடிகளை எடுத்து வைத்ததும் சொன்னாள், 'இந்த நல்ல நேர்மையான, துறவியும் இப்படியேதான் போகிறார்' என்றாள். பின்னர் ஒரு துறவி இதைப் பற்றி ஜோஷுவிடம் சொன்னார். ஜோஷு, 'கொஞ்சம் பொறுங்கள், உங்களுக்காக நான் போய் அந்தக் கிழவியைப் பார்த்துவிட்டு வருகிறேன்' என்றார்.

அடுத்த நாள் அவர் சென்று அந்த கிழவியிடம் அதே கேள்வியைக் கேட்டார். அந்தப் பெண்மணியும் அதே பதிலைச் சொன்னார்.

திரும்பிய ஜோஷு தன் சீடர்களிடம் சொன்னார்,

'உங்களுக்காக நான் அந்த டய்சான் கிழவியைப் புரிந்து கொண்டுவிட்டேன்' என்றார்.

# வாழ்வு துன்பம் நிறைந்தது

ஆமா சாமி

ஒருவரோடு ஒருவர் சேர்ந்து வாழ்வது மனஅழுத்தம் மிகுந்த தாக இருக்கிறது. நாம் எதிர்பார்த்து, ஆசைப்பட்டது போல விஷயங்கள் எதுவும் நடப்பதில்லை. வாழ்வது பதற்றம் நிரம்பிய தாகவும், போராட்டமாகவும் இருந்தாலும், மனித வாழ்வு என்பது வெறுமனே உயிர்வாழ்வது மட்டுமல்ல. அது கலாசாரத் தையும் சமூகத்தையும் உள்ளடக்கியது. இதன்பொருள் நாம் மனித ஆசை, மதிப்பீடு, விதி போன்றவற்றைச் சமாளித்தாக வேண்டும் என்பதாகும். மனிதர்கள் பகுத்தறிவற்ற, இப்படித் தான் என்று முன்னறிந்து சொல்ல முடியாத, நம்ப முடியாத ஜீவன்கள்.

நாம் அனைவருமே அப்படித்தான். 'மற்றவர்கள்தான் என்பது நரகம்' என்று அறிவிக்கிறார் தத்துவஞானி சார்த்தர். நவீன உலகம் வணிகமானது, போட்டியும் போராட்டமும் நிரம்பியது. ஏதோவொரு வியாபாரி எப்போதோ குறிப்பிட்டதைப் போல இங்கே, 'சித்தப் பிரமை பிடித்தவர்களே உயிர்பிழைக் கிறார்கள். பதற்றத்தோடும் மனஅழுத்தத்தோடும் வாழ்வதற்குச் சிலர் உயிரியல் ரீதியாகப் பழகிப்போய்விட்டார்கள் போலத் தெரிகிறது. சிலர் சந்தேகப்படுபவர்களாகவும் எதிர்ப்புணர்வு கொண்டவர்களாகவும் ஆகிவிட்டார்கள். சில சமயங்களில், நம்மையே நம்மால் நம்பமுடிவதில்லை. நம்முடைய சொந்த பயம், பேராசை, சந்தேகம், பொறாமை, கோபம், தேவை போன்றவை நம்மை முடிவற்று ஆட்டி வைக்கின்றன. சில பதற்றங்களும் மனஅழுத்தமும் வாழ்வின் பகுதியாக இருக்கின்றன. அவை பயனுள்ளவையாகவும் இருக்கலாம்.

ஆனால், அவை ஊடுருவி நுழைந்து நம் வாழ்வை ஆட்சி செய்ய ஆரம்பித்துவிட்டால் அப்புறம் இரத்த அழுத்தம், மனச்சோர்வு, சீரழிந்த வாழ்வு, அழிவு ஆகியவற்றுடன் நாம் கைகோத்து இருப்போம்.

பிறகு மரணம்தான் நம் குரு.

**பிறகு என்னதான் வழி?**

ஜென் பழமொழி சொல்வதைப் போல, மகத்தான மரணத்திலிருந்தே மகத்தான வாழ்வு வருகிறது. நாம் நமது பாதுகாப்புகள், பற்றுதல் அனைத்தையும் விட்டுவிடவேண்டும். நம் வாழ்வையும் நம் உலகத்தையும் 'இழக்க' வேண்டும். வெற்றிடத்திற்குள்ளும் இருட்டுக்குள்ளும் விழுவதற்கு நம்மை நாம் அனுமதிக்க வேண்டும். நாம் நமது வாழ்வின் வெறுமையையும், உலகின் வெறுமையையும், அர்த்தமின்மையையும், ஆதாரமற்ற தன்மையையும் எதிர்கொண்டு, அவற்றைச் சுவைத்தும் பார்க்க வேண்டும். மேலும், நாம் நம் மனங்களிலும், நம் எதிரிகள் என்று அழைக்கப்படுபவர்கள் மனங்களிலும் உறைந்திருக்கும் அடிப்படை நற்பண்புகளைக் கண்டுபிடிக்க வேண்டும். அப்போதுதான் நாம் அகிம்சைக்கும் அமைதிக்கும் வருவோம். குரு ஷிடோ பூனென் ஜென் வழியைத் தம் கவிதையில் இவ்வாறாகச் சொல்கிறார்:

> உயிரோடிருக்கும் போதே இறந்துவிடுங்கள், முழுமையாக இறந்துவிடுங்கள், அப்புறம் நீங்கள் எதைச் செய்தாலும், அனைத்தும் நன்மையாக ஆகும்.

வெற்றிடத்தையும் வெறுமையையும் கடந்து உங்கள் பற்றுதல்கள் அனைத்தையும் போகவிட்டு, இறந்துபோனால், நீங்கள் வாழ்வென்னும் பரிசுக்கு விழிப்படைவீர்கள். அது ஆதியந்தமற்ற வாழ்வு. நீங்கள் உங்கள் சுயத்திடம் விழிப்படைவீர்கள், உங்கள் நானிடம். ஒட்டுமொத்த உலகையும் நீங்கள் கட்டியணைப்பதைப் போல, ஒட்டுமொத்த உலகும் உங்களைக் கட்டியணைப்பதைப் போல். வாழ்வும் சாவும், குதூகலங்களும் துக்கங்களும்; உயர்வும் தாழ்வும், அத்தனையும் பரிசுகள்தாம், அருள்தாம்.

'வாசலற்ற வாசலின்' வழக்கு எண். 35-க்கான
கவிதை இப்படிப் பாடுகிறது:

மேகங்களும் நிலவும் ஒன்றுதான்,
பள்ளத்தாக்குகளும் மலைகளும்
ஒன்றிலிருந்து ஒன்று வேறுபட்டவை.
அனைத்தும் ஆசீர்வதிக்கப்பட்டுள்ளன,
அனைத்தும் ஆசீர்வதிக்கப்பட்டுள்ளன,
பத்தாயிரம் விஷயங்கள்
பத்தாயிரம் ஆசீர்வாதங்கள்;
இது ஒன்றா? இது இரண்டா?

## இயல் ஏழு

### மாட்டை மறந்து
### தேடுபவன் தனிமையில்




மாட்டின் மீதேறி, நான் வீட்டுக்கு வந்துவிட்டேன்.
நான் சாந்தமாக இருக்கிறேன். மாடும் ஓய்வெடுக்கலாம்.
பேரின்ப நிலையில் இளைப்பாற, பொழுது புலர்ந்துவிட்டது.
வேய்ந்த என் குடியிருப்பில் சாட்டையையும் கயிற்றையும்
கைவிட்டுவிட்டேன்.

'ஒருவரின் முற்றுண்மை—மாடு மறைந்துவிட்டது, அவர் தனியாக இருக்கிறார், தேடலில் உள்ளவர் தன்னை அடையாளம் காண்கிறார், பாதுகாப்பைக் கண்டடைகிறார். ஒன்றிலோ மற்றொன்றிலோ—இன்பத்தில், அதிகாரத்தில், அன்பில், சமுதாயத்தில், சமயக் கொள்கைகளில், சித்தாந்தங்களில், செயல் திட்டங்களில், காரணத்தில், உணர்ச்சியில், வரலாற்றில், இயற்கையில்... கடவுள் பற்றிய படிமங்கள், உலகம், சுயம், உண்மை, மெய்ம்மை ஆகியவை எல்லாம் வழிபடு சிலைகளாகலாம். அவற்றில் மனிதர்கள் பாதுகாப்பையும் அடையாளத்தையும் கண்டால், இவை அனைத்துமே மனிதக் கட்டமைப்புகளே; மனவுருப் புனைவுகளே; உறுதியான, நிச்சயமான, மூலாதாரப் பிடிப்புகள் அகவுலகிலோ, புற உலகிலோ இல்லை. ஒருவன் என்ன நினைக்கிறாரோ அதுவே அவருடைய மெய்யான சுயம், ஒருவருடைய கடவுள் என்பது ஒருவருடைய கற்பனை மட்டுமே. அது கருத்துருவத்தைத் திரும்பப் பெறும் கட்டமிது. இது தனிமைக்கான, ஒதுங்கிப் போவதற்கான சார்பியலுக்கான, தனித்திருப்பதற்கான, ஏகாந்தத்துக்கான காலம்.'

## 106

## கனவு காணுதல்

மாபெரும் தாவோயிஸ குரு சுவாங் சூ
இங்குமங்கும் பறந்துகொண்டிருக்கும் ஒரு வண்ணத்துப் பூச்சியைப் போல தாம் இருப்பதாக ஒருமுறை கனவு கண்டார்.

கனவில் ஒரு மனிதனாகத் தனித்துவத்தோடு
இருக்கும் விழிப்புணர்வு அவருக்கு இல்லை.
அவர் வெறும் ஒரு வண்ணத்துப்பூச்சியாக மட்டுமே இருந்தார்,
சட்டென்று, விழித்துப் பார்க்கும்போது
மீண்டும் ஒரு மனிதனாக அங்கே
படுத்திருந்ததைக் கண்டார்.

ஆனால், பிறகு அவர் நினைத்துக்கொண்டார்:
'முன்னாள் நான் ஒரு மனிதனாக இருந்து,
ஒரு வண்ண்த்துப்பூச்சியைக் கனவு கண்டேனா அல்லது
இப்போது ஒரு வண்ணத்துப்பூச்சியாக இருந்து'
ஒரு மனிதனாக இருப்பதாகக் கனவு காண்கிறேனா?'

# 107

## உன் பெற்றோர் பிறப்பதற்கு முன்னர் உன்னுடைய நிஜ முகம் என்ன?

ஒருநாள் ஜென் குருவான வே ஷான் என்பவரைச் சந்தித்து, அவருடைய போதனையைக் கேட்பதற்காகத் துறவி சியாங் யென் வந்திருந்தார்.

'வணக்கத்துக்குரிய குருவான பய் சாங்கின் மாணவர் நீங்கள் என்று கேள்விப்படுகிறேன். உங்களுடைய சமயோசித மதியால் ஒரு கேள்விக்குப் பத்து பதிலும் பத்துக் கேள்விகளுக்கு நூறு பதில்களும் தருவீர்கள் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். உங்கள் பெற்றோர் பிறப்பதற்கு முன்னால் தங்கள் முகம் என்னவாக இருந்தது என்பதை எனக்குச் சொல்வீர்களா?' என்று துறவியிடம் கேட்டார் குரு.

ஆனால் துறவியால் குருவுக்குப் பதில் ஒன்றும் சொல்ல முடியவில்லை. வீட்டை அடைந்ததும், அவர் பௌத்த போதனைகள் அடங்கிய ஏடுகளில் சரியான பதிலைத் தேடினார். ஆனால் அவருக்குப் பதில் கிடைக்கவில்லை. ஒன்றும் கிடைக்காமல் ஒரு பெருமூச்சை விட்டபடி, 'காகிதத்தில் வரையப்பட்ட பலகாரம் யாருடைய வயிற்றையும் நிரப்ப முடியாது' தமக்குத் தாமே சொல்லிக்கொண்டார் துறவி. இதே விளக்கத்தை குருவிடம் கூற பலமுறை முயன்றார். ஆனால் பலன் இல்லை. ஒவ்வொரு முறையும் வே ஷான் கேட்க மறுத்துவிட்டுச் சொன்னார், 'இதற்கான உண்மையான பதிலை நான் உங்களுக்கு இப்போது சொல்லித் தந்துவிட்டால், அப்புறம் நீங்கள் என்னை இதற்காகத் திட்டுவீர்கள். நான் இப்போது உங்களுக்கு எதைச் சொன்னாலும் அது உண்மையில் உங்களுக்குத் தொடர்பு இல்லாததாக இருக்கும்' என்றார். இதைக் கேட்டு துறவி சியாங் யென் மிகவும் ஏமாற்றமடைந்தார்.

இதன் விளைவு துறவி தம் புத்தகங்கள் அனைத்தையும் எரித்துவிட்டு, 'நான் இனி எண்ணங்கள் எதையும் வளர விடமாட்டேன் என்று சபதமேற்கிறேன். இனி, ஒரு போதும் துறவியாவதற்கு ஆசைப்படமாட்டேன் என்று சத்தியம் செய்கிறேன்!' என்று சொல்லிவிட்டு உலகின் நான்கு திசைகளிலும் சுதந்திரமாகச் சுற்றித் திரிவதற்காக அவர் வே ஷானிடம் விடைபெற்றார்.

பிறகு நான்யாங் வழியாகக் கடந்து செல்லும் போது புகழ்பெற்ற மூதாதையரான ஹுயி சாங்கின் சமாதிக்கு மரியாதை செய்ய முடிவெடுத்து, சிறிது காலம் அவருடைய சமாதிக்கு அருகில் தங்கினார். ஒரு நாள் தம் குடிசைக்கு அருகில் புற்களைப் பிடுங்கிக் களையெடுத்துக் கொண்டிருந்தபோது, ஓர் ஓட்டுத் துண்டு அவருடைய கையில் சிக்கியது, அதைத் தூக்கி வீசினார். அது ஒரு மூங்கில் மரத்தின் மீது மோதி ஒலியெழுப்பியது. அந்த ஒலியைக் கேட்டவுடன் சியாங் யென் சட்டென்று ஞானம் அடைந்தார்.

அதற்குப் பிறகு தம் குடிசைக்குள் நுழைந்து குளித்துவிட்டு ஊதுபத்திகளை ஏற்றினார். பின்னர் தொலைதூரத்தில் ஏறெடுத்துப் பார்த்துக்கொண்டு சொன்னார்: 'ஓ, குருவே! நீங்கள் என்மீது காட்டிய கருணை என் பெற்றோர் என்னிடம் காட்டிய கருணையைவிடப் பெரியது! அன்றைக்கு, உங்கள் கேள்விக்கான உண்மையான பதிலை நீங்கள் சொல்லி யிருந்தால், நான் இன்று எப்படி இந்த விழிப்புணர்வை அடைந்திருப்பேன்?'

குரு வே ஷானுக்கு நன்றிக்கடன்பட்டிருந்த சியாங் யென் அவருக்கு ஒரு செய்தியைக் கவிதையாக அனுப்பினார்:

மூங்கில் மீது தட்டிய சப்தமொன்று இதுவரை
நான் அறிந்த அனைத்தையும் மறக்க வைத்தது;
அதற்குப் பதிலாக நான் கண்டது
உண்மையைவிடக் கூடுதலானது.
அன்றைக்கு, மௌனமாக இருந்து தாங்கள்
இந்தப் புராதன இடத்துக்கு
எனக்கு வழிகாட்டினீர்கள்
இங்கே எனக்கு என்னுடைய வாய்ப்புக் கிடைத்திருக்கிறது.

# 108

## திரிநிலை

புகழ்பெற்ற ஓர் ஆன்மிக குரு அரசரின் அரண்மனை முன் வாசலுக்கு வந்தார். காவல்காரர்கள் யாரும் அவரைத் தடுக்க முயலாததால் அரியணையில் அரசர் அமர்ந்திருந்த இடத்துக்குச் சென்றார்.

தம் விருந்தினரை உடனடியாக அடையாளம் கண்ட அரசர் அவரிடம், 'தங்களுக்கு என்ன வேண்டும்?' என்று கேட்டார்.

குரு, 'எனக்கு இந்தச் சத்திரத்தில் தூங்குவதற்கு ஓர் இடம் வேண்டும்' என்றார்.

'ஆனால், இது ஒரு சத்திரம் இல்லையே, என்னுடைய அரண்மனை ஆயிற்றே?' என்றார் அரசர்.

'உங்களுக்கு முன்னால் இந்த அரண்மனை யாருக்குச் சொந்த மாக இருந்தது என்று நான் தெரிந்துகொள்ளலாமா?' என்று கேட்டார் குரு.

'என் தந்தைக்கு. அவர் இப்போது இறந்துவிட்டார்' என்றார் அரசர்.

'அவருக்கு முன்னால் இந்த அரண்மனை யாருக்குச் சொந்த மாக இருந்தது?' என்று கேட்டார் குரு.

'என் பாட்டனார். அவரும் இறந்துவிட்டார்' என்றார் அரசர்.

'சிறிது காலம் மனிதர்கள் தங்கிவிட்டுப் போகும் இந்த இடத்தை சத்திரமல்ல என்று நீங்கள் சொன்னதைக் கேட்டேனே?' என்றார் குரு.

## 109

### பிறரை உற்சாகப்படுத்துங்கள்

ரியுடாகுஜி புத்த மடாலயத்தில் நடந்த ஒரு தியான வகுப்பில் நககவா சோயென் ரோஷியிடம் ஒரு மாணவர்,

'நான் மிகவும் உற்சாகமிழந்திருக்கிறேன். என்ன செய்வது?' என்று கேட்டார்.

சோயென், 'பிறரை உற்சாகப்படுத்துங்கள்' என்றார்.

## 110

# முழுமையான சுதந்திரம்?

சான் பிரான்சிஸ்கோ நகரின் ஜப்பானிய நகர ஆலயம் சோகோஜி. 1960களின் தொடக்கத்தில், அதில் தலைமைத் துறவியாக இருந்தார் சுசூகி. அவருடைய அலுவலகத்தில் ஒரு மாணவர் அவரைச் சந்தித்து ஜென்னைக் கற்பதற்காக வந்தார்.

அந்த மாணவர், அறையின் மூலையிலிருந்த ஒரு கூண்டைக் காட்டி, 'நீங்கள் முழுமையான விடுதலையை நம்புவதாக இருந்தால், ஏன் அந்தப் பறவையைக் கூண்டில் அடைத்து வைத்திருக்கிறீர்கள்?' என்று கேட்டார்.

அதற்கு பதிலளிக்கும் விதமாக சுசூகி கூண்டை நோக்கிச் சென்று, அதன் கதவைத் திறந்து, பறவையை வெளியே பறக்க விட்டார்.

இந்தக் கதை சான் பிரான்சிஸ்கோ கிரானிக்கல் நாளேட்டில் வெளிவந்தது. அது வளர்ந்துகொண்டிருந்த சுசூகியின் சான் பிரான்சிஸ்கோ ஜென் மையத்திற்குப் பலரையும் ஈர்த்தது.

இருப்பினும் இந்தக் கதைக்கு அதிகம் அறியப்படாத ஒரு தொடர்ச்சி உள்ளது. அந்த நாளேட்டில் கட்டுரை வெளியான சில நாள்களுக்குப் பிறகு, பில் குவோங் (இப்பொழுது குவோங் ரோஷி) என்ற புதிய மாணவர் ஜென் குறித்து அறிய அந்த ஆலயத்திற்கு வந்தார்.

அந்தப் பறவை குறித்த கதை நினைவிற்கு வர, குவோங் அது என்ன ஆனதென்று கேட்டார். 'அது இன்னும் இந்தக் கட்டடத்தில்தான் இருக்கிறதா, பறந்து சென்றுவிட்டதா?'

எல்லோரும் தலைகுனிந்து இருந்தனர். குவோங் ஏதாவது தவறாகப் கூறிவிட்டாரா? சுசூகி மென்மையாக,'அந்தப் பூனை' என்றார்.

'அந்தப் பூனையா?' என்று மீண்டும் கூறியபடி குவோங், மாணவி டெலியாவின் மடியில் சொகுசாக சுருண்டு கிடந்த பூனையைப் பார்த்தார்.

மெக்நில், குவோங்கின் அருகில் வந்து மெதுவாகக் கூறினார்: 'இந்தப் பூனை அந்தப் பறவையைத் தின்றுவிட்டது.'

'ரோஷி அதைப் பற்றி சங்கடமாக உணர்ந்தார்' என்று டெலியா கூறினாள். சுசூகி எதுவும் கூறவில்லை. அனைவரும் தங்களுடைய தேநீரை அருந்தத் தொடங்கினர்.

## 111

# ஜென்னின் ஒரு சுரம்

பேரரசரைச் சந்தித்துவிட்டுப் போன பிறகு காகுவா காணாமல் போய்விட்டார். அவருக்கு என்ன ஆயிற்று என ஒருவருக்கும் தெரியவில்லை. ஜென்னைக் கற்பிக்க சீனாவுக்குப் போன முதல் ஜப்பானியர் அவர். ஆனால் அப்போதிலிருந்து, ஒரு சுருதியைத் தவிர, எதையும் காட்டாததால், அவருடைய நாட்டுக்கு ஜென்னை எடுத்துக்கொண்டு வந்த முதல் ஆள் அவர்தான் என்பதே மறந்துபோயிற்று.

காகுவா சீனாவுக்குச் சென்று மெய்யான போதனையை ஏற்றுக்கொண்டார். அவர் அங்கிருந்தபோது எந்தப் பயணத்தையும் மேற்கொண்டதில்லை. தொடர்ந்து தியானம் செய்துகொண்டு, ரொம்பத் தொலைவில் இருந்த மலையின் ஒரு பகுதியில் தங்கிவிட்டார். மக்கள் அவரைப் பார்க்கும் போதெல்லாம் அவரிடம் உபதேசம் கேட்டனர். அவர் சில வார்த்தைகள் சொல்வார். பிறகு மலையின் வேறொரு இடத்துக்குச் சென்றுவிடுவார். அங்கே அவரைக் காண்பது அரிதாகிப் போனது.

காகுவா திரும்ப ஜப்பானுக்கு வந்துவிட்டது குறித்துக் கேள்விப் பட்டதும் பேரரசர் அவரிடம், ஜென்னைத் தனக்கும், தன் நாட்டு மக்களுக்கும் போதிக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டார்.

பேரரசர் முன்பு மௌனமாக நின்றார் காகுவா. பிறகு அவர் தம் அங்கியின் மடிப்புகளில் இருந்து புல்லாங்குழலை எடுத்து ஒரேயொரு சுரத்தை வாசித்தார். பின்னர் மரியாதையுடன் தலைவணங்கிவிட்டுக் காணாமல் போய்விட்டார்.

## 112

## மீனை அறிதல்

ஒரு நாள் சுவாங் சூவும் ஒரு நண்பரும் நதியோரம் நடந்து கொண்டிருந்தனர்.

'பாருங்கள், மீன்கள் நீச்சலடித்துக்கொண்டிருக்கின்றன' என்று சொன்ன சுவாங் சூ,

'அவை உண்மையில் தமக்குள்ளேயே மகிழ்கின்றன' என்றார்.

'நீங்கள் ஒரு மீன் அல்ல' பதிலளித்தார் நண்பர்.

'அதனால் அவை தங்களுக்குள் அனுபவித்துக் கொண்டிருப்பதை உண்மையில் நீங்கள் தெரிந்துகொள்ள முடியாது' என்றார் நண்பர்,

'நீங்கள் நானல்ல' என்று சொன்ன சுவாங் சூ,

'அந்த மீன்கள் தங்களுக்குள்ளேயே சந்தோஷப்படுவது எனக்குத் தெரியாது என்று உங்களுக்கு எப்படித் தெரியும்?'

# 113

## யார் குரு?

ஒவ்வொரு நாளும் ஸுய்கன், 'குருவே!' என்று தம்மையே அழைத்துக்கொள்வார்.

பிறகு அவர், 'சொல்லுங்க ஐயா!' என்று தமக்குத்தாமே பதிலளிப்பார்.

அதன்பிறகு, மேலும் அவர் சொல்வார்: 'விழித்திரு, விழித்திரு!'

'சரி ஐயா, சரி ஐயா' என்பார் அவர்.

'இன்றுமுதல் பிறரால் ஏமாற்றப்படாதிரு' என்பார்.

'சரி, ஐயா; சரி, ஐயா' என்று அவரே பதிலளித்துக்கொள்வார்.

## 114

# இருக்கலாம்

பல ஆண்டுகளாக விவசாயத்தில் ஈடுபட்டு வந்த வயதான விவசாயி ஒருவரைப் பற்றி ஒரு டாவோயிசக் கதை உண்டு. ஒரு நாள் விவசாயியின் குதிரை ஓடிப்போய்விட்டது. செய்தி அறிந்தவுடன் அவருடைய அண்டை அயலார் வருத்தத்துடன், 'என்னவொரு துரதிர்ஷ்டம்' என்றார்கள். 'இருக்கலாம்' என்றார் விவசாயி. அடுத்த நாள் அந்தக் குதிரை, பழக்கப் படுத்தப்படாத மூன்று காட்டுக் குதிரைகளுடன் திரும்ப வந்தது. 'என்ன அதிசயம்' என்று வியந்தனர் அக்கம்பக்கத்தார். 'இருக்கலாம்' என்றார் முதியவர். அடுத்த நாள், அவருடைய மகன் பழகாத குதிரைகளில் ஒன்றின் மீது ஏறி சவாரி செய்ய முயல, தூக்கி எறியப்பட்டு, காலை உடைத்துக்கொண்டான். மீண்டும் இந்தத் துரதிர்ஷ்டத்தைக் குறித்து வருத்தம் தெரிவிக்க அயலார் வந்தனர். 'இருக்கலாம்' என்றார் விவசாயி. அதற்கு அடுத்த நாள், இராணுவ அதிகாரிகள் இராணுவத்துக்கு இளைஞர்களைச் சேர்க்கக் கிராமத்துக்கு வந்தார்கள். அந்த விவசாயியின் மகனுடைய கால் உடைந்திருப்பதைப் பார்த்து அவனை விட்டுவிட்டுப் போய்விட்டார்கள். அண்டை வீட்டார் விஷயங்கள் நல்லபடியாக முடிந்ததற்கு விவசாயிக்குப் பாராட்டுகளைத் தெரிவித்தனர். விவசாயி, 'இருக்கலாம்' என்றார்.

# 115

## ஒரு புத்தர்

மெய்ஜி காலத்தில், எதிரெதிர் பண்புகளோடு இரண்டு முக்கியமான ஆசிரியர்கள் டோக்கியோவில் வாழ்ந்தனர். ஒருவர் உன்ஷோ; அவர் ஷிங்கோன் பிரிவில், புத்தருடைய நெறிகளைப் பிசகாமல் கடைப்பிடிக்கும் போதகராக இருந்தார். அவர் ஒருபோதும் மதுபானங்களைக் குடிப்பதுமில்லை, காலை பதினோரு மணிக்குப் பிறகு சாப்பிடவும் மாட்டார்.

அடுத்த ஆசிரியர் டான்ஸன். இம்பீரியல் பல்கலைக்கழகத்தின் தத்துவப் பேராசிரியர். இவர் எந்த நெறிகளையும் பின்பற்றுவ தில்லை. சாப்பிட வேண்டும் என்று தோன்றினால் சாப்பிடுவார்; தூங்க வேண்டுமென்றால் பகலிலும் தூங்குவார்.

ஒருநாள் உன்ஷோ டான்ஸனைச் சந்திக்க வந்தார். அந்த நேரத்தில் டான்ஸன் ஒயினைக் குடித்துக்கொண்டிருந்தார். ஒயினின் ஒரு துளிக்கூட பௌத்தர்களின் நாக்கில் படக்கூடாது.

'வா சகோதரா, கொஞ்சம் மது அருந்துகிறாயா?' என்று டான்ஸன் உன்ஷோவை வரவேற்றுக் கேட்டார்.

'நான் ஒருபோதும் குடிப்பதில்லை!' உறுதியாகச் சொன்னார் உன்ஷோ.

'ஒருவன் குடிக்கவில்லை என்றால் அவன் மனிதனே இல்லை' என்றார் டான்ஸன்.

'நான் மதி மயக்கும் வெறியூட்டும் திரவங்களைக் குடித்துப் பாவம் செய்வதில்லை என்பதால் நீங்கள் என்னை மனிதனில்லை என்று சொல்கிறீர்களா!' என்று கோபத்தில் கேட்டார் உன்ஷோ. 'அப்படி நான் மனிதனில்லை என்றால் நான் யார்?' என்று கேட்டார்.

'ஒரு புத்தர்' என்றார் டான்ஸன்.

## 116

# முகவரி அட்டை

கெய்ச்சூ என்ற மாபெரும் ஜென் ஆசிரியர், மெய்ஜி காலத்தில் கியோட்டோவில் இருந்த டோஃபுகு, மாவட்டத் தலைமைத் தேவாலயத்தின் தலைவராக இருந்தார். ஒருநாள் கியோட்டோ நகரின் ஆளுநர் முதல் தடவையாக அவரைப் பார்க்க வந்தார்.

கெய்ச்சூவின் உதவியாளர் ஆளுநர் பெயர் பொறித்த அட்டையைக் கொண்டுவந்து காட்டினார். அதில், 'கிட்டகாகி, கியோட்டோவின் ஆளுநர்' என்றிருந்தது.

'இது மாதிரியான ஆளிடம் எனக்கு எந்த வேலையும் இல்லை' என்று உதவியாளரிடம் சொன்ன கெய்ச்சூ, 'அவரை இங்கிருந்து போகச் சொல்லுங்கள்' என்றார்.

உதவியாளர், வருத்தம் தெரிவித்து அந்த அட்டையை ஆளுநரிடம் திருப்பிக் கொடுத்தார். 'அது என் தவறுதான்' என்று சொன்ன ஆளுநர், ஒரு பென்சினால் 'ஆளுநர், கியோட்டோ' என்ற வார்த்தைகளை அடித்து, 'உங்களுடைய ஆசிரியரிடம் மீண்டும் கேளுங்கள்' என்றார்.

அந்த அட்டையைப் பார்த்ததுமே 'ஓ, கிட்டகாகியா?' என்றவர், 'நான் அவரைப் பார்க்க விரும்புகிறேன்' என்று சப்தமாகச் சொன்னார்.

## 117

# இந்த முறை அவர் புரிந்துகொண்டார்

குரு கஸ்ஸான் முன்பு கெய்க்கோவிலிருந்த கோயிலில் வசித்து வந்தபோது, ஒரு துறவி அவரிடம், 'உண்மையின் வடிவமென்ன?' என்று கேட்டார்.

கஸ்ஸான், 'உண்மை வடிவமற்றது' என்றார். அந்தத் துறவி, 'ஞானத்தின் கண் எது?' என்றார்.

கஸ்ஸான், 'கோளாறு அற்றது ஞானத்தின் கண்' என்றார்.

அந்தச் சமயத்தில், குரு டோகோ தம் இருக்கையிலிருந்து வெடித்துச் சிரித்தார். கஸ்ஸான் தம் சீடர்களைக் கலைந்து செல்லும்படி கூறிவிட்டு, குரு சென்சுவைக் காணச் சென்றார். அங்கே அவர் ஞானம் அடைந்தார். பின்னர் திரும்பித் தம் சீடர்களை மீண்டும் குழுமும்படிச் செய்தார். டோகோ ஒரு துறவியைக் கஸ்ஸானிடம் அனுப்பினார். அந்தத் துறவி கஸ்ஸானிடம், 'உண்மையின் வடிவம் என்ன?' என்று கேட்டார். கஸ்ஸான், 'உண்மை வடிவமற்றது' என்றார்.

துறவி கஸ்ஸானிடம், 'ஞானத்தின் கண் எது?' என்று கேட்டார்.

கஸ்ஸான், 'கோளாறு அற்றது ஞானத்தின் கண்' என்றார்.

அந்தத் துறவி டோகோவிடம் வந்து நடந்தவை அனைத்தையும் விவரித்தார். டோகோ, 'இந்த முறை அவர் புரிந்துகொண்டார்' என்றார்.

## 118

# மிக முக்கியமான போதனை

எனது மிக முக்கியமான போதனை இதுதான் என்று புகழ்பெற்ற ஜென் குரு ஒருவர் சொன்னார்:

'உங்களுடைய சொந்த மனம்தான் புத்தர்.' அறிவாழமிக்க இந்தக் கருத்தால் தூண்டப்பட்ட துறவியொருவர் மடத்தை விட்டு விலகி காட்டுக்குள் சென்று வனத்தில் இந்த ஆழ்ந்த கருத்தை தியானம் செய்ய தீர்மானித்தார். அங்கே வன வாழ்க்கையில் இந்தப் போதனையைத் தம் மனத்தில் ஆழ்ந்து சிந்தித்தபடி 20 ஆண்டுகளைக் கழித்தார்.

ஒரு நாள் வனத்தில் பயணம் செய்த மற்றொரு துறவியைச் சந்தித்தார். உடனடியாக அந்தப் பயணியும் அதே ஜென் குருவிடம் கற்றவர் என்பதைத் தெரிந்துகொண்டார்.

'குருவின் மிகப்பெரும் போதனையைப் பற்றி தயவுசெய்து நீங்கள் அறிந்ததை எனக்குச் சொல்லுங்கள்' என்று அவரைக் கேட்டார்.

பயணி கண்கள் பளிச்சிட இவ்வாறு சொன்னார்: 'குரு இந்த விஷயத்தில் மிகத் தெளிவாக இருந்தார். அவர் சொல்கிறார் தம்முடைய மிகப் பெரிய போதனை: *மனமும் இல்லை. புத்தனும் இல்லை.*'

## 119

### ஒரு கை ஓசை

கென்னின் கோயில் குருவாக இருந்தவர் மொக்குரை, 'சப்தமற்ற இடி.' 12 வயதேயான டோயோ என்ற இளம் மாணவன் அவருடன் இருந்தான். ஒவ்வொரு நாள் காலையிலும் மாலையிலும் மூத்த சீடர்கள் 'சான்ஜென்' எனப்படும் குருவிடம் மேற்கொள்ளும் தனிப்பட்ட கற்றலுக்காக குருவின் அறைக்குச் சென்று அவரைச் சந்திக்கும்போது, அவர்களுடைய மனம் அலையாமல் இருக்க குரு அவர்களுக்குக் கோவான்களைத் தருவதைக் கவனித்தான்.

டோயோவும் சான்ஜென் மேற்கொள்ள ஆசைப்பட்டான்.

'கொஞ்சம் பொறு, நீ ரொம்ப சின்னப் பையன்' என்றார் மொக்குரை.

ஆனால், அந்தச் சிறுவன் வற்புறுத்தவே, கடைசியில் குரு சம்மதித்தார்.

அன்று மாலையில் சிறுவன் டோயோ சரியான நேரத்தில் மொக்குரை சான்ஜென் அறிவுரை வழங்கும் அறையின் வாயிலுக்குச் சென்றான். தான் வந்திருப்பதை அறிவிக்க மணியை ஒலித்துவிட்டு, வாசலுக்கு வெளியே மரியாதை யுடன் மூன்று முறை தலைகுனிந்தான். பின்னர் குருவுக்கு முன்னால் மரியாதை தொனிக்கும் அமைதியுடன் அமர்ந்தான்.

'இரு கைகளையும் தட்டும்போது நீ அவற்றின் ஓசையைக் கேட்க முடியும், இப்போது ஒரு கையின் ஓசையை எனக்குக் காட்டு' என்றார் மொக்குரை.

டோயோ தலைகுனிந்து வணங்கிவிட்டுத் தன் அறைக்குச் சென்று இந்தப் பிரச்சினையை ஆலோசித்தான். அவனுடைய அறையின் ஜன்னலிலிருந்து ஆடல்-பாடலால் ஆண்களை மகிழ்விக்கும் ஜப்பானியப் பெண்களின் இசையைக் கேட்டவன், 'ஓ, நான் கண்டுபிடித்துவிட்டேன்!' என்றான்.

அடுத்த நாள் மாலையில், ஒரு கை ஓசையை எனக்கு விவரி என்று அவனுடைய ஆசிரியர் கேட்டபோது, டோயோ அந்த இசையை வாசித்தான்.

'இல்லையில்லை' என்ற மொக்குரை, 'அது ஒருபோதும் போதாது. ஒரு கை ஓசை அதுவல்ல. நீ அதைக் கண்டுபிடிக்கவில்லை.'

இதுபோன்ற இசை நிச்சயம் இடையூறு செய்யும் என யோசித்த டோயோ அமைதியான ஓர் இடத்துக்குத் தன் வசிப்பிடத்தை மாற்றிக் கொண்டு மீண்டும் தியானித்தான். 'ஒரு கை ஓசை என்ன மாதிரி இருக்க முடியும்?' பக்கத்தில் சொட்டிக் கொண்டிருக்கும் தண்ணீரின் ஒலியை அவன் கேட்க நேர்ந்தது. 'நான் பிடித்துவிட்டேன்' என்று நினைத்துக்கொண்டான் டோயோ.

அடுத்த சந்திப்பில் ஆசிரியர் முன்னால் நின்றபோது, சொட்டும் தண்ணீரின் ஒலியை நடித்துக் காட்டினான் டோயோ .

'என்ன இது?' கேட்டார் மொக்குரை. 'இது தண்ணீர் சொட்டிக்கொண்டிருக்கும் சப்தம். ஒரு கை ஓசையல்ல. மீண்டும் முயற்சி செய்' என்றார்.

ஒரு கை ஓசையைக் கேட்கும் அவனுடைய தியான முயற்சி வீணாகிப்போனது. அவன் காற்றின் பெருமூச்சைக் கேட்டான். ஆனால், அந்த ஓசை நிராகரிக்கப்பட்டது.

ஆந்தையின் அலறலைக் கேட்டான். அதுவும்கூட மறுக்கப் பட்டது.

அந்த ஒரு கையின் ஓசை வெட்டுக்கிளிகளின் சப்தமாகவும் இல்லை.

பத்து தடவைக்கும் மேல் டோயோ பல்வேறு சப்தங்களுடன் மொக்குரையைச் சந்தித்தான். எல்லாமே தவறாக இருந்தது. ஒரு கை ஓசை எப்படி இருக்கும் என அவன் ஏறக்குறைய ஓர் ஆண்டு சிந்தித்தான்.

கடைசியில், டோயோ உண்மையான தியானத்தில் ஈடுபட்டான். எல்லாச் சப்தங்களையும் கடந்துசென்றான். 'எல்லா ஞாபகத்தையும் எண்ணங்களையும் கடந்துவிட்டேன். ஆகவே, நான் சப்தமில்லா சப்தத்தை அடைந்துவிட்டேன்' என்று பிறகு விளக்கினான்.

டோயோ ஒரு கை ஓசையை
உணர்ந்துவிட்டான்.

## இயல் எட்டு

## மாடும் தேடுபவனும் -
## இருவரும் மறந்துவிடுதல்



八 人牛俱忘

சாட்டை, கயிறு, மனிதர், மாடு —
எல்லாம் வெறுமையில் (ஒன்றுமில்லாததில்) கலக்கின்றன.
இந்தச் சொர்க்கம் ரொம்பப் பெரிதாக இருக்கிறது,
அதை எந்தச் செய்தியும் கறைப்படுத்த முடியாது.
சீறி எழும் தீயில் எப்படிப் பூம்பனி இருக்கலாம்?
மூதாதையர்களுடைய காலடிச் சுவடுகள்
இங்கே இருக்கின்றன.

‘வெறுமை மட்டுமே இருக்கிறது,
பூஜ்ஜியம், ஒரு வட்டம். இது அனைத்தையும்
துறந்துவிடுவது: கடவுள், உலகம், சுயம்.
அகம், புறம் இரண்டும் மறைந்துவிட்டது.
அது ஒன்றுமில்லாததின் கருவறை.
அதே சமயத்தில் அனைத்தின் தோற்றுவாயும் அதுதான்.
வெறுமையும் முழுமையும்,
மரணமும் வாழ்வும்.’

## 120

# இந்தத் தருணத்தைக் கொண்டாடு

ஒருவன் ஒரு வயலைத் தாண்டிப் போய்க்கொண்டிருந்தபோது புலி ஒன்றை எதிர்கொண்டான். அவன் ஓட, புலி அவனைத் துரத்தியது. செங்குத்துப் பாறையில் ஏறியவன் அங்கு விளிம்பில் தொங்கிக்கொண்டிருந்த காட்டுக் கொடியின் வேரைப் பிடித்துக்கொண்டு இறங்கினான். துரத்திய புலி மேலே இருந்து மோப்பம் பிடித்தபடி அவனைப் பார்த்துக்கொண்டிருந்தது. நடுங்கியபடி அவன் இறங்க நினைத்த சமயம், கீழே இன்னொரு புலி அவனை அடித்துச் சாப்பிடக் காத்துக்கொண்டிருந்தது. அந்தக் கொடி மட்டும்தான் அவனை விழாமல் தாங்கிக் கொண்டிருந்தது.

வெள்ளையும் கறுப்பும் நிறமுள்ள என இரண்டு சுண்டெலிகள் அந்தக் கொடியைக் கொஞ்சம் கொஞ்சமாகக் கடிக்க ஆரம்பித்தன. பக்கத்தில் சிவந்து பழுத்திருந்த இனிய ஸ்ட்ராபெர்ரி பழத்தை அவன் பார்த்தான். ஒருகையில் காட்டுக் கொடியைப் பிடித்துக் கொண்டு இன்னொரு கையால் அந்தப் பழத்தைப் பறித்து வாயில் போட்டான்.

அடடா, என்ன சுவை!

## 121

## நான்காம் உண்மை

வருங்கால புத்தர் முக்கியக் கேள்விகளைப் பற்றிச் சிந்தித்தபடி ஒரு மலையைக் கடந்துகொண்டிருந்தார். அப்போது ஒரு வலுத்த குரல், 'எல்லா உயிரினங்களும் மரணமடைந்தே தீரும்' என்று கதறியது.

வானமும் பூமியும் இந்தச் சொற்களை எதிரொலித்தது போல் இருந்தது.

வருங்கால புத்தர் இந்த உண்மையைத் தம் சொந்தத் தியானங்களின் மூலம் ஏற்கெனவே உணர்ந்திருந்தார். அந்தக் குரல் எங்கிருந்து வருகிறது என்று சுற்றுமுற்றும் பார்த்தார். அவருடைய பார்வை மலையை நோக்கித் திரும்பியபோது அந்தக் குரல் மீண்டும், 'இதுதான் எல்லா வாழுயிர்களுக்குமான நீதி' என்று உரக்கச் சொல்லியது.

வருங்கால புத்தர் இந்தக் குரல் மலையுச்சியில் இருந்து வந்ததைக் கண்டார். அவர் மலைமீது ஏறினார். அது எரிந்து அணைந்த ஓர் எரிமலை என்று கண்டார். எரிமலையின் அடியாழத்தில், படுபாதாளத்தில் ஒரு மிகப் பெரிய டிராகன் இருந்தது. வருங்கால புத்தர் டிராகனைப் பார்க்கவும், அது தன் பெரிய வாயைத் திறந்து, 'அழிவைச் சொல்லும் இந்த நீதிக்கு அப்பால் போக ஒரு வழி இருக்கிறது' என்று உறுமிவிட்டு அமைதியானது.

வருங்கால புத்தர் கீழே பார்த்து, 'நீ மூன்று உண்மைகளை அறிவித்துவிட்டாய். இந்த மூன்றையும் நான் என் தியானங்களின் மூலம் அறிந்திருக்கிறேன். இதற்கு மேல் என்னால் போக முடியவில்லை; நீ அறிவிக்காத ஒரு நான்காவது உண்மை இருக்கிறதா?' என்று உரக்கக் கேட்டார்.

'இருக்கிறது', என்று சப்தமிட்ட டிராகன், 'ஆனால் எனக்குப் பசிக்கிறது, எனக்கு உணவளித்தால் ஒழிய என்னால் அதை அறிவிக்க இயலாது. நீ இங்கே கீழே என்னிடம் குதித்தால், நீ காற்றில் வரும்போதே நான் அதைச் சொல்வேன், நீ ஒரு கணம் அதை அறிவாய்' என்றது. வருங்கால புத்தருக்கு உண்மையை அறியும் ஆர்வம் அதிகமாக இருந்ததால் உடனடியாகக் கீழே குதித்தார். அவர் விழுந்துகொண்டிருக்கும்போது, டிராகன் நான்காவதும் கடைசியுமான உண்மையைக் கர்ஜித்தது. இதைக் கேட்டவுடன் வருங்கால புத்தர் புத்தரானார். ஆனால் அவருடைய உடல் டிராகனின் வாயில் விழுந்தது. அப்படி விழும்போது டிராகன் தெய்வமாக உருமாறி புத்தரைப் தாங்கிக்கொண்டது.

## 122

## மரணப் பாடல்

ஒருமுறை ஒரு மனிதன் செங்கையிடம் வந்து வாழ்க்கை வெறுத்துப் போனதாகச் சொன்னான். செங்கை ஒரு செய்யுளாக, ஓர் அங்கதமான 'டங்கா' (மரணப்பாடல்) மூலம் பதிலளித்தார்:

*உனக்கு மரணிக்கும் நேரம் வந்து,*
*நீ இறந்தால் – மிக நல்லது!*
*உனக்கு மரணிக்கும் நேரம் வந்தும்*
*நீ இறக்காவிட்டால் – மிக மிக நல்லது!*

## 123

## வசைகளின் பரிசு

டோக்கியோ அருகில் வாழ்ந்த ஒரு மாபெரும் சமுராய் வீரர், வயது முதிர்ந்த நிலையில், இளைஞர்களுக்கு ஜென் பௌத்தம் குறித்துக் கற்பிக்கத் தீர்மானித்தார். அந்த வயதிலும், எத்தகைய எதிரியையும் தோல்வியுறச் செய்யக்கூடியவர் என்ற பெரும்புகழ் அவருக்கு இருந்தது.

ஒரு பிற்பகல் நேரத்தில், எவ்வித மனவுறுத்தலும் அற்றவன் என அறியப்பட்ட ஒரு போர்வீரன் அங்கே வந்தான். கோபத்தைத் தூண்டும் அவன் பயன்படுத்திய உத்தி மிகவும் பிரபலமானது. அவன் எதிராளியின் முதல் நகர்வுவரை பொறுமையாகக் காத்திருந்து, நிகழும் எவ்விதத் தவறுகளையும் பொறாமைப்படும் அளவுக்கு சாதகமாக்கிக்கொள்ளும் தமது மிகுந்த அறிவைப் பயன்படுத்தி, மிக வேகத்துடன் கடும் எதிர்த் தாக்குதல் நடத்துவான்.

பொறுமையற்ற அந்த இளம் வீரன் எந்தச் சண்டையிலும் தோற்றதில்லை. சமுராயின் பெருமைகளைக் கேள்விப்பட்டு, அவரைத் தோல்வியுறச் செய்வதன் மூலம் தம் புகழை உயர்த்திக் கொள்ள நினைத்தான். அனைத்து மாணவர்களும் இதற்கு எதிராக இருந்தனர், ஆனாலும் அந்த முதிய மனிதர் இச்சவாலை ஏற்றுக்கொண்டார்.

அவர்கள் ஊர்ச் சதுக்கத்தில் கூடினர். அந்த இளைஞன், முதிய குருவை அவமானப்படுத்தத் தொடங்கினான். அவரை நோக்கி சில கற்களை வீசினான், முகத்தில் காறித் துப்பினான், அனைத்து வசைகளையும், அவருடைய மூதாதையர்கள் குறித்த வசைகளை கூடச் சொன்னான். மணிக்கணக்காக, அவரைக் கோபத்தில்

பொங்கியெழச் செய்ய எவ்வளவோ முயன்றான். ஆனால் அந்த முதியவர் எவ்விதமான அசைவுமின்றி இருந்தார். பிற்பகலின் முடிவில், முற்றிலும் சோர்ந்து போய் அவமானத்துடன் அந்த மூர்க்கமான போர்வீரன் திரும்பச் சென்றான்.

தங்களுடைய குரு இத்தனை வசைகளையும் கோபாவேசங் களையும் தாங்கியபடி இருந்ததைக் கண்டு ஏமாற்றமடைந்த மாணவர்கள் அவரிடம் கேட்டனர்:

'இத்தகைய அவமானத்தை எப்படி நீங்கள் பொறுத்துக் கொள்ளலாம்? ஏன் நீங்கள் தோல்வியடைவீர்கள் என்று அறிந்தால்கூட, எங்கள் முன் உங்கள் கோழைத்தனத்தை வெளிப்படுத்துவதற்குப் பதிலாக நீங்கள் உங்கள் வாளைப் பயன்படுத்தியிருக்கக் கூடாதா?' அவர்களிடம் சமுராய் கேட்டார்: 'ஒருவர் உங்களுக்குப் பரிசளிக்க வருகிறார். நீங்கள் அப்பரிசை ஏற்காவிடில் அந்தப் பரிசு யாருக்குச் சொந்தமாகும்?' 'அதைக் கொடுக்க முயன்றவனுக்கு' என்று பதிலளித்தான் ஒரு சீடன். 'அதுபோலவே பொறாமை, கோபம் மற்றும் வசைகளும் செல்கின்றன' என்றார் குரு.

அவை ஏற்கப்படாவிட்டால், தொடர்ந்து அவை சுமந்து வந்தவனுக்கே சொந்தமாக இருக்கும்.

124

## இன்னும் இறக்கவில்லை

குரு கூடோவிடம் பேரரசர், 'ஞானம் அடைந்த மனிதன் இறந்த பிறகு அவனுக்கு என்ன நடக்கும்?' என்றார்.

'எனக்கு எப்படித் தெரியும்?' பதில் சொன்னார் கூடோ.

'ஏனெனில், நீங்கள் ஒரு குரு' என்றார் பேரரசர்.

'ஆமாம் ஐயா' என்ற கூடோ,

'ஆனால் நான் ஒரு இறந்தவன் அல்லவே' என்றார்.

## 125

# குட்டேயின் ஒரு விரல்

குட்டேயிடம் ஜென் குறித்துக் கேட்கப்படும் போதெல்லாம் அவர் தம் விரலை உயர்த்திக் காட்டுவார். அவருக்கு உதவி செய்யும் ஒரு பையன் அவரைப் போல் நடித்துக்காட்ட ஆரம்பித்தான். குரு எதைப் பற்றி உபதேசித்தார் என்று யாராவது கேட்டால், அந்தப் பையன் தன் விரலை உயர்த்திக் காட்டுவான்.

சிறுவனின் இந்தக் குறும்பு குருவுக்குத் தெரிந்தது. அவர் அவனைப் பிடித்து அவன் விரலை வெட்டிவிட்டார். சிறுவன் கதறியபடி ஓடினான். குட்டேய் அவனைக் கூப்பிட்டு நிறுத்தினார். அவன் திரும்பிப் பார்த்தபோது, குட்டேய், தன் விரலை உயர்த்திக் காட்டினார். அந்தக் கணமே சிறுவனுக்கு ஞானம் ஏற்பட்டது.

இந்த உலகத்திலிருந்து தான் விடைபெற்றபோது குட்டேய் தம் சீடர்களை அழைத்து அவர்களிடம், 'நான் எனது ஒரு விரல் ஜென்னை எனது ஆசிரியர் டென்ரியுவிடமிருந்து பெற்றேன். எனது முழு வாழ்க்கையிலும் என்னால் அதைக் கற்றுத்தீர இயலவில்லை' என்றார்.

பிறகு அவர் காலமானார்.

## 126

## புத்தரைக் கொல்*

குரு லின்-சி தம் மாணவர்களிடம் இவ்வாறாகப் பேசினார்:

'தர்ம வழியைப் பின்பற்றுபவர்களே, தர்மத்தோடு பொருந்திப் போகும் வகையில் புரிதல் வேண்டுமென்று நினைத்தால், மற்றவர்களால் தவறாக வழிநடத்தப்பட்டு விடாதீர்கள். நீங்கள் உள்நோக்கிப் பார்க்கும் போதும் வெளிநோக்கிப் பார்க்கும் போதும் நீங்கள் எதைச் சந்திக்க நேர்ந்தாலும் அதைக் கொன்று போடுங்கள்! நீங்கள் ஒரு புத்தனைச் சந்திக்க நேர்ந்தால், அந்தப் புத்தனைக் கொன்றுவிடுங்கள். நீங்கள் ஒரு மூதாதையரைச் சந்திக்க நேர்ந்தால், மூதாதையரைக் கொன்றுவிடுங்கள். நீங்கள் உங்கள் பெற்றோரைச் சந்தித்தால், உங்கள் பெற்றோரைக் கொல்லுங்கள்.

அப்புறம், முதல் முறையாக விடுதலையடைவீர்கள். விஷயங்களில் சிக்கிக்கொள்ளமாட்டீர்கள். அதோடு எங்கு போக வேண்டும் என்று விரும்பினாலும் சுதந்திரமாகக் கடந்து போவீர்கள்.'

* புத்தரைக் கொல் — கொல் என்பது புத்தரைப் பற்றிய கருத்துகளையும் கற்பனைகளையும் துறத்தல்.

# 127

## பிழையின் வழி

ஒரு மனிதர் காட்டு வழியே சென்றுகொண்டிருந்தார். அப்போது தன்னுடைய கால்களை இழந்த ஒரு நரியைப் பார்த்தார். அது எவ்வாறு வாழ்கிறது என்று நினைத்து வியந்தார். பிறகு அவர் ஒரு புலி தன் வாயில் இரையுடன் வருவதைப் பார்த்தார். புலி தன் வயிறு நிரம்ப சாப்பிட்டுவிட்டு மிச்சம் இருக்கும் இரையை நரிக்காக விட்டுச் சென்றது.

மறுநாள், கடவுள் அந்த நரிக்கு அதே புலியைக் கொண்டு அதே வழியில் உணவு அளித்தார். அந்த மனிதர் கடவுளின் மகத்துவத்தை வியந்து, 'நானும் ஒரு இடத்தில் அமர்ந்து கடவுள் மீது முழு நம்பிக்கை வைத்தால் கடவுள் எனக்குத் தேவையான அனைத்தையும் தருவார்' எனத் தனக்குத்தானே பேசிக் கொண்டார். அவ்வாறே பல நாள்களுக்கு அவர் செய்தார். ஆனால் ஒன்றுமே நடக்கவில்லை. அவர் பசியால் கிட்டத்தட்ட மரணத்தின் விளிம்புக்கு வந்தபோது, ஒரு அசரீரி, 'ஓ பிழையின் வழியில் இருப்பவரே, உண்மையை நோக்கி உன்னுடைய கண்களைத் திற! நரியைப் போல நடந்துகொள்வதை நிறுத்தி விட்டுப் புலியை எடுத்துக்காட்டாகப் பின்பற்று' என்று சொன்னது அவருடைய காதில் விழுந்தது.

128

## நீர் இல்லை, நிலவு இல்லை

எங்காகுவின் புக்கோவிடம் பெண் துறவி சியோனோ ஜென்னைக் கற்றபோது, நீண்ட காலம் தியானம் செய்தும் அவரால் அதனுடைய பலன்களை அடைய முடியவில்லை.

இறுதியில், நிலவு பொழிந்த ஒரு இரவில், மூங்கில் வைத்துக் கட்டிய ஒரு பழைய வாளியில் தண்ணீர் எடுத்துக்கொண்டு வந்தார். அந்த மூங்கில் உடைந்துவிட வாளியின் அடிப்பாகம் கீழே விழுந்துவிட்டது. அந்தக் கணத்தில் சியோனோ விடுதலை அடைந்தார்.

அந்த நினைவைக் கொண்டாடும் விதமாக, ஒரு கவிதையை அவர் எழுதினார்:

இப்படியும் அப்படியும் அந்தப் பழைய வாளியை நான்
  காப்பாற்ற முயன்றேன்
பலவீனமாகிக் கொண்டிருந்த மூங்கில்பட்டை
  நொய்ந்து உடைய,
இறுதியில் வாளியின் அடிப்பாகம் கீழே விழுந்துவிட்டது.
இனி, வாளியில் நீர் இல்லை!
நீரில் இனி, நிலவு இல்லை!

## 129

# நேற்று, இன்று

புத்த சமயத்தைச் சாராத ஒருவர் புத்தரிடம்,

'நேற்று நீங்கள் என்ன உரையாற்றினீர்கள்?'

புத்தர் சொன்னார்:

'நிரந்தரம் குறித்துப் பேசினேன்.'

'நீங்கள் இன்று என்ன பேசினீர்கள்?'

'நிலையாமை பற்றிப் பேசினேன்'

'நேற்று நிரந்தரம் குறித்துப் பேசிவிட்டு, ஏன் இன்று நிலையாமை குறித்துப் பேசினீர்கள்?'

புத்தர்,

'நேற்று அது நிரந்தரமாக இருந்தது. ஆனால் இன்று அது நிரந்தரமாக இல்லை' என்றார்.

130

## மிக அற்புதமான விஷயம்

ஹியாக்ஜோவிடம் ஒரு துறவி, 'மிகமிக அற்புதமான விஷயம் என்ன?' எனக் கேட்டார்.

ஜோ சொன்னார்:

'நான் மிகவும் உயர்ந்த மாபெரும் சிகரத்தில் தனிமையில் உட்கார்ந்திருக்கிறேன்.'

அந்தத் துறவி தலைவணங்கினார். ஜோ அவரை ஓர் அடி அடித்தார்.

# 131

## ஹியாக்ஜோவின் நரி

ருமுறை ஹியாக்ஜோ சில ஜென் விரிவுரைகளை ஆற்றிய போதெல்லாம் வயதான மனிதர் ஒருவர் அதில் கலந்து கொண்டார். துறவிகளால் அவரைப் பார்க்க முடியவில்லை. ஒவ்வொரு சொற்பொழிவு முடிந்ததும் மற்ற துறவிகள் கலையும் போது அந்த மனிதரும் போய்விடுவார். ஆனால், ஒருநாள் மற்றவர்கள் எழுந்துபோயும் அவர் மட்டும் அங்கேயே இருந்தார். ஹியாக்ஜோ அவரிடம், 'நீங்கள் யார்?' என்று கேட்டார்.

அந்த முதியவர், 'நான் ஒரு மனிதனல்ல, ஆனால் காஸ்யப புத்தர் (ஆதிகாலத்தின் ஏழு புத்தர்களில் ஆறாவது புத்தர்) இந்த உலகில் உபதேசம் செய்தபோது நானும் ஒரு மனிதனாக இருந்தேன். நான் ஒரு ஜென் குருவாக இந்த மலையில் வசித்தேன். அந்தச் சமயத்தில், என் மாணவர்களில் ஒருவன் என்னிடம், ஞானமடைந்த ஒருவர் காரணகாரியத் தொடர்பு விதிக்கு உட்பட்டவரா இல்லையா என என்னிடம் கேட்டான். நான் அவனுக்கு, 'ஞானமடைந்த ஒருவர் காரண காரியத் தொடர்பு விதிக்கு உட்பட்டவர் அல்ல' என்று சொன்னேன். பரிபூரணத்தை நான் பற்றிக்கொண்டிருப்பதை நிரூபிக்கும் இந்தப் பதிலுக்காக, ஐந்நூறு பிறவிகளாக நரியாக இருக்கிறேன். இப்போதுகூட நான் நரியாகத்தான் இருக்கிறேன். என்னுடைய இந்த நிலையிலிருந்து உங்கள் ஜென் வார்த்தைகளால்

என்னைக் காப்பாற்றி நரியின் உடலிருந்து நான் வெளியேற உதவ முடியுமா? இப்போது உங்களிடம், 'ஞானமடைந்த மனிதர் காரணகாரியத் தொடர்பு விதிக்கு உட்பட்டவரா என்று நான் கேட்கலாமா?'

ஹியாக்ஜோ சொன்னார்: 'ஞானமடைந்த மனிதரும் இந்த விதிக்கு விலக்கு அல்ல.'

ஹியாக்ஜோவின் வார்த்தைகளால் முதியவர் விழிப்படைந்தார். 'நான் விடுதலையடைந்துவிட்டேன்' என்றவர், ஆழ்ந்த மரியாதையோடு அவரை வணங்கினார். 'இனிமேல் நான் நரியல்ல. ஆனால், நான் வசிக்கும் மலையின் பின்பக்கத்தில் என் உடலை விட்டுவிட்டுப் போக வேண்டியிருக்கிறது. தயைகூர்ந்து துறவியான எனக்கு என் இறுதிச் சடங்கை நீங்கள் செய்ய வேண்டும்' என்றார். அதன் பிறகு அவர் மறைந்துவிட்டார்.

அடுத்த நாள் ஹியாக்ஜோ ஒரு துறவியின் இறுதி யாத்திரைக்கு ஏற்பாடு செய்யுங்கள் எனத் தலைமைத் துறவி மூலம் உத்தர விட்டார். 'சிகிச்சைக் கூடத்தில் நோயுற்ற யாரும் இல்லையே, என்ன அர்த்தத்தில் நமது குரு சொல்கிறார்?' என்று வியந்தனர் துறவிகள்.

இரவு உணவுக்குப் பிறகு ஹியாக்ஜோ துறவிகளை வெளியேற்றி மலைக்கு வழிநடத்திச் சென்றார். அங்குள்ள ஒரு குகையில், தம் கைத்தடியைக் கொண்டு ஒரு பழைய நரியின் பிணத்தைக் கிளறி வெளியே எடுத்தார். அதன்பிறகு ஈமச் சடங்கை நடத்தினார்.

அன்று மாலை ஹியாக்ஜோ துறவிகளிடம் உரையாற்றும் போது, அவர்களுக்குக் காரணகாரியத் தொடர்பு விதி குறித்த அந்தக் கதையைச் சொன்னார்.

இந்தக் கதையைக் கேட்ட ஒபாகு, ஹியாக்ஜோவிடம் கேட்டார்: 'நான் புரிந்துகொண்டேன். ரொம்ப காலத்துக்கு முன்பு குறிப்பிட்ட ஒருவர் தவறான ஜென் பதிலைக் கொடுத்ததால், ஐந்நூறு பிறவிகள் நரியாக இருந்திருக்கிறார். மாறாக அவர் எப்போதும் சரியான பதில் கொடுக்கிறார் என்றால், அவர் என்னாவார்? என்று நான் கேட்க ஆசைப்படுகிறேன்.'

ஹியாகுஜோ, 'இங்கே எனக்குப் பக்கத்தில் வா, நான் உனக்குச் சொல்கிறேன்' என்றார்.

ஒபாகு ஹியாக்ஜோவுக்கு அருகில் சென்று ஆசிரியரின் முகத்தில் ஓங்கி ஓர் அறைவிட்டார். இந்தப் பதிலைத்தான் ஆசிரியர் தனக்குக் கொடுத்திருப்பார் என்று அவருக்குத் தெரியும்.

அவருடைய ஆழ்ந்த அறிவைக் கண்டு ஹியாக்ஜோ கைதட்டி சிரித்தார். 'ஒரு பாரசீக மனிதனுக்கு சிவப்பு தாடி இருந்ததாக நான் நினைத்தேன்' என்று சொன்னவர், 'இப்போது சிவப்பு தாடியுள்ள ஒரு பாரசீகரை நான் பார்க்கிறேன்.'

132

## ஜென்னைக் கருத்தாழத்துடன் புரிந்துகொள்ளுதல்

நமது பழைய சீன மூலப் பிரதிகள் அனைத்தையும்
மொழிபெயர்க்க சிரமப்படுவதில் எவ்வித உண்மையான
அர்த்தமும் இல்லை—
நீங்கள் உண்மையான ஜென்னைப் புரிந்துகொள்வதில்
கருத்தாழம்
கொண்டிருக்கும் பட்சத்தில்
மழையின் ஓசைக்கு மொழிபெயர்ப்பு தேவையில்லை.

## 133

## போவதற்கு இடம் ஏதுமில்லை

ஜென் குருவான இஸ்ஸான் டோர்சி மரணப் படுக்கையில் இருந்தபோது அவருடைய நெருங்கிய நண்பர்களில் ஒருவர் அவரைப் பார்க்க வந்தார்.

'நான் உங்களைப் பார்க்காமல் கஷ்டப்படுவேன்' என்றார் நண்பர். 'நானும் உங்களைப் பார்க்காமல் கஷ்டப்படுவேன்' என்ற இஸ்ஸான், சற்று நேரம் மௌனமாக இருந்தார்.

பிறகு, நண்பரிடம் இஸ்ஸான் கேட்டார்:

'நீ எங்கேயாவது போகப் போகிறாயா?'

## 134

# ஹோஷினின் கடைசிக் கவிதை

சீனாவில் ஜென் குரு ஹோஷின் பல ஆண்டுகளாக வாழ்ந்து வந்தார். பிறகு ஜப்பானின் வடகிழக்குப் பகுதிக்குத் திரும்பி அங்கு தம் சீடர்களுக்குப் போதித்து வந்தார். மிகவும் முதியவரான போது அவர் தாம் சீனாவில் கேட்ட ஒரு கதையை அவர்களுக்குச் சொன்னார். இதுதான் அந்தக் கதை:

ஓர் ஆண்டு டிசம்பர் மாதம் 25ஆம் தேதி, டோகுஃப்பு என்ற முதிய குரு ஒருவர் தம் சீடர்களிடம் சொன்னார்: 'அடுத்த ஆண்டு நான் உயிரோடு இருக்கப் போவதில்லை. ஆகவே நீங்கள் இந்த ஆண்டு என்னை நல்லவிதமாக நடத்த வேண்டும்.'

நகைச்சுவையாகச் சொல்கிறார் என்று சீடர்கள் நினைத்தனர். ஆனால் தங்கள் குரு நல்மனதைக் கொண்டவர் என்பதால், விடைபெறப் போகும் ஆண்டின் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு வரும் தத்தம் பங்குக்கு விருந்து கொடுத்து குருவைக் கௌரவப் படுத்தினர்.

புத்தாண்டுக்கான விழாவில், டோகுஃப்பு, 'நீங்கள் என்னிடம் நல்லபடியாக நடந்துகொண்டீர்கள். நாளை பிற்பகல் வீழ்பனி நிற்கும் போது உங்களிடமிருந்து நான் விடைபெறுவேன்' என்றார்.

அந்த இரவு ரொம்ப தெளிவாக இருந்தது, பனியும் இல்லை... குருவுக்கு வயதாகிவிட்டது, அதனால் அர்த்தமில்லாமல் பேசுகிறார் என நினைத்துச் சீடர்கள் சிரித்தனர். ஆனால், நள்ளிரவில் பனி பொழிய ஆரம்பித்தது. அடுத்த நாள் தங்கள் குருவைக் காணவில்லை. அவர்கள் தியான மன்றத்துக்குச் சென்றார்கள். அங்கே அவர் இயற்கை எய்தியிருந்தார்.

இந்தக் கதையைச் சொன்ன ஹோஷின் தம் சீடர்களிடம், 'ஒரு ஜென் குருவுக்குத் தன் இறப்பை முன்னுணர்ந்து சொல்ல வேண்டிய அவசியமில்லை. ஆனால், அவர் உண்மையிலேயே விரும்பினால், அப்படிச் செய்ய முடியும்' என்றார்.

'உங்களால் முடியுமா?' என்று யாரோ ஒருவர் கேட்டார்.

'முடியும்' என்று பதிலளித்த ஹோஷின், 'இன்றிலிருந்து ஏழாவது நாளில் உங்களுக்கு நான் என்ன செய்ய முடியுமென்று காட்டுகிறேன்' என்றார்.

அவர் சொன்னதை சீடர்கள் யாரும் நம்பவில்லை. சொல்லப் போனால், சீடர்களில் பலர் இந்த உரையாடலையே மறந்து விட்டனர் – மறுபடியும் குரு ஹோஷின் அவர்களை அழைத்த போது.

'ஏழு நாள்களுக்கு முன்பு, நான் உங்களிடமிருந்து பிரிந்து விடுவேன் என்று சொன்னேன். ஒருவர் விடைபெறும்போது கவிதை எழுதுவது ஒரு சம்பிரதாயம். ஆனால் நான் கவிஞனும் இல்லை, அலங்கார எழுத்துக்களை வரையும் கலைஞனும் இல்லை... உங்களில் ஒருவர் என் கடைசி வார்த்தைகளை வரைந்தெழுத வேண்டும்' என்று சொன்னார்.

குரு கிண்டலாகச் சொல்கிறார் என்று சீடர்கள் நினைத்தனர். ஆனால் அவர்களில் ஒருவர் எழுத ஆரம்பித்துவிட்டார்.

'நீங்கள் தயாரா?' ஹோஷின் கேட்டார்.

'ஆம், ஐயா' என்றார் எழுதத் தயாராக இருந்தவர்.

பின்னர் ஹோஷின் உச்சரித்தார்:

'நான் ஒளியிலிருந்து வந்தேன்
ஒளிக்கே திரும்புகிறேன்
என்ன இது?'

கவிதைக்கு சம்பிரதாயமாக நான்காவது வரி வேண்டும், ஆகவே ஒரு சீடர் கேட்டார்: 'குருவே, நமக்கு இன்னும் ஒரு வரி பாக்கி.'

ஹோஷின், 'ஹோ!' என்று வெற்றி பெற்ற சிங்கம் போல கர்ஜித்துவிட்டு மறைந்தார்.

## 135

## மனநிறைவு

கன்சானுக்கு ஒன்பது வயதாகும் போது, அவர் வீட்டைவிட்டு வெளியேறினார். அவர் தம் புத்திசாலித்தனத்தால் பௌத்த, கன்ஃபூசிய செவ்விலக்கியங்கள் இரண்டையும் பயின்றிருந்தார். தாம் படித்த ஒரு புத்தகத்தால் தூண்டுதலைப் பெற்று மேற்கு ஜப்பானில் சில காலத்துக்குத் தேர்ந்தெடுத்த சிலரே பயிலும் பௌத்தத்தைப் படித்துப் பயின்றுவந்தார். பின்னர் தலைநகர் எடோவுக்குச் சென்று அங்கே பேரளவாயிருந்த பௌத்த சமய விதித் திரட்டை முழுவதும் ஆய்வு செய்தார். இதற்கெல்லாம் இருபது ஆண்டுகளுக்குப் பிறகு கன்சான் ஒரு ஜென் குருவைச் சந்தித்தார். பௌத்த நடைமுறைகளை ஏற்கெனவே நன்கு பயின்றிருந்ததால் கன்சான் இரண்டே ஆண்டுகளில் ஜென் போதனையில் நிபுணத்துவம் பெற்றார். இதைத் தொடர்ந்து தெற்கத்திய ஜப்பானில் இருந்த கோயில் ஒன்றின் மடத்துக்குத் தலைவர் பதவியை ஏற்றுக்கொள்ள அனுப்பி வைக்கப்பட்டார். அவர் அங்கு போய்ச் சேர்ந்த போது, அந்தப் பகுதியில் குடியும் வெறியாட்டமும் அதிகம் இருப்பதைக் கண்டார். கோயிலுக்கு வருபவர்களுக்கு மதுக்கூடத்தில் செய்வது போல மது விநியோகிக்கப்பட்டது.

கன்சான் மடத்துத் தலைவர் பதவியை ஏற்றுக்கொண்ட அன்றைய தினமே அங்கிருந்த மது ஜாடிகள், மது விநியோகித்த மேசைகள், சாம்பல் கிண்ணங்கள் எல்லாவற்றையும் ஒன்று விடாமல் உடைத்தார். அதற்குப் பிறகு, விருந்தினர்களுக்கு ஒரு கோப்பை சாதாரணத் தேநீரே தரப்பட்டது.

மூன்று ஆண்டுகளுக்குப் பிறகு, கன்சான் ஓய்வுபெற்றார். தம் குடிசை வாசலில் இவ்வாறு எழுதித் தொங்கவிட்டு விட்டு மலைப்பகுதிக்குள் காணாமல் போனார்.

'மனநிறைவு'

136

## மெய்வழிப் பாதை

நினகாவா இறப்பதற்குச் சில நாள்களுக்கு முன்பு ஜென் குரு இக்யூ அவரைப் பார்க்க வந்திருந்தார். அவரிடம், 'உங்களை நான் வழி நடத்தட்டுமா?' என்று இக்யூ கேட்டார்.

நினகாவா அதற்கு, 'நான் தனியாகவே வந்தேன். நான் தனியாகச் செல்வேன். நீங்கள் எனக்கு என்ன உதவி செய்ய முடியும்?' என்றார்.

இக்யூ, 'உண்மையில் நீங்களே வருவதாகவும் போவதாகவும் எண்ணியிருந்தால், அது மாயத் தோற்றம். வருவதும் போவதும் இல்லாத பாதையை நான் காட்டுகிறேன்' என்று சொன்னார்.

இந்த வார்த்தைகளால் இக்யூ அந்தப் பாதையை மிகத் துல்லியமாக வெளிப்படுத்த, நினகாவா புன்னகைத்து இயற்கை எய்தினார்.

## 137

## சாட்டையின் நிழல்

பௌத்தரல்லாத ஒருவர் புத்தரிடம், 'எனக்குச் சொற்களால் நிறைவில்லை; மௌனத்தாலும் நிறைவில்லை' என்றார். புத்தர் சும்மா வெறுமனே மௌனமாக அமர்ந்திருந்தார். பௌத்தர் அல்லாதவர் வியப்போடு, 'உலகம் போற்றுபவரின் கருணை என் மாயையின் மேகங்களைக் கலைத்து என்னை தர்ம வழியில் பயணிக்க வைத்தது' என்று சொல்லித் தம் வணக்கங்களைத் தெரிவித்துவிட்டுக் கிளம்பினார். அதற்குப் பிறகு ஆனந்தா, 'அந்தப் பௌத்தரல்லாதவர் எதை உணர்ந்து கொண்டதால், உங்களை அப்படிப் பாராட்டினார்' என்று புத்தரிடம் கேட்டார்.

அதற்கு உலகம் போற்றுபவர், 'நல்ல ஜாதிக் குதிரை சாட்டையின் நிழலைக் கண்டாலே நகரும்' என்றார்.

***

*முமோனின் கருத்துரை*

புத்தரின் சீடர் ஆனந்தா, ஆனால் அவர் பௌத்தரல்லாதவரைவிடக் குறைந்த அளவே உணர்ந்திருக்கிறார். பௌத்தர் அல்லாதவருக்கும் புத்தரின் சீடருக்கும் இடையில் எவ்வளவு தூரம் உள்ளது? என்று இப்போது சொல்லுங்கள்.

## 138

### ஏன் நீ தாடி வைத்துக் கொள்ளவில்லை?

தாடியுடன் இருந்த போதிதர்மாவின் படத்தைத் பார்த்த வக்குவான், 'இந்தக் காட்டானுக்கு ஏன் தாடியில்லை?' என்று புகாராகக் கேட்டார்.



*முமோனின் கருத்துரை*

நீங்கள் ஜென்னைப் பயின்றால் முழு மனத்தோடு பயில வேண்டும். நீங்கள் ஞானம் அடைந்தால், அது உண்மையான ஞானமாக இருக்க வேண்டும். நீங்கள் போதிதர்மரை நேருக்கு நேராகப் பார்த்தால் அப்போது உங்களுக்குச் சரியாகப் புரிந்துவிடும். ஆனால் அதைச் சொற்களால் விளக்க ஆரம்பித்தால், நீங்கள் இருமைக்குள் வீழ்வீர்கள்.

# இயல் ஒன்பது

## உலகப் பிறப்பிடத்துக்கும் தொடக்கத்துக்கும் திரும்புதல்




பிறப்பிடத்துக்கும் அதன் வேர்களுக்கும்
திரும்ப பல் நடவடிக்கைகளை எடுத்தாயிற்று.
தொடக்கத்திலிருந்தே குருடாகவும்
செவிடாகவும் இருந்திருந்தால் நன்றாக இருந்திருக்கும்!
ஒருவர் தம்முடைய மெய்யான இருப்பிடத்தில் வசித்துக்
கொண்டு வெளியே இருப்பது குறித்து
கவலையின்றி இருக்கிறார் —
அந்த நதி அமைதியாக ஓடுகிறது,
பூக்கள் சிவப்பாக இருக்கின்றன.

‘பூத்துக் குலுங்குகிறது ஒரு மரம்.
ஓடும் ஓர் ஓடை, பறவைகளும் மீன்களும் இருக்கின்றன.
நீங்கள் முழுமையாக ‘மரணமடைந்தால்’
ஒவ்வொரு மெய்ம்மையின் இதயத்திலும்
விழிப்புணர்வை அடைவீர்கள்.

இங்கே மனித ஜீவன் காட்டப்படவில்லை.
இது ஒரு மனித மையமுள்ள உலகமல்ல.
அது ஒரு மனிதக் கட்டுமானம்.
ஆனால் அத்தகைய மெய்ம்மையில்
ஒன்றோடொன்று சார்ந்து ஒன்றாக எழுவது,
ஒன்றாக உருவாக்குவது, அதன் தீராத ஆழத்தில்
முடிவற்ற சாத்தியங்களும் காட்டப்படுகின்றன.’

## 139

# உண்மையான அற்புதம்

ரியுமொன் கோயிலில் பங்கெய் உரையாற்றிய போது, அன்பின் புத்தர் என்பதைத் திரும்பத் திரும்ப உச்சாடனம் செய்வதால் மீட்சி கிடைக்கும் என்பதை நம்புகிற ஒரு ஷின்ஷு சமய குரு, பங்கெய் உரையைக் கேட்க வந்த கூட்டத்தைக் கண்டு பொறாமைப்பட்டு அவரோடு விவாதம் செய்ய வேண்டும் என விரும்பினார்.

பங்கெய் ஒரு சொற்பொழிவில் இருந்தபோது அந்தச் சமய குரு நுழைந்தார். அந்த ஆசாமியால் குழப்பம் ஏற்பட, பங்கெய் தம் சொற்பொழிவை நிறுத்திவிட்டுக் கூச்சல் குறித்துக் கேட்டார்.

'எங்கள் சமயத்தின் நிறுவனர்' என்று பெருமையடித்த அந்தச் சமய குரு, 'அற்புத சக்திகளை வைத்திருந்தார். அவர் நதியின் ஒரு கரையில், தம் கையில் ஒரு தூரிகையைப் பிடித்துக்கொள்ள, அவருடைய உதவியாளர் அடுத்த கரையில் நின்று கொண்டு கையில் ஒரு தாளைப் பிடித்துக்கொள்ள, எங்கள் ஆசிரியர் அமிதாவின் புனிதப் பெயரை காற்று மூலம் எழுதுவார். உங்களால் அப்படி ஒரு அதிசயத்தைச் செய்ய முடியுமா?' என்றார்.

பங்கெய் சாதாரணமாகப் பதில் சொன்னார்: 'அநேகமாக உங்கள் நரியால் இந்தத் தந்திரத்தைச் செய்ய முடியும். ஆனால் அது ஜென் செயல்முறை அல்ல.

பசியெடுக்கும் போது நான் சாப்பிடுவேன்,
தாகம் ஏற்படும்போது தண்ணீர் குடிப்பேன், அதுதான்
என் அதிசயம்' என்றார்.

## 140

# மகிழ்வின் குரல்

குரு பங்கெய் காலமான பிறகு, அவருடைய கோயிலுக்குப் பக்கத்தில் வாழ்ந்த பார்வையற்ற ஒருவர் தம் நண்பரிடம் சொன்னார்: 'பிறப்பிலிருந்தே நான் பார்வையற்றவன். ஒருவரின் முகத்தைப் பார்க்க என்னால் முடியாது. ஆகவே, அந்த மனிதனின் குரலை வைத்தே அவரின் குணாதிசயத்தைத் தீர்மானித்து விடுவேன். பொதுவாக, இன்னொருவரின் மகிழ்ச்சிக்கோ வெற்றிக்கோ ஒருவர் வாழ்த்துவதை நான் கேட்கும்போது, அந்தக் குரலில் இரகசியமாக தொனிக்கும் பொறாமையையும் நான் கேட்கிறேன். இன்னொருவரின் துயரத்துக்கு வருத்தம் தெரிவிப்பவரின் குரலில் மகிழ்ச்சியையும் திருப்தியையும் நான் கேட்கிறேன். தம் உலகில் தாம் பெற இன்னும் ஏதோ மீதமிருக்கிறது என்று அவர் உண்மையில் மகிழ்வதைப் போல அந்தக் குரல் இருக்கும்.

இருந்தபோதிலும், என் அனுபவத்தில் பங்கெயின் குரல் எப்போதும் நேர்மையாக இருந்தது. அவர் மகிழ்ச்சியை வெளிப்படுத்தும்போது நான் கேட்டது வெறும் மகிழ்ச்சியை மட்டும்தான். எப்போதெல்லாம் அவர் துயரத்தை வெளிப்படுத்தினாரோ அப்போது நான் கேட்டது துயரத்தை மட்டுமே' என்றார்.

141

## தோட்டத்தில் ஆமை

டய்ஸுயி மடத்தின் தோட்டத்தில் துறவியொருவர் ஓர் ஆமையைப் பார்த்துவிட்டுத் தம் குருவிடம், 'எல்லா ஜீவன்களும் தங்கள் எலும்புகளை சதையையும் தோலையும் கொண்டு மூடிக்கொண்டு இருக்கையில், இந்த ஜீவன் மட்டும் சதையையும் தோலையும் தன் எலும்பைகளைக்கொண்டு மூடி இருக்கிறதே ஏன்?' என்று கேட்டார்.

குரு டய்ஸுயி தம் செருப்புகளில் ஒன்றைக்கொண்டு ஆமையை மூடினார்.

## 142

## எல்லாமே நல்லதுதான்

பன்ஸான் ஒருநாள் சந்தைக்குள் நடந்துகொண்டிருந்தபோது கசாப்புக்கடைக்காரருக்கும் வாடிக்கையாளருக்கும் இடையே நிகழ்ந்த உரையாடல் ஒன்று அவர் காதில் விழுந்தது.

'உங்களிடமிருக்கும் மாமிசத் துண்டுகளில் நல்ல துண்டைப் போடுங்கள்' சொன்னார் வாடிக்கையாளர்.

'என் கடையில் இருப்பது எல்லாமே நல்லதுதான்' என்று பதிலளித்தார் கசாப்புக்கடைக்காரர். 'இங்கு இருக்கும் மாமிசத் துண்டுகளில் நல்லாயில்லாதது என்று ஒரு துண்டையும் உங்களால் கண்டுபிடிக்க முடியாது.'

அந்த வார்த்தைகளைக் கேட்டதும்
பன்ஸான் ஞானம் அடைந்தார்.

# 143

## கெய்ச்சூவின் சக்கரம்

கெட்டான் ஒரு துறவியிடம் கேட்டார்:
'கெய்சூ (புராணங்களில் சக்கரம் செய்பவர்) ஒரு நூறு வண்டிகளைச் செய்தார். நாம் அவற்றின் சக்கரங்களில் உள்ள ஆரக்கால்களை இணைத்திருக்கும் மையக்குடத்தை நீக்கிவிட்டால், அது என்னவாகும்?'

144

## பயமற்று

ஜப்பானில் பிரபுத்துவ ஆட்சி நடந்துவந்த காலத்தில் உள்நாட்டுப் போர்கள் நடந்த போது, ஒரு படை சட்டென்று ஒரு நகரத்துக்குள் நுழைந்து நகரத்தை ஆக்ரமித்துவிடும். ஒரு குறிப்பிட்ட கிராமத்திற்குள் படை நுழைவதற்குள் ஒரு ஜென் குருவைத் தவிர, அனைவரும் கிராமத்தைவிட்டு ஓடி விட்டனர். ஜென் குருவான இந்தக் கிழவரைப் பார்க்க ஆர்வமடைந்த இராணுவத் தலைமை அதிகாரி, இந்த குரு எந்த வகையான மனிதர் என்று பார்ப்பதற்காகக் கோயிலுக்குச் சென்றார்.

தனக்குப் பழகிப்போன மரியாதையோடும் பணிவோடும் நடத்தப்படாததைக் கண்டு அந்த இராணுவ அதிகாரி கோபத்தில் வெடித்தார். 'மடையா!' என்று கத்தியபடித் தம் வாளை எடுக்க கைநீட்டியவாறு, 'கண்சிமிட்டாமல் உன்னை வாளால் வெட்டக்கூடிய ஒருவர்முன் நீ நின்றுகொண்டிருப்பதை உணர வில்லையா!' என்று சப்தமிட்டார்.

இந்தப் பயமுறுத்தலுக்குப் பிறகும் அசராத குரு அமைதியாக, 'கண்ணைச் சிமிட்டாமல் வாளால் வெட்டுபடக்கூடிய ஒருவருக்கு முன்னால் நீங்கள் நின்றுகொண்டிருப்பதை உணரவில்லையா?' என்று கேட்டார்.

## 145

### *அப்படியா?*

ஜென் குரு ஷிடோ புனன் தூய வாழ்க்கை வாழ்கிறார் என்று அவருடைய அண்டை வீட்டார் புகழ்ந்தனர். ஷிடோ புனன் வீட்டுக்கு அருகில் உணவு தானியங்கள் விற்கும் கடையின் உரிமையாளருடைய ஒரு குடும்பமும் வசித்துவந்தது. அவர் களுக்கு ஓர் அழகான மகள். திடீரென, தங்கள் மகள் கர்ப்பமாக இருப்பதை அந்தப் பெற்றோர் அறிந்தனர்.

அவர்கள் கோபத்தால் கொந்தளித்தனர். மகளோ, குழந்தை யின் தந்தை யார் என்பதைச் சொல்லவே இல்லை. ஆனால், அவளை மிகவும் துன்புறுத்திய பிறகு கடைசியில், அவள் குருவின் பெயரைச் சொன்னாள்.

ஆத்திரம்கொண்ட பெற்றோர் குருவிடம் போனார்கள். ஷிடோ புனன், 'அப்படியா?' என்று மட்டும் சொன்னார்.

மகளுக்குக் குழந்தை பிறந்ததும் அதை ஷிடோ புனனிடம் கொடுத்துவிட்டனர். இந்த நிகழ்வால், அவர் புகழை இழந்தார். அதற்காக அவர் கவலைப்படவில்லை. அவர் அந்தக் குழந்தையை மிகவும் கவனமாகப் பார்த்துக்கொண்டார். அந்தச் சிசுவுக்குத் தேவையான பாலையும் மற்ற பொருள்களையும் அண்டை வீட்டாரிடமிருந்து பெற்றுக் கொடுத்தார்.

ஓர் ஆண்டு கழிந்தது. குழந்தை பெற்ற அந்தப் பெண்ணால் அதற்கு மேல் தாங்க முடியவில்லை. அவள் பெற்றோரிடம், குழந்தையின் உண்மையான தந்தை மீன்சந்தையில் வேலை பார்க்கும் ஓர் இளைஞன் என்ற உண்மையைச் சொன்னாள்.

அந்தப் பெற்றோர் உடனே ஷிடோ புனனைச் சந்தித்து நீண்ட நேரம் மன்னிப்புக் கேட்டனர். அதோடு, குழந்தையை மறுபடியும் கேட்டு வற்புறுத்தினர். சம்மதித்த குரு குழந்தையை அவர்களிடம் நீட்டியபடியே, 'அப்படியா?' என்றார் மறுபடியும்.

## 146

### சுபுத்தியின் சூன்யம்

சுபுத்தி புத்தரின் சீடராக இருந்தார்.

சூன்யத்தின் (வெறுமையின்) ஆற்றலைப் புரிந்துகொள்ளும் சக்தி அவருக்கு இருந்தது. அந்தக் கண்ணோட்டத்தில், அகத்தின் உண்மைக்கும் புறத்தின் உண்மைக்குமான உறவைத் தவிர எதிலும் ஒன்றுமில்லை.

ஒருநாள், மிக உயர்ந்த சூன்ய மனநிலையில் சுபுத்தி ஒரு மரத்தின் கீழ் அமர்ந்திருந்தார். அவர் மீது மலர்கள் விழ ஆரம்பித்தன.

'சூன்யம் மீதான உங்களுடைய பேருரைக்காக நாங்கள் பாராட்டுகிறோம்' என்று தெய்வங்கள் அவர் காதுக்குள் கிசுகிசுத்தன.

'ஆனால், நான் சூன்யம் குறித்துப் பேசவில்லையே' என்றார் சுபுத்தி. 'நீங்கள் சூன்யம் குறித்துப் பேசவில்லை, நாங்களும் சூன்யத்தைக் கேட்கவில்லை' என்று மறுமொழி கொடுத்த தெய்வங்கள்,

'இதுதான் உண்மையான சூன்யம்' என்றன.

மலர்கள் மழையாக சுபுத்தி மேல் பொழிந்தன.

## 147

## நீங்கள் என்ன செய்கிறீர்கள்? நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?

நவீன காலத்தில் குருக்களையும் சீடர்களையும் பற்றியும், ஒரு குருவின் போதனை எவ்வாறு அவருக்குப் பிடித்தமான சீடர்களால் மரபுரிமையாகப் பெறப்பட்டு, பிறகு அவர்களைப் பின்பற்றுபவர்களை எவ்வாறு சென்றடைகிறது என்பதைப் பற்றியும் பல அபத்தங்கள் பேசப்படுகின்றன. ஜென், இதயத்திலிருந்து இதயத்துக்குக் கற்றுத் தரப்பட வேண்டும். முற்காலத்தில் இப்படித்தான் போதனையும் கற்றலும் நடந்தன. தொழில்திறப் பிரகடனத்துக்கும், தன்முனைப்பை வலியுறுத்தும் சொல்லுக்கும் பதிலாக மௌனமும் அடக்கமும் கோலோச்சிக் கொண்டிருந்தன. அவ்வாறான படிப்பினையைப் பெற்றவன் இருபது ஆண்டுகள் கூடத்தான் கற்றுக்கொண்டதை வெளியில் காட்டாது இருந்தான். வேறொருவன் தனக்கான உண்மையான ஆசானைத் தேடிக் கொண்டிருக்கும் போதுதான் அருகில் ஓர் ஆசான் இருப்பதும் பாடம் சொல்லித் தரப்பட்டுவிட்டதும் தெரியவரும். அப்போது கூட சூழ்நிலை இயற்கையாகவே எழும்; கற்பிக்கப்பட்ட பாடம் இயல்பாக அவருக்குப் போய்ச் சேர்ந்திருக்கும். எந்தச் சூழ்நிலையிலும், நான் இன்னாருடைய வழித்தோன்றல் இன்னாரிடம் கற்றுக்கொண்டவன் என்று ஆசான் பெருமையாகச் சொல்லிக்கொண்டதில்லை. அவ்வாறு சொல்லிக் கொள்வது எதிர்மறையானதாகப் போய்விடும்.

ஜென் குரு மூ-நானுக்கு ஒரே ஒரு வழித்தோன்றல்தான் இருந்தார். அவருடைய பெயர் ஷோஜூ. ஷோஜூ அவருடைய ஜென் கல்வியை முடித்தவுடன் மூ-நான் அவரைத் தன் அறைக்கு அழைத்தார். அவர் ஷோஜூவிடம், 'எனக்கு வயதாகிக்

கொண்டிருக்கிறது. நீதான் என்னுடைய போதனைகளைத் தொடரக்கூடிய என் வழித்தோன்றல். ஏழு தலைமுறைகளாக குருக்கள் குறிப்பெழுதிய இந்தப் புத்தகத்தை வைத்துக்கொள். எனது புரிதலுக்கு ஏற்ப நானும் பல குறிப்புகளை இதில் எழுதியிருக்கிறேன். இந்தப் புத்தகம் மிகவும் மதிப்பு வாய்ந்தது. நீதான் அடுத்த வாரிசு என்பதை வலியுறுத்த இந்தப் புத்தகத்தை உனக்குத் தருகிறேன்' என்றார்.

'புத்தகம் அத்தனை மதிப்பு மிக்கது என்றால் அதை நீங்களே வைத்துக்கொள்ளுங்கள். நான் உங்களிடம் இருந்து உங்கள் ஜென்னை எழுத்தில்லாமல் கற்றுக்கொண்டுவிட்டேன். நான் அதில் திருப்திகொண்டிருக்கிறேன்' என்று பதிலளித்தார் ஷோஜு.

மூ-நான், 'எனக்கு அது தெரியும். இருந்தாலும், இது ஏழு தலைமுறைகளாக எழுதிக்கொண்டு வந்த புத்தகம். நீ ஜென்னைக் கற்றுக்கொண்டதன் அடையாளமாக இதை வைத்துக்கொள், இந்தா' என்றார்.

இருவரும் ஒரு உலை நெருப்புக்கு முன்னால் நின்று பேசிக் கொண்டிருந்தனர். புத்தகம் தன் கைக்கு வந்த அடுத்த கணம் அதைக் கொழுந்துவிட்டு எரிந்துகொண்டிருந்த உலையின் தீயில் போட்டார் ஷோஜு. அவருக்கு உடைமைகள் மீது வேட்கை யில்லை.

இதற்கு முன் கோபப்பட்டிராத மூ-நான் கோபத்தில், 'நீங்கள் என்ன செய்கிறீர்கள்?' என்று கத்தினார்.

ஷோஜுவும் 'நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?' என்று திரும்பக் கேட்டார்.

செய்ஜோ: ஒரு கோவான்

கோசோ ஒரு துறவியிடம் கேட்டார்,
'செய்ஜோவும் அவளுடைய ஆன்மாவும் இரண்டாக இருந்தன; இவற்றில் எது உண்மையான செய்ஜோ?'

# 148

## செய்ஜோவும் அவளுடைய ஆன்மாவும்

செய்ஜோ தன் கிராமத்து இளைஞன் ஒருவனிடம் காதல் கொண்டிருக்கிறாள். இருவரும் திருமணம் செய்துகொள்ள ஆசைப்படுகின்றனர். ஆனால், அந்தக் காலத்து வழக்கப்படி, அவள் யாரைத் திருமணம் செய்துகொள்ள வேண்டும் என்று அவளுடைய தந்தைதான் முடிவு செய்கிறார். அது அவளுடைய காதலனாக இல்லை. மனமுடைந்த அவளுடைய காதலன் அவள் இன்னொருவனைத் திருமணம் செய்துகொண்டு வாழ்வதை அந்தக் கிராமத்தில் இருந்து பார்த்துக் கொண்டிருக்கத் தன்னால் முடியாது, அதனால் கிராமத்தைவிட்டுப் வெளியேறப் போவதாகச் சொல்கிறான். மாலையில் கிராமத்து நதியைக் கடக்க ஒரு படகை எடுத்துக்கொண்டிருந்தபோது செய்ஜோ தன்னை நோக்கி ஓடிவருவதைப் பார்க்கிறான். அவள் அவனிடம், 'நீயின்றி நான் வாழ்வதெப்படி? நானும் உன்னோடு வருகிறேன்' என்கிறாள். காதலர்கள் தொலைதூரப் பிரதேசம் ஒன்றுக்குப் போய் வாழ்ந்து இரண்டு குழந்தைகளையும் பெற்று வளர்க்கின்றனர். இந்தக் காலங்களில் எல்லாம் தன் தந்தையின் பேச்சைக் கேட்காமல் ஓடிவந்த குற்ற உணர்வில் இருக்கிறாள். அவளுடைய காதலனும் தம் குடும்ப வழக்கத்தை மீறியதால்

அவஸ்தைப்பட்டுக் கொண்டிருக்கிறான். ஆகவே அவர்கள் ஊர் திரும்பி மன்னிப்புக் கேட்டுச் சமரசப்படுத்த முடிவெடுக் கிறார்கள். நதியைக் கடந்தவுடன் தன் மனைவியை நதிக் கரையில் காத்திருக்குமாறு சொல்லிவிட்டு, தன் மாமனார் எந்த மனநிலையில் இருக்கிறார் என்று தெரியாததால், தான் போய் அவரிடம் மன்னிப்புக் கேட்டுவிட்டுத் திரும்ப வந்து அவளை அழைத்துப் போவதாகச் சொல்கிறான். அவன் நேரே தன் மாமனாரிடம் போய் அவர் காலில் விழுந்து அவருடைய மகள் செய்ஜோவைக் கூட்டிச் சென்றதற்காக மன்னிப்புக் கேட்கிறான். செய்ஜோவின் தந்தை அவனை வியப்போடு பார்த்துவிட்டு, அவனிடம், 'நீ என்ன சொல்கிறாய்? நீ ஓடிப் போன அன்றைக்கு என் மகள் செய்ஜோ நோய்வாய்ப்பட்டாள்; அவளால் நடக்கவோ, பேசவோ முடியவில்லை. அவள் இத்தனை ஆண்டு களாகப் படுத்த படுக்கையாகக் கிடக்கிறாள்' என்று சொல்கிறார். காதலன், 'இல்லை, மாமனாரே, உங்கள் மகள் என்னோடுதான் இருக்கிறாள். இப்போதுகூட நதிக் கரையில் காத்திருக்கிறாள். நான் போய் அவளைக் கூட்டிக்கொண்டு வருகிறேன்' என்று சொல்கிறான்.

ஆகையால் நதிக்கரையை நோக்கி ஓடுகிறான். தந்தை, மகள் படுத்த படுக்கையாகக் கிடக்கும் தம் வீட்டிற்குள் போகிறார். அவள் நடக்கவோ, பேசவோ முடியாமல் படுக்கையில்தான் கிடக்கிறாள். ஆனால் விழிப்போடு தெளிவாக இருக்கிறாள். அவர் தம் மகளிடம், 'எப்போதோ காணாமல் போன அவளது காதலன் திரும்ப வந்திருப்பதாகவும், அதுவும் செய்ஜோ தன்னோடு ஓடிவந்து சேர்ந்து வாழ்ந்து தங்களுக்கு இரண்டு குழந்தைகள் இருப்பதாகக் கட்டுக்கதை சொல்வதாகவும், இப்போது அவள் நதிக்கரையில் காத்திருப்பதாகவும் சொல் கிறான்' என்றார். செய்ஜோ இந்தக் கதையைக் கேட்டவுடன், படுக்கையில் இருந்து துள்ளி எழுந்து நதிக்கரையை நோக்கி ஓடுகிறாள். மற்றொரு செய்ஜோ வீட்டை நோக்கி ஓடிவருகிறாள்.

இருவரும் சந்திக்கிறார்கள், ஒருவராகிறார்கள்.

149

## எனக்கு உதவுங்கள்

ஒரு நாள் ஜோஷு உறைபனியில் விழுந்த போது, 'தூக்கி விடுங்கள்! உதவுங்கள்!' எனக் கூப்பிட்டார்.

ஒரு துறவி உடனே வந்து அவருக்குப் பக்கத்தில் படுத்தார். ஜோஷு எழுந்து சென்றுவிட்டார்.

## 150

### சாமானியரா ஞானியா?

ஓர் இரவு விருந்துக்காக இராணுவத் தளமொன்றில் நுழைந்து கொண்டிருந்தார் குரு.

வாயிலில் ஓர் அதிகாரியைக் கடக்கும்போது அங்கிருந்த ஒரு வெறும் மரக்கம்பத்தைக் காட்டி, 'சாமானியரா, ஞானியா?' என்று குரு கேட்டார்.

அதிகாரியிடம் பதிலில்லை. குரு வாயிற் கம்பத்தைத் தட்டி, 'நீங்கள் முயன்று பதில் சொல்லியிருந்தாலும் இது இன்னும் ஒரு மரக் கம்பமாகத்தான் இருக்கும்' என்று சொன்னார்.

151

## சூரிய முக புத்தர்

மாபெரும் குரு மாட்சூ பாஸோ மிகவும் நோய்வாய்ப் பட்டிருந்தார். கோயிலின் முதன்மைத் துறவி அவருக்கு மரியாதை செலுத்த வந்தார். அவர் குருவிடம் கேட்டார்,

'இப்போது எப்படி இருக்கிறது?'

குரு, 'சூரியமுக புத்தர், சந்திரமுக புத்தர்' என்றார்.

***

புராணத்தில் உள்ள பழைமையான சூத்திரம் ஒன்று சொல்கிறது:
சூரியமுக புத்தர் 1800 ஆண்டுகள் வாழ்கிறார்,
சந்திரமுக புத்தர் ஓர் இரவு ஒரு பகலுக்காக வாழ்கிறார்.

***

## 152

## ஊடுகடத்தலின் மர்மம்

போதிதர்மர் மேற்கு நோக்கி இந்தியாவுக்குத் திரும்புவதற்கு முன் அவர் தம் சீடர்களை அழைத்துக் கேட்டார். 'நீங்கள் ஒவ்வொருவரும் அடைந்தது என்னவென்று சொல்லுங்கள்' என்று கேட்டார். டாவோ-ஃபு, 'உண்மை சொற்களிலோ எழுத்துக்களிலோ ஒட்டிக்கொண்டிருப்பதில்லை, அவற்றுக்குப் புறம்பானதுமல்ல. அது தர்ம வழியாக இயங்கு கிறது. இதுதான் நான் காண்பதெல்லாம்' என்றார்.

குரு சொன்னார்:

'நீங்கள் என்னுடைய தோலை அடைந்துவிட்டீர்.'

ட்சுங்-சிஹ் என்னும் பெண் துறவி, 'உண்மை என்பது புத்தரின் பிரதேசமான அக்ஸோப்யாவைக் காணக்கிடைத்த அருமையான சன நேரம் போன்றது; அதை ஒருமுறை பார்க்கலாம், இரண்டாவது முறை பார்க்க முடியாது, இப்படித்தான் நான் அதைப் புரிந்துகொள்கிறேன்' என்றார்.

குரு சொன்னார்:

'நீங்கள் என்னுடைய சதையை அடைந்துவிட்டீர்.'

டாவோ-யு சொன்னார்: 'நான்கு பெரும் சக்திகளும் உண்மையில் சூன்யமாக உள்ளன; ஐந்து ஸ்கந்தங்களுமில்லை. தர்மத்தைப் புரிந்து கொள்ள முடியாது என்று நான் நம்புகிறேன்.'

குரு சொன்னார்:

'நீங்கள் என்னுடைய எலும்புகளை அடைந்துவிட்டீர்.'

ஹுயிகோ தலைகுனிந்து வணங்கிவிட்டு அமைதியாக நின்றார்.

குரு சொன்னார்: 'நீங்கள் என்னுடைய எலும்பு மஜ்ஜையை அடைந்துவிட்டீர்.'

## இயல் பத்து

## சந்தையில் நுழைதல்




வெறும் கால்களோடு மார்பில் துணியின்றி,
நான் உலக மக்களோடு கலக்கிறேன்.
என் ஆடைகள் கந்தலாகத் தூசு படிந்து இருக்கின்றன;
நான் எப்போதும் பேரின்பத்தோடு இருக்கிறேன்,
என் வாழ்வை நீடித்துக்கொள்ள நான் எந்த
மந்திர ஜாலத்தையும் பயன்படுத்தவில்லை;
இப்போது, என் முன்பு காய்ந்த மரங்களும்
உயிர் பெறுகின்றன.

‘கடைசிப் படத்தில், ஒரு முதியவர்
மேல் சட்டையின்றி, வெறும் காலோடு,
ஓர் இளைஞனுடன் பேசிக்கொண்டிருக்கிறார்.
அவன் சந்தையில் விற்பதற்காக
மீனையும் மதுவையும் கொண்டு வந்திருந்தான்.
உலகத்துக்கு, சந்தைக்குத் திரும்பும் சுயநலமற்ற பரிவு அது,
இனி இருமை ஏதுமில்லை
(இரட்டையும் பன்மையும் இருமையல்ல)
புனிதமானதும் மதச்சார்பற்றதும், புனிதமானதும்
தெய்வ நிந்தையானதும், சந்தையும் கோயிலும்,
ஞானம் அடைந்தவர்
ஞானம் அடையாதவர் என இனி ஏதுமில்லை.

சம்சார வாழ்க்கையே முக்தி,
முக்தியே சம்சார வாழ்க்கை.’

# 153

## எங்கு செல்கிறாய்?

குரு ஃபுகேட்சூவால் குரு கோகேயிடம் கேட்கப்பட்டது:

'பௌத்தம் சீனாவில் (கி.பி.845) அழிக்கப்பட்டபோது, நம்மைக் காக்கும் கடவுள் எங்கே போயிருந்தார்?'

கோகேயி, 'எப்போதும் அவர் சந்தையில்தான் இருந்தார். ஆனால் ஒருவர்கூட அவரைப் பார்க்கவில்லை' என்றார்.

ஃபுகேட்சூ, 'நீங்கள் புரிந்துகொண்டிருக்கிறீர்கள்' என்றார்.

## 154

## ஞானமடைதல் என்றால் என்ன?

ஒரு மாணவர் தன் ஆசிரியரிடம், 'குருவே, ஞானமடைதல் என்றால் என்ன?' என்று கேட்டார். குரு பதிலளித்தார்:

'பசிக்கும்போது சாப்பிடு.
களைப்பாக இருக்கும் போது தூங்கு.'

## 155

# தேநீர் ஆசானும் கொலைபாதகனும்

டொகுகாவா காலத்துக்கு முன்பு ஜப்பானில் வாழ்ந்த போர் வீரர் டைகோ. சா-நோ-யு எனச் சொல்லப்படும் தேநீர் நெறிமுறையை, அமைதியையும் திருப்தியையும் அழகுணர்வுடன் வெளிப்படுத்தும் வாழ்வுநெறியைக் கற்றுத்தரும் சென் நோ ரிக்யு என்ற ஆசானிடம் டைகோ படித்தார்.

டைகோவின் பணியாளரான வீரன் காட்டோ, தன்னுடைய மேலதிகாரியின் ஆர்வத்தை, ராஜாங்க அலுவல்களைப் புறக் கணிப்பதாக அர்த்தம் கற்பித்துக்கொண்டு, சென் நோ ரிக்யூவைக் கொல்ல வேண்டுமெனத் தீர்மானித்தான். அவரை மரியாதை நிமித்தம் சந்திக்க விரும்புவதாகப் பாசாங்கு செய்தான். தேநீர் அருந்துவதற்கான அழைப்பையும் பெற்றான்.

அந்த ஆசான், தம் கலையில் விற்பன்னர். ஒரே பார்வையில் வீரனின் நோக்கத்தை அறிந்துகொண்டார். ஆகவே காட்டோ வந்ததும், சந்திப்பு நிகழ்ச்சி நடக்கக்கூடிய கூடத்துக்குப் போவதற்கு முன்னால், அவனுடைய வாளை வெளியே வைத்துவிட்டு வரச்சொன்னார். ஏனென்றால், சா-நோ-யு சமாதானத்தையே பிரதிநிதிப்படுத்துகிறது என விளக்கம் கொடுத்தார்.

காட்டோ அதைக் கேட்கவே இல்லை. 'நான் ஒரு போர்வீரன்' என்றவன், 'நான் எப்போதும் என் வாளோடுதான் இருந்திருக் கிறேன். சா-நோ-யுவாக இருந்தாலும், சா-நோ-யுவாக இல்லா விட்டாலும் நான் என் வாளை வைத்திருப்பேன்' என்றான்.

'ரொம்ப நல்லது. உங்கள் வாளை உள்ளே கொண்டுவந்து, கொஞ்சம் தேநீர் அருந்துங்கள்' என்று சம்மதித்தார் சென் நோ ரிக்யு.

அடுப்புக் கரியின் தணலில் கொதித்துக்கொண்டிருந்தது தேநீர் கெண்டி. திடீரென சென் நோ ரிக்யு அந்தக் கெண்டியைக் கவிழ்த்தார். சீறும் சப்தத்தோடு நீராவி வெளியே வந்து அறை முழுவதும் புகையையும் சாம்பலையும் நிறைத்தது. வீரன் திடுக்கிட்டு வெளியே ஓடிவிட்டான்.

தேநீர் ஆசான் வருத்தம் தெரிவித்தார். 'இது என் தவறு. உள்ளே வந்து கொஞ்சம் தேநீர் அருந்துங்கள். உங்களுடைய வாளைச் சாம்பல் மூடிவிட்டது, அதைச் சுத்தப்படுத்தி உங்களுக்குத் தருகிறேன்' என்றார்.

இக்கட்டான இந்த நிலையில் தேநீர் ஆசானை வெட்டிக் கொல்ல முடியாது என அந்த வீரன் உணர்ந்தான். ஆகவே அவன் தன் எண்ணத்தைக் கைவிட்டான்.

## 156

# உன்னிடமிருந்து மறைப்பதற்கு என்னிடம் ஒன்றுமில்லை

ஒருநாள் குரு மைடோவிடம் கவிஞர் சங்கோக்கு உரையாடிக் கொண்டிருந்தார். அப்போது மைடோ, 'அந்தப் புத்தகத்தில் (கன்ஃபூசியசின் இலக்கியத் துணுக்குகள்) உனக்குத் தெரிந்த சில வாக்கியங்களில் கன்ஃபூசியஸ், 'நண்பர்களே, உங்களிடமிருந்து நான் எதையோ மறைப்பதாக நினைக்கிறீர்களா? உங்களிடமிருந்து மறைக்க என்னிடம் எதுவுமில்லை' என்று சொல்கிறார். 'ஜென் விவகாரங்களிலும் சரியாக இப்படித்தான்' என்றவர்,

'உனக்கு அது தெரியுமா?' என்றார்.

சங்கோக்கு, 'எனக்குத் தெரியாது' என்றார்.

பின்னர் மைடோவும் சங்கோக்குவும் மலையில் நடந்து கொண்டிருந்தார்கள். அப்போது மைடோ, 'பூக்களின் வாசனையை முகர்கிறாயா?' என்றார். 'ஆமாம்' என்றார் சங்கோக்கு. மைடோ, 'உன்னிடமிருந்து மறைக்க எனக்கு எதுவும் இல்லை' என்றார். அந்தக் கணத்தில் சங்கோக்கு ஞானம் அடைந்தார். இரண்டு மாதங்களுக்குப் பிறகு, சங்கோக்கு மீண்டும் மைடோவைச் சந்தித்தார். அப்போது மைடோ சங்கோக்குவிடம், 'நீயும் நானும் இறந்து எரிக்கப்பட்டு இரண்டு சாம்பல் குவியல்களாக ஆன பிறகு, எங்கே எப்போது சந்திப்போம்' என்று கேட்டார். இதைக் கேட்டு சங்கோக்குவின் மனம் திகைத்து அவரால் ஒன்றுமே செய்ய முடியவில்லை.

பின்னர் ஒரு குறிப்பிட்ட இடத்தில், சங்கோக்கு நண்பகல் தூக்கத்தில் இருந்தார். கண்களைத் திறந்ததும் பெரிதும் ஞானம் அடைந்தார். மைடோ செய்த வேலையை உணர்ந்தார். அதற்குப் பிறகு அவருடைய மனம் முழுதும் விடுதலையடைந்தது.

157

## ஒரு கோப்பைத் தேநீர் அருந்து

ஜோஷு ஒரு புதிய துறவியிடம், 'நீ இதற்கு முன்னால் இங்கு வந்திருக்கிறாயா?' என்று கேட்டார்.

துறவி, 'ஆமாம், ஐயா, வந்திருக்கிறேன்' என்றார்.

பிறகு குரு சொன்னார்: 'ஒரு கோப்பைத் தேநீர் அருந்து.'

அதன்பிறகு, வேறொரு துறவி வந்தார். அவரிடமும், 'நீ இதற்கு முன்னால் இங்கு வந்திருக்கிறாயா?' என்று கேட்டார்.

இந்த முறை பதில் நேரெதிராக இருந்தது, 'ஐயா, நான் இங்கு வந்ததேயில்லை.'

முதிய குரு எவ்வாறாயினும், முன்பைப் போலவே, 'ஒரு கோப்பைத் தேநீர் அருந்து' என்றார்.

அதற்குப் பிறகு இன்ஜு (மடத்தின் நிர்வாகியான துறவி) குருவிடம், 'அதெப்படிப் பதில் எதுவாக இருந்தாலும், தேநீர் தருகிறீர்கள்?' என்று கேட்டார்.

முதிய குரு, 'இன்ஜு!' என்றழைத்தார்.

அவரும், 'குருவே, சொல்லுங்கள்' என்றார்.

இதற்கு ஜோஷு, 'ஒரு கோப்பைத் தேநீர் அருந்து' என்றார்.

# 158

## போதனையில் கஞ்சத்தனம்

குசுடா என்ற இளம் மருத்துவர் டோக்கியோவில் இருந்தார். ஜென்னைக் கற்றுக்கொண்டிருக்கும் தன் கல்லூரி நண்பரைச் சந்தித்த அந்த இளம் மருத்துவர் அவரிடம் ஜென் என்பது என்ன என்று கேட்டார்.

'அது என்னவென்று என்னால் உனக்குச் சொல்ல முடியாது' என்று பதிலளித்த நண்பர், 'ஆனால் ஒன்று நிச்சயம். ஜென்னை நீ புரிந்துகொண்டால் சாவுக்குப் பயப்படமாட்டாய்' என்றார்.

'நல்லது' என்ற குசுடா, 'ஆசிரியர் எங்கே கிடைப்பார், நான் முயன்று பார்க்கிறேன்' என்றார்.

'நான்-இன் குருவிடம் போ' என்று நண்பர் சொன்னார்.

அதன்படி நான்-இன் குருவிடம் போனார் குசுடா. ஒன்பதரை அங்குல நீளமுள்ள பிச்சுவா கத்தியை எடுத்துக் கொண்டு, அந்த ஆசிரியர் சாவை எதிர்கொள்ளப் பயப்படுவாரா இல்லையா என்று பார்க்கப்போனார்.

குசுடாவைப் பார்த்தபோது நான்-இன், 'வணக்கம், நண்பரே. எப்படி இருக்கிறீர்கள்? ரொம்ப காலமாக இருவரும் பார்க்க வில்லையே!' என்று வியப்புடன் சொன்னார்.

அதைக் கேட்டுக் குழப்பமடைந்த குசுடா, 'இதற்கு முன்பு நாம் பார்த்ததில்லையே' என்றார்.

'உண்மைதான்' என்று சொன்ன நான்-இன், 'என்னிடம் கருத்து கேட்பதற்காக இங்கு வரும் இன்னொரு மருத்துவர் நீங்கள்தானோ என்று தப்பாக நினைத்துவிட்டேன்' என்றார்.

இந்த மாதிரியான தொடக்கத்தால், குருவை சோதிப்பதற்கான வாய்ப்பை இழந்துவிட்டார் குசுடா. ஆகவே, ஜென் குறித்த போதனை தமக்குக் கிடைக்குமா என்று தயக்கத்துடன் கேட்டார்.

நான்-இன், 'ஜென் என்பது கடிமான காரியம் அல்ல. நீங்கள் ஒரு மருத்துவராக இருப்பதால், கருணையோடு உங்கள் நோயாளிகளுக்கு சிகிச்சை செய்யுங்கள். அதுதான் ஜென்' என்றார்.

குசுடா மூன்றுமுறை நான்-இன்னைச் சந்தித்தார். ஒவ்வொரு தடவையும் 'ஒரு மருத்துவர் இங்கு சுற்றிவருவது காலத்தை விரயமாக்கும். வீட்டுக்குச் சென்று உங்கள் நோயாளிகளை அக்கறையாகப் பாருங்கள்' என்று குரு அதே பதிலையே சொன்னார்.

இதுபோன்ற போதனை, மரணத்தின் பயத்தை எப்படி நீக்க முடியும் என அப்போதுகூட குசுடாவுக்குத் தெளிவு கிடைக்க வில்லை. ஆகவே நான்காவது சந்திப்பில் அவர், 'என் நண்பர் என்னிடம் எப்போது ஒருவர் ஜென்னைக் கற்றுக்கொள் கிறாரோ அப்போது அவருக்கு மரண பயம் மறைந்துவிடும் என்று சொன்னார். ஒவ்வொரு முறையும் நான் இங்கு வரும் போது நீங்கள், உங்கள் நோயாளிகளை அக்கறையோடு பாருங்கள் என்று மட்டுமே சொன்னீர்கள். அது எனக்கு நன்றாகத் தெரியும். அதுதான் நீங்கள் சொல்லும் ஜென் என்றால், இதற்கு மேல் உங்களைப் பார்க்க நான் இங்கு வரப்போவது இல்லை' என்று குறைசொல்லும் தொனியில் கூறினார்.

நான்-இன் புன்னகையோடு மருத்துவரின் தோளில் தட்டிக் கொடுத்து, 'உங்களிடம் நான் மிகவும் கறாராக இருந்திருக் கிறேன். உங்களுக்கு ஒரு கோவானை* சொல்கிறேன்' என்று சொல்லி, மனதை ஞானம்கொள்ளச் செய்யும் பிரச்சினையை அலசும் ஜோஷுவின் 'மு' குறித்த வாசலற்ற வாசல் என்ற புத்தகத்தின் முதல் பிரச்சினையை குசுடாவிடம் சொன்னார்.

* ஜென் பயிற்சியில் பயன்படுத்தப்படும் ஒரு கதை, உரையாடல், கேள்வி போன்ற வற்றை கோவான் என்று அழைக்கப்படுகிறது.

இரண்டு ஆண்டுகள் 'மு' (வெறுமை, சூன்யன், ஒன்றுமற்றது) வினுடைய பிரச்சினையை குசுடா ஆழ்ந்து சிந்தித்தார். இறுதியில், தம் மனம் நிச்சயத்தன்மையை அடைந்திருப்பதாக அவர் நினைத்தார். ஆனால், அவருடைய குரு நான்-இன் விளக்கினார்: 'நீங்கள் இன்னும் அந்த நிலையை அடையவில்லை.'

குசுடா மேலும் ஒன்றரை ஆண்டு தம் கவனத்தைக் குவித்தார். அவருடைய மனம் சாந்தமடைந்தது. பிரச்சினைகள் தீர்ந்தன. வெறுமை உண்மையானது. இதுகுறித்து தெரியாமலே, அவர் தம்முடைய நோயாளிகளை நன்றாகக் கவனித்திருக்கிறார். மேலும் பிறப்பு, இறப்பு போன்ற கவலையி லிருந்தும் அவர் விடுதலை பெற்றார்.

அதன்பிறகு, நான்-இன்னைச் சந்திக்கப் போனபோது, வயதான அந்த குரு வெறுமனே சிரித்தார்.

159

## நிலாவைத் திருட முடியாது

ஒரு மலை அடிவாரத்தில் உள்ள ஒரு சிறிய குடிலில் ஜென் குரு ரியோகன் மிக எளிமையாக வாழ்ந்துகொண்டிருந்தார். ஒருநாள் திருடன் ஒருவன் அவர் குடிலுக்குள் புகுந்தான். அங்கு திருடுவதற்கு எந்தப் பொருளும் இல்லை என்பதைக் கண்டான்.

அந்தச் சமயத்தில் குடிலுக்குத் திரும்பிய ரியோகன் திருடனைப் பிடித்துவிட்டார். 'நீ அதிக தூரத்திலிருந்து கிளம்பி என்னைப் பார்க்க வந்திருக்கலாம். நீ வெறும் கையோடு திரும்பக்கூடாது. தயவுசெய்து என் ஆடைகளைப் பரிசாக எடுத்துக்கொள்' என்று அவனிடம் சொன்னார்.

திகைத்த திருடன், ரியோகன் கொடுத்த ஆடைகளை எடுத்துக் கொண்டு சற்றும் சப்தமில்லாமல் வெட்கத்துடன் அந்த இடத்தை விட்டுப் போய்விட்டான்.

நிர்வாணமாக அமர்ந்து, நிலவைக் கவனித்துக்கொண்டிருந்த ரியோகன் சிந்தையில், 'பாவம் அவன், இந்த அழகான நிலவை அவனுக்குக் கொடுக்க என்னால் முடிந்தால் எப்படியிருக்கும்' என்ற எண்ணம் ஓடியது.

## 160

# கண்ணுக்குத் தெரியாத சூத்திரங்கள்

ஜப்பானில் உள்ள டெட்சுகென் ஜென்னின் பக்தர். அந்தக் காலத்தில் சூத்திரங்கள் அடங்கிய புத்தகம் சீன மொழியில்தான் கிடைத்தது. ஆகவே அவர் ஜப்பானில் அவற்றைப் புத்தகமாக வெளியிட முடிவெடுத்தார். மர அச்சுக்களில் அந்தப் புத்தகங் களை ஏழாயிரம் பிரதிகள் அச்சடிக்க வேண்டும். இது பிரமாண்ட மான காரியம்.

இந்த நோக்கத்துக்காக டெட்சுகென் பயணம் செய்து நன்கொடை வாங்கத் தொடங்கினார். சில ஆதரவாளர்கள் நூறு தங்கக் காசுகளை அவருக்குக் கொடுப்பார்கள். ஆனால் பெரும்பாலும் அவருக்கு சிறிய நாணயங்கள் மட்டுமே கிடைத்தன. அவர் ஒவ்வொரு நன்கொடையாளிக்கும் சமமாக நன்றி சொன்னார். பத்து ஆண்டுகளுக்குப் பிறகு தேவையான பணம் சேர்ந்ததும் டெட்சுகென் காரியத்தை ஆரம்பித்தார்.

இந்தச் சமயத்தில் எதிர்பாராமல் உஜி நதியில் வெள்ளப் பெருக்கு ஏற்பட்டது. அதைத் தொடர்ந்து பஞ்சம் உண்டானது. சூத்திரப் புத்தகங்களை அச்சடிக்க தாம் சேகரித்த நிதியை, பஞ்சத்தில் தவித்த மக்களுக்கு டெட்சுகென் தந்து உதவினார். அதன்பிறகு மீண்டும் அவர் தமது பணம் வசூலிக்கும் பணியை ஆரம்பித்தார்.

பல ஆண்டுகளுக்குப் பிறகு ஒரு கொள்ளைநோய் ஏற்பட்டு அது நாடு முழுவதும் பரவியது. தம் மக்களுக்கு உதவ டெட்சுகென் தாம் சேகரித்த பணத்தைக் கொடுத்துவிட்டார்.

மூன்றாவது தடவையாக தன் புத்தக வேலையை ஆரம் பித்தார். இருபது ஆண்டுகளுக்குப் பிறகு அவருடைய ஆசை

நிறைவேறியது. சூத்திரங்களின் முதல் பதிப்புக்காக தயாரிக்கப்பட்ட அந்த மர அச்சுகளைக் கியோட்டோவில் உள்ள ஒபாகு மடாலயத்தில் இன்றும் பார்க்கலாம்.

டெட்சுகென் சூத்திரங்களின் மூன்று தொகுப்புகளைத் தயாரித்தார். அவற்றில் கண்ணுக்குத் தெரியாத முதல் இரண்டு தொகுப்புகள் மூன்றாவது தொகுப்பைவிட விஞ்சுகின்றன என ஜப்பானியர்கள் தங்கள் குழந்தைகளுக்குச் சொல்லிக் கொடுக்கிறார்கள்.

# 161

## கவனமும் கருணையும்

தன் வாழ்வில் ஒரு கசப்பான அனுபவத்தைச் சந்தித்த ஓர் இளைஞன் தொலைதூர மடம் ஒன்றுக்குப் போய் மடத்துத் தலைவரிடம்: 'நான் வாழ்வெனும் மாயையில் இருந்து மீண்டிருக்கிறேன், இந்தத் துன்பங்களிலிருந்து விடுதலையடைய ஞானம் பெற விரும்புகிறேன். ஆனால், எனக்கு எதுவாக இருந்தாலும் நீண்ட காலம் அதில் ஒட்டிக் கொண்டிருக்க இயலாது. என்னால் படிப்பிலும், துறவிலும், தியானத்திலும் பல ஆண்டுகளைச் செலவிட முடியாது; அது வல்லமை மிகுந்தது என்று எனக்குத் தெரிந்தாலும், நான் சறுக்கிவிழுந்து மீண்டும் உலகின்பால் இழுக்கப்படுவேன். என்னைப் போன்றவர்களுக் கென்று ஏதாவது சுருக்கமான வழி இருக்கிறதா?'

'இருக்கிறது' என்று சொன்ன மடத்துத் தலைவர், 'உனக்கு உண்மையில் தீர்மானம் இருக்கிறதா என்று சொல். சரி, நீ என்ன படித்தாய், உன் வாழ்க்கையில் நீ மிகவும் கவனம் செலுத்தியது எதில்?' என்றார். 'உண்மையில் எதிலும் கவனம் செலுத்திய தில்லை. நாங்கள் செல்வந்தர்களாக இருந்ததால், நான் பணி செய்ய வேண்டிய அவசியம் ஏற்படவில்லை. சதுரங்க ஆட்டத்தில் தான் எனக்கு உண்மையான ஆர்வமிருக்கிறது என்று நினைக் கிறேன். பெரும்பாலான நேரத்தைச் சதுரங்கத்தில்தான் செலவழித்தேன்' என்றான்.

ஒருகணம் யோசித்த மடத்துத் தலைவர், பின்னர் தம் உதவியாளரை அழைத்து, ஒரு குறிப்பிட்டத் துறவியைச் சதுரங்கப் பலகையை எடுத்துக்கொண்டு ஆள்களைக் கூட்டிக் கொண்டு வரச் சொன்னார். அந்தத் துறவி சதுரங்கப் பலகை யோடு வந்தார். மடத்துத் தலைவர் அந்தத் துறவியையும்

இளைஞரையும் அமர வைத்தார். அவர் ஒரு வாளைக் கொண்டு வரச்செய்து, அதை இருவரிடம் காட்டிவிட்டு, 'துறவியே! உன்னுடைய மடத்துத் தலைவராக இருக்கும் எனக்குப் பணிய வேண்டிய கடமை உனக்கு இருக்கிறது. இந்த இளைஞனோடு நீ சதுரங்கமாட வேண்டும். நீ தோற்றால் இந்த வாளால் உன் தலையை வெட்டிவிடுவேன். ஆனால் நீ சொர்க்கத்தில் பிறப்பாய் என்று உறுதியளிக்கிறேன். நீ வென்றால், நான் இந்த இளைஞனின் தலையை வெட்டி விடுவேன்; இவன் சதுரங்கம் என்ற ஒரே விஷயத்தில்தான் அதிகம் உழைத்திருக்கிறான். அவன் தோற்றால் அவனுடைய தலையை வெட்டுவது தகும்' என்றார். அவர்கள் மடத்துத் தலைவரின் முகத்தைப் பார்த்தார்கள். அவருடைய முகபாவத்திலிருந்து அவர் சொல்வதைச் செய்துவிடுவார்; தோற்பவரின் தலையை வெட்டிவிடுவார் என்று புரிந்து கொண்டார்கள். அவர்கள் விளையாட ஆரம்பித்தார்கள். ஆரம்பக் காய் நகர்த்தல்களில் இளைஞன் தன் உயிருக்காக ஆடியதால், வேர்வை வழிந்து பாதம்வரை வருவதை உணர்ந்தான். சதுரங்கப் பலகையே முழு உலகமானது; முழுக் கவனமும் சதுரங்கத்தில் இருந்தது. ஆரம்பத்தில் இளைஞன் மோசமாக ஆடினான். ஆனால் துறவி மோசமானதொரு காய் நகர்த்தலைச் செய்தபோது வாய்ப்பைப் பயன்படுத்தி கடுமையாகத் தாக்க ஆரம்பித்தான்.

எதிராளி நிலைகுலைய ஆரம்பித்ததும், ஓரக் கண்ணால் அந்தத் துறவியைப் பார்த்தான். விவேகமும் நேர்மையும் மிகுந்த முகம், நீண்ட காலத் துறவறமும், முயற்சியும் தெரியும் முகம். இளைஞன் தன் பயனற்ற வாழ்வை நினைத்துப் பார்த்தான். அவனையறியாமல் கருணை அலையொன்று வீசியது. அவன் வேண்டுமென்றே தவறாகக் காய் நகர்த்தினான். மீண்டுமொரு முறை தவறாகக் காய் நகர்த்தி தன் நிலையை மோசமாக்கிக் கொண்டு தன்னைப் பாதுகாப்பற்றவனாக ஆக்கிக்கொண்டான்.

மடத் துறவி சட்டென்று முன்னே குனிந்து சதுரங்கப் பலகையைத் தூக்கிச் சரித்தார். காய்களைக் கலைத்தார். இரண்டு போட்டியாளர்களும் அதிர்ச்சியோடு உட்கார்ந் திருந்தார்கள். 'யாரும் வெற்றி பெறவில்லை, தோல்வி அடையவுமில்லை. தலையேதும் கீழே விழப் போவதில்லை' என்று மெதுவாகச்

சொன்ன மடத்துத் தலைவர், மேலும், 'இரண்டு விஷயங்கள் தேவை' என்றவர், இளைஞனைப் பார்த்துச் சொன்னார், 'ஒட்டுமொத்தமாக கவனம், கருணை ஆகிய இரண்டையும் இன்று நீ கற்றுக்கொண்டுவிட்டாய். நீ ஒட்டுமொத்த கவனத்தோடு விளையாடினாய், அந்த கவனத்தில் உன்னால் கருணையை உணரவும், அதற்காக உன் வாழ்வைத் தியாகம் செய்யவும் துணிந்தாய். இப்போது, இதே மனநிலையில் சில மாதங்கள் எங்களோடு இருந்து பயிற்சி எடுத்துக்கொள், நீ ஞானம் அடைவது நிச்சயம்.'

அவன் அவ்வாறே செய்து விழிப்புணர்வடைந்தான்.

# 162

## புனிதர்

மலையின் மீது ஒரு சிறிய வீட்டில் வாழ்ந்து வரும் ஞானியான ஒரு புனிதரைப் பற்றிய செய்தி கிராமப்புறம் எங்கும் பரவியது. கிராமத்திலிருந்த ஒரு மனிதர் அந்த மலையுச்சிக்குச் செல்லும் நீண்ட, கடினமான பயணத்தை மேற்கொண்டு அவரைச் சந்திக்கத் தீர்மானித்தார். அந்த வீட்டை அடைந்தபோது கதவருகில் வந்து தன்னை வரவேற்ற முதிய வேலைக்காரர் ஒருவரைச் சந்தித்தார். அந்த வேலையாளிடம், 'ஞானியான புனிதரைச் சந்திக்க விரும்புகிறேன்' என்றார். வேலையாள் சிரித்தபடி வீட்டிற்குள் அழைத்துச் சென்றார். வீட்டுக்குள் சென்ற போது அந்தக் கிராமத்து மனிதர் ஞானியான புனிதரைச் சந்திக்கும் எதிர்பார்ப்பில் ஆழ்ந்திருந்தார். அவர் புரிந்துகொள்வதற்கு முன்னால், பின்வாசல் வழியாக வெளியே அழைத்துச் செல்லப்பட்டார். அவர் நின்று வேலையாளைத் திரும்பிப் பார்த்து,

'ஆனால், எனக்குப் புனிதரைப் பார்க்க வேண்டும்' என்றார்.

அந்த முதிய வேலையாள், 'நீங்கள் ஏற்கெனவே பார்த்து விட்டீர்கள். உங்கள் வாழ்வில் நீங்கள் காணும் சாதாரணமான முக்கியமற்றவராகத் தோற்றம் தரும் மனிதர்களைக்கூட ஞானி யான புனிதராகப் பாருங்கள்.

இதைச் செய்தால், எந்தப் பிரச்சினையோடு நீங்கள் இங்கு வந்திருந்தாலும் அது தீர்ந்துபோகும்' என்றார்.

# 163

## குளிரும் இல்லை
## வெப்பமும் இல்லை

ஒரு துறவி டோஸானிடம், 'குளிரிலும், வெய்யிலிலும் இருந்து எப்படி நாம் தப்பிப்பது?' எனக் கேட்டார். 'குளிரும் இல்லாத வெய்யிலும் இல்லாத இடத்துக்கு ஏன் போகக்கூடாது?' என்று கேட்டார் டோஸான்.

'அப்படி ஒரு இடம் இருக்கிறதா என்ன?' என்றார் துறவி. 'குளிரும் போது முற்றிலும் குளிராகவே ஆகிவிடு; வெப்பம் இருக்கும் போது முற்றிலும் வெப்பமாகவே ஆகிவிடு' என்றார் டோஸான்.

164

## ஆன்மிக முதிர்ச்சி

சீனாவில் வயதான பெண்மணி ஒருவர் இருபது ஆண்டு களுக்கும் மேல் ஒரு துறவியை ஆதரித்து வந்தார். அந்தக் குருவுக்காக சின்னக் குடிசையைக் கட்டித்தந்து, உணவளித்து அவருடைய தியானத்துக்கு ஆதரவாக இருந்தார். கடைசியில், இவ்வளவு காலமும் அந்தத் துறவி என்ன முன்னேற்றத்தைக் கண்டிருக்கிறார் என்று தெரிந்துகொள்ள ஆசைப்பட்டார் அந்தப் பெண்மணி.

அதைக் கண்டுபிடிக்க, காமவயப்பட்ட ஓர் இளம் பெண்ணைத் தனக்கு உதவியாகக் கொண்டுவந்தாள். 'போ, போய் அவரைத் தழுவிக்கொள்' என்று சொன்ன அந்தப் பெண்மணி, பிறகு திடீரெனத் துறவியிடம், 'அடுத்து என்ன என்று கேள்' என்றாள்.

அந்தத் துறவியை அன்புடன் வருடிய இளம்பெண், 'பதிலாக அடுத்து நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள்' என அவரிடம் கேட்டாள்.

'பனிக்காலத்தில் ஒரு வயதான மரம் பனிப்பாறையில் வளர்கிறது' என்று துறவி, கவித்துவத்தோடு, 'எங்கும் கதகதப்பு இல்லை' என்றார்.

அந்தப் பெண் கிழவியிடம் திரும்பி வந்து நடந்ததைச் சொன்னாள்.

அவள் சொன்னதைக் கேட்ட கிழவி, 'இந்த ஆளுக்கு நான் இருபது வருடங்களுக்கு மேலாக உணவளித்திருக்கிறேனே! உன் தேவையை அந்த ஆள் பொருட்படுத்தவில்லை. உன்

நிலையைக் குறித்துத் தெரிந்துகொள்ளும் முயற்சியும் இல்லை. உன் ஆசைக்கு அந்த ஆள் இணங்காமல் போகட்டும். கொஞ்சம் கருணையோடு உன் நிலையைப் பார்த்திருக்கலாம்' என்றவள்,

அந்தத் துறவியின் குடிசைக்குப் போய் அதை எரித்து, துறவியைத் துரத்திவிட்டாள்.

### இந்தக் கதைக்கான பிற்கால இணைப்பு

மூன்று ஆண்டுகளுக்குப் பிறகு அந்தத் துறவி, கிழவியிடமும் அழகிய பெண்ணிடமும் திரும்ப வந்து தமக்கு இன்னொரு வாய்ப்பளிக்கும்படிக் கேட்டார். கிழவி (அந்த அழகிய பெண்ணின் தாய்) இணங்கினாள். பின்னர், ஓரிரவு, அழகிய பெண் மீண்டும் துறவியைக் கட்டியணைத்தாள், அதே கேள்வியைக் கேட்டாள்,

'நீ என்ன வேண்டுமானாலும் செய்யலாம்? என்ன செய்வாய்?'

துறவி, 'வானத்துக்குத் தெரியும், பூமிக்கும் தெரியும், உனக்குத் தெரியும், எனக்கும் தெரியும், ஆனால் உன் அம்மாவுக்கு மட்டும் தெரியாமல் பார்த்துக்கொள்!' என்றார்.

## 165

## என் உணவை எடுத்துக்கொள்

குரு செகிட்டை, தம் உதவியாளர் கையில் ஒரு பாத்திரத்தோடு தாழ்வாரத்தில் நடந்து வருவதைப் பார்த்து, அவரை 'உதவி யாளரே' என்று கூப்பிட்டார்.

உதவியாளர் 'ஐயா' என்றார்.

செகிட்டை, 'எங்கே போகிறீர்கள்?' என்று கேட்டார்.

உதவியாளர், 'நான் என்னுடைய மதிய உணவைச் சாப்பிடப் போய்க்கொண்டிருக்கிறேன்' என்றார். செகிட்டை, 'நீங்கள் மதிய உணவைச் சாப்பிடப் போவது எனக்குத் தெரியாதா?' என்றார். உதவியாளர், 'இதற்கு நான் வேறென்ன பதிலைத் தரமுடியும்?' என்றார்.

செகிட்டை, 'நான் உங்களுடைய மெய்யான இயல்பைப் பற்றிக் கேட்கிறேன்' என்றார். 'நீங்கள் என்னுடைய மெய்யான இயல்பைப் பற்றிக் கேட்கிறீர்கள் என்றால், நான் மெய்யாகவே என்னுடைய மதிய உணவைச் சாப்பிடத்தான் போகிறேன்' என்றார்.

செகிட்டை, 'நீங்கள் என்னுடைய உதவியாளராக இருப்பது வியப்பே இல்லை' என்றார்.

## 166

## பற்றற்ற ரபி

பாவிகளிடம் யாவேயின் சாபம் உங்களைத் தண்டிக்கும் என்று சொல்லிப் பயமுறுத்தியும், பணிவுள்ளவர்களைத் தம் நற்பண்பால் ஆறுதல் கூறியும் களைப்படைந்திருந்தார் ஒரு ரபி.

இந்தப் பற்றற்ற ரபி பற்றி ஒரு ஹாசிடிய யூதப் பிரிவுக் கதை இவ்வாறு விளக்குகிறது:

வெறுத்துப்போன ரபி தம் வழிபாட்டிடத்திலிருந்து வெளியேறி மாறுவேடமிட்டு அலைந்து திரிந்தார். அப்போது தம் கொட்டிலில் சாகக் கிடக்கும் ஒரு கிழவியை அவர் சந்தித்தார். கிழவி, 'நான் ஏன் பிறந்தேன், எனக்கு நினைவு தெரிந்ததிலிருந்து துரதிர்ஷ்டமே வாய்த்திருக்கிறது' என்றாள்.

'நீங்கள் அவற்றைத் தாங்கிக்கொள்ள வேண்டும் என்பதற்காக' என்று பதில் சொன்னார் மாறுவேடத்திலிருந்த ரபி.

இந்தப் பதில் கிழவியின் மனதை ஆறுதல்படுத்தியது. போர்வையைக் கிழவியின் முகத்தின் மீது போர்த்திய போது, ரபி இனி தான் ஊமையாக இருக்கப் போவதாக முடிவெடுத்தார்.

அலைந்து திரிதலின் மூன்றாம் நாளன்று தம் முதுகில் தம்முடைய இறந்த குழந்தையுடன் இருந்த ஓர் இளம் பிச்சைக்காரப் பெண்ணைச் சந்தித்தார்.

ரபி சவக்குழி வெட்ட உதவினார். அந்தச் சிறிய சவத்தை துணியில் சுற்றி அவர்கள் குழியில் இட்டு அதை மூடிவிட்டு, இருவரும் சாப்பிட்டனர்.

பிறகு அந்தப் பிச்சைக்காரப் பெண்ணின் ஒவ்வொரு வார்த்தைக்கும் உடலசைவுகளால் பதிலளித்தார். 'பாவம் இந்தப் பச்சைப்பிள்ளை எதையும் அனுபவிக்கவில்லை,

இன்பத்தையும் அனுபவிக்கவில்லை வலியையும் உணர வில்லை. இது பிறந்திருக்கத்தான் வேண்டுமா?' முதலில் மாறு வேடத்தில் இருந்த ரபி அசையவில்லை.

ஆனால் அந்தப் பெண்ணுடைய வற்புறுத்தலால் தலை அசைத்தார்.

அதிலிருந்து ஊமையாக இருப்பதோடு செவிடாகவும் இருக்க முடிவெடுத்தார்.

அவர் வெளி உலகத்திலிருந்து ஒரு குகையில் போய் ஒளிந்து கொண்டார். அங்கு அவர் காலில் அடிபட்ட ஒரு மரநாயைக் கண்டார். மூலிகைகளால் ரபி அதற்குக் கட்டுப் போட்டு விட்டார்; அதிலிருந்து அந்த மரநாய் அவருக்குச் சுவையான விதைகளைக் கொண்டு வந்தது.

ரபி பிரார்த்தனை செய்தார். அந்தச் சின்னஞ்சிறிய விலங்கு தன் மூக்கை வளைத்து நெளித்தது. இருவரும் ஒருவர் மீது ஒருவர் அன்பு கொண்டார்கள். ஒரு நாள் பிற்பகல் அந்த மரநாய் குகை வாயிலில் வெயில் காய்ந்துகொண்டிருந்தது. அப்போது மிக உயரத்திலிருந்து ஒரு பெரிய கழுகு சர்ரென்று கீழிறங்கித் ரபியின் கண் முன்னால் அந்த மரநாயைத் தூக்கிச் சென்றது. அப்போது, ரபி தம் கண்களையும் மூடிக்கொண்டால் நன்றாக இருக்கும் என்று நினைத்தார்.

ஆனால் குருடாகவும் செவிட்டு ஊமையாகவும் இருந்தால் மரணத்துக்காகக் காத்திருப்பதைத் தவிர வேறெதுவும் செய்ய முடியாது என்பதால் தம் கச்சையை இறுக்கிக்கொண்டு தம் மக்களிடம் திரும்பினார்.

மீண்டும் யாவே விதிப்படி நல்லது எது, தீயது எது எனப் போதித்தார். தம் வெட்கத்துடன் உருகி வலிமையடைந்தார்.

* ரபி - யூதத் துறவி.

167

## குற்றத்தைச் சாப்பிடு!

ஒருநாள் சந்தர்ப்பச் சூழ்நிலையால், ஃபுகை என்னும் சோடோ ஜென் குருவுக்கும் அவர் சீடர்களுக்கும் இரவு உணவு தயாரிப்பது தாமதமாகிவிட்டது. சமையல்காரர் கூர்மையான கத்தியோடு அவசர அவசரமாகத் தோட்டத்துக்குச் சென்று பசுமையாக இருந்த காய்கறிகளின் மேற்பகுதியை மட்டும் வெட்டி அவற்றைச் சேர்த்து துண்டுதுண்டாக நறுக்கி, சூப் தயாரித்தார். அவசர அவசரமாகச் செய்ததால் காய்கறித் துண்டுகளில் ஒரு பாம்புத் துண்டும் கலந்துவிட்டது என்பது அவருக்கு தெரியவில்லை.

ஃபுகையின் சீடர்கள் சூப்பைக் குடித்துவிட்டு ஒருபோதும் இதுமாதிரி சுவையான சூப் சாப்பிட்டதில்லை என நினைத்தனர். ஆனால், கிண்ணத்தில் பாம்புத் தலையைக் கண்டுகொண்ட குரு, சமையல்காரரை வரவழைத்தார். கையில் பாம்புத் தலையைப் பிடித்துக்கொண்டு, உரிமையுடன், 'என்ன இது?' என்று கேட்டார்.

'அடடே, நன்றி, குரு' என்று பதிலளித்த சமையல்காரர் அந்தத் துண்டை வாங்கிச் சட்டென்று வாயில்போட்டுச் சாப்பிட்டுவிட்டார்.

168

## அன்பு என்றால் என்ன?

'அன்பு என்பது என்ன?' என்று ஒரு மாணவன் சங் ஸான் சோயென்-சாவிடம் கேட்டான்.

'நான் உன்னிடம் கேட்கிறேன்: அன்பு என்பது என்ன?' சோயென்-சா கேட்டார்.

மாணவன் மௌனமாக இருந்தான்.

'இதுதான் அன்பு' என்றார் சோயென்-சா.

அந்த மாணவன் இன்னும் மௌனமாக இருந்தான்.

சோயென்-சா சொன்னார்,

'நீ என்னிடம் கேட்கிறாய்: நான் உன்னிடம் கேட்கிறேன். இதுதான் அன்பு.'

## 169

## நீ சொல்வது அல்ல

ரியுதகசி மடாலயத்தில் நடந்த தியானத்தின் போது, சோயென் நககவா ஒரு மாணவரிடம் கேட்டார்:

'ஏசு சிலுவையில் மரித்துக்கொண்டிருக்கையில் என்ன கூறினார்?'

மாணவர் கூறினார், ' என் இறைவா, நீர் ஏன் என்னைக் கைவிட்டீர்?'

'இல்லை!' கத்தினார் சோயென்.

அவர் திரும்ப மற்றொரு மாணவரிடம் கேட்டார்: 'ஏசு சிலுவையில் மரித்துக்கொண்டிருக்கையில் என்ன கூறினார்?'

'நல்லது, நாங்கள் அது சரியான பதிலென்றுதான் நினைக்கிறோம்' என அவர்கள் பதிலளித்தார்கள்.

'அவர் இதைத்தானே கூறினார், என் இறைவா, நீர் ஏன் என்னைக் கைவிட்டீர்!' என்றார் அம்மாணவர்களுள் ஒருவர்.

'இல்லை!' மீண்டும் சோயென் திருத்தினார்.

'சரி, அவர் என்ன கூறினார்?'

சோயென் தன் இரு கைகளையும் ஆகாயத்தை நோக்கி நீட்டியபடி மரண வேதனையோடு கதறினார்:

'என் இறைவா, நீர் ஏன் என்னைக் கைவிட்டீர்?'

## கருணையின் வழி

(சுத்த நிபதத்திலிருந்து)

எல்லா உயிரினங்களும் வளமான
வாழ்வையும் அமைதியையும் பெற்றிருக்கட்டும்;
எல்லோரும் எப்போதும் அமைதியோடு
ஆசீர்வதிக்கப்பட்டிருக்கட்டும்;
எல்லா உயிரினங்களும் பலவீனமான அல்லது வலிமையான,
கண்ணுக்குத் தெரிந்த அல்லது தெரியாத
எல்லா உயிரினங்களும் தொலைவில் வசிப்பதோ
அருகில் இருப்பதோ
பிறந்துவிட்ட அல்லது பிறப்பை எதிர்நோக்குகிற
அனைத்தும் அமைதியால் ஆசீர்வதிக்கப்படட்டும்;
எங்கும் எவரும் சக மனிதர்களை
ஏமாற்றாமலோ, இழிசொல் கூறாமலோ இருக்கட்டும்;
எவரும் கடுஞ்சினத்தாலோ, வெறுப்பினாலோ
ஆபத்து விளைவிக்க விரும்பாதிருக்கட்டும்;
தன் சொந்த உயிரால், ஒரு தாய் தனக்குச் சொந்தமான,
ஒரே குழந்தையை ஆபத்துகளிலிருந்து காப்பது போல்
வாழும் அனைத்து உயிர்களையும்
அரவணைக்கும் எண்ணங்கள்,
இந்தப் பிரபஞ்சம் அனைத்தையும் அரவணைக்கு நேசம்,
அதன் அனைத்து உயரங்களிலும் ஆழங்களிலும் நீளங்களிலும்
உள்ளிருக்கும் வெறுப்பால் தடைபடாத, விரோதத்தை எழச்
செய்யாத அளவற்ற நேசத்தாலும் நினதாகட்டும்.
ஆதலால், நீ நிற்கையில் அல்லது நடக்கையில் அல்லது
அமர்கையில் அல்லது படுத்திருக்கையில் உனது
சக்தியனைத்தையும்
இதைச் சிந்திப்பதிலேயே செலுத்து.
இதுவே 'ஓர் இறைநிலை' எனக் கருதப்படும்.

170

## யார் உன் விரோதி?

டெர்ரி டாப்ஸன் என்ற அமெரிக்க இளைஞன் அய்கிடோ என்னும் ஜப்பானியத் தற்காப்புக் கலையைக் கற்றுக்கொள்ள ஜப்பானில் தங்கி இருந்தான். சட்டென்று அவன் புதிதாகக் கற்ற திறன்களுக்கும் ஆற்றல்களுக்கும் சவால்விடும் எதிரி ஒருவனை எதிர்ப்பட்டான்:

ஓர் இளவேனில் காலத்தில் தூங்கி வழியும் நண்பகல் வேளையில் ரயில் டோக்கியோவின் புறநகர்ப் பகுதிகளில் மெதுவாகத் தடதடத்துப் போய்க்கொண்டிருந்தது. நாங்கள் இருந்த பெட்டியில் கூட்டம் குறைவாகவே இருந்தது—ஓடத் துடிக்கும் குழந்தைகளோடு சில அம்மாக்கள், பொருள்களை வாங்கக் கடைத் தெருவுக்குப் போகும் சில முதியவர்கள். நான் ஏதோ நினைவில் கவர்ச்சியற்ற வீடுகளையும் புழுதி படிந்த புதர்வேலிகளையும் பார்த்துக் கொண்டிருந்தேன். ஒரு நிறுத்தத்தில் கதவுகள் திறந்தன. பயங்கரமாகக் கத்திக்கொண்டும் புரியாத வசவுகளோடும், தடுமாறிக்கொண்டு உள்ளே நுழைந்த மனிதனால், சட்டென்று பிற்பகல் அமைதி சிதைக்கப்பட்டது. உழைப்பாளியின் உடையோடு உள்ளே நுழைந்த அந்த மனிதனின் உருவம் பெரிதாக இருந்தது. அவன் குடித்திருந்தான். அழுக்காகவும் இருந்தான். கத்திக்கொண்டே கையில் குழந்தையை வைத்திருந்த ஒரு பெண்மீது தடுமாறி வேகமாகச் சாய்ந்தான். அந்த இடி அந்தப் பெண்ணை ஒரு முதிய தம்பதியின் மடிகளில் போய் விழ வைத்தது. அவள் காயப்படாததை ஓர் அற்புதம் என்றுதான் சொல்லவேண்டும்.

பயந்துபோன தம்பதியர் துள்ளியெழுந்து சிதறி, பெட்டியின் மறுபக்கத்துக்குத் தடுமாறி ஓடினார்கள். பின்வாங்கி ஓடிய தம்பதியினரில் அந்த வயதான பெண்மணியின் பின்புறத்தில்

ஓர் உதைவிட்டான். ஆனால், விரைந்து ஓடிவிட்டதால் அந்த உதை அந்தப் பெண்மீது படவில்லை. அடி விழாமல் போனது குடிகாரனின் கோபத்தை அதிகப்படுத்தி, அவன் பெட்டியின் நடுவில் இருந்த இரும்புக் கம்பத்தைப் பிடித்து உலுக்கி அதைப் பெயர்த்துப் பிடுங்க முற்பட்டான். அவனுடைய ஒரு கை வெட்டுப்பட்டு இரத்தம் ஒழுகிக்கொண்டிருந்ததை என்னால் பார்க்க முடிந்தது. ரயில் சற்றுத் தடுமாறி முன்னே பாய்ந்து போய்க்கொண்டிருந்தது. பயணிகள் பயத்தில் உறைந்து போயிருந்தார்கள். நான் எழுந்து நின்றேன். அப்போது நான் இளைஞன். ஓர் இருபது ஆண்டுகளுக்கு முன், அப்போது உடல்வலிமையோடு இருந்தேன். கடந்த மூன்று ஆண்டு களாகத் தினமும் எட்டு மணி நேரம் கடுமையாக அய்கிடோ பயிற்சியைச் செய்துவந்தேன். எனக்குத் தூக்கி எறியவும் இறுக்கிப் பிடிக்கவும் பிடிக்கும். நான் நல்ல வலிமையுடையவன் என்று நினைத்தேன்.

நிஜ மோதலில் என்னுடைய தற்காப்புக் கலை பரீட்சிக்கப் படாமல் இருந்ததுதான் பிரச்சினை. அய்கிடோ மாணவர் களான நாங்கள் சண்டையிட அனுமதிக்கப்படவில்லை. என் ஆசிரியர், 'அய்கிடோ என்பது இணக்கத்துக்கான கலை. யாருக்குச் சண்டையிடப் புத்தி போகிறதோ அவர் பிரபஞ்சத் தோடுள்ள தொடர்பை இழக்கிறார். நீங்கள் மக்களை ஆதிக்கம் செய்ய நினைத்தால், நீங்கள் ஏற்கெனவே தோற்றுவிட்டீர்கள் என்று அர்த்தம். நாம் மோதலைத் தீர்ப்பது எப்படி என்பதைப் படிக்கிறோம், எப்படி மோதலைத் தொடங்குவது என்று படிக்கவில்லை.' நான் அவருடைய சொற்களுக்குச் செவி மடுத்தேன். மிகக் கடினமாக முயற்சி செய்தேன். தெருவைக் குறுக்கே கடக்கும்போதுகூட போக்கிரிகளைத் தவிர்த்து கவ்வன மாகக் கடந்துபோனேன். ரயில் நிலையங்களுக்கு அருகில் திரியும் பொறுக்கிகளைத் தவிர்த்தேன். என்னுடைய பொறுமை நிறைந்த சுயக்கட்டுப்பாடு என்னை உணர்த்தியது. நான் புனித மானவனாகவும் கடினமானவனாகவும் உணர்ந்தேன். என் மனத்தில், எவ்வாறாயினும், குற்றம் செய்தவர்களைத் தண்டித்து அப்பாவிகளைக் காப்பாற்றும் ஒரு முறையான வாய்ப்புக்காகக் காத்திருந்தேன். இதுதான் அந்த வாய்ப்பு என எனக்கு நானே நினைத்துக்கொண்டு எழுந்து நின்றேன்.

மக்கள் ஆபத்தில் இருக்கிறார்கள், ஒருவேளை நான் விரைந்து செயல்பட்டு ஏதேனும் செய்யாவிட்டால், அவர்கள் காயப் படுவார்கள். நான் எழுந்து நின்றதைப் பார்த்த குடிகாரனுக்கு அவனுடைய ஆத்திரத்தைக் குவிக்க ஒரு வாய்ப்புக் கிடைத்ததாக நினைத்து, 'ஆஹா!!' என்று உறுமினான். பிறகு, 'வெளிநாட்டுக் காரனா! உனக்கு ஜப்பானிய நடைமுறைப் பண்புகள் பற்றிய பாடம் தேவை!' நான் தலைக்கு மேலிருந்த பயணிகள் பிடித்துக் கொள்கிற பட்டியை லேசாகப் பிடித்துக்கொண்டு அருவருப்பாக ஒரு பார்வை பார்த்தேன். இந்த வான்கோழியை இரண்டாகக் கிழிக்கத் திட்டமிட்டேன். ஆனால் அவன்தான் முதலில் மோத வேண்டும். அவனைக் கோபமடையச் செய்யவேண்டும். எனவே நான் உதடுகளைக் குவித்துத் திமிரான பறக்கும் முத்தத்தைவிட்டேன். அவன், 'சரிதான், உனக்கொரு பாடம் கிடைக்கப் போகிறது' என்று கத்திவிட்டு என் மீது பாயத் தயாரானான். அவன் நகர்வதற்கு ஒரு நொடிக்கு முன், யாரோ 'ஹேய்' என்று சப்தமிட்டார்கள். காதைக் கிழிப்பது போன்ற ஒரு சப்தம். விநோதக் குதூகலத்தோடு கூடிய அந்தச் சப்தத்தில் பாடல் போன்ற லயம் நிறைந்திருந்தது. நீங்களும் உங்கள் நண்பரும் எதையோ தேடிக் கொண்டிருக்கிறீர்கள். சட்டென்று உங்கள் நண்பருக்கு நீங்கள் தேடியது கிடைத்துவிட்டால் ஒரு குரல் எழுப்புவாரே அந்த 'ஹேய்!'

நான் என் இடப்புறம் நகர்ந்து திரும்பினேன். குடிகாரன் வலப்புறம் திரும்பினான். நாங்கள் இருவரும் ஒரு முதிய ஜப்பானியரைப் பார்த்தோம். தன் எழுபதுகளில் இருக்கக்கூடிய இந்தச் சிறிய தோற்றம்கொண்ட பெரியவர் கிமோனோ (ஜப்பானிய ஆடை) அணிந்து தூய்மையான தோற்றத்துடன் அமர்ந்திருந்தார். அவர் என்னைக் கவனிக்கவில்லை. ஆனால் அந்தத் தொழிலாளியைப் பார்த்து மகிழ்ச்சியாகச் சிரித்துக் கொண்டிருந்தார். வரவேற்கத்தக்க மிகவும் முக்கியமான இரகசியம் ஒன்றைப் பகிர்ந்துகொள்ளக் காத்திருப்பவர் போல இருந்தார். உள்ளூர் மொழியில் 'வா, வந்து என்னோடு பேசு' என்று தம் கையை லேசாக அசைத்தார்.

அந்தக் கனத்த மனிதன் கயிற்றில் இழுக்கப்படுவது போல அந்த முதியவர் முன்போய் போரில் இருப்பவனைப் போல

நின்று, ரயில் சப்தத்துக்கு மேலாக உறுமினான், 'நான் ஏன் உன்னிடம் பேச வேண்டும்.' குடிகாரன் இப்போது அவனுடைய முதுகை என்பக்கம் காட்டிக்கொண்டு நின்றான். அவனுடைய கைகள் ஒரு மயிரளவு அசைந்தாலும் அவனைக் கீழே சாய்த்து விடுவேன். முதியவர் அந்தத் தொழிலாளியைப் பார்த்துத் தொடர்ந்து புன்னகைத்தபடி, ஆர்வத்தில் கண்கள் மின்ன, 'என்ன குடித்தாய்?' என்றார். அவன், 'நான் அரிசிச் சாராயத்தை (சக்கே) குடித்தேன்' என்றவன், 'அதைப்பற்றி உனக்கென்ன, நீ உன் வேலையைப் பார்' என்றான்.

அவனுடைய எச்சில் துளிகள் அந்த முதியவரைக் குளிப் பாட்டின. 'அப்படியா! அருமை!' என்ற முதியவர், 'மிகவும் அருமை! பார், எனக்குக்கூட அரிசிச் சாராயம் ரொம்பப் பிடிக்கும். ஒவ்வொரு மாலையும் நானும் என் மனைவியும் (அவளுக்கு இப்போது 76 வயதாகிறது) நாங்கள் ஒரு சிறு அரிசிச் சாராயப் பாட்டிலோடு தோட்டத்துக்குப் போவோம். ஒரு பழைய மரப்பெஞ்சில் அமர்ந்து சூரிய அஸ்தமனத்தைப் பார்ப்போம். எங்களுடைய பெர்சிமோன் மரம் எப்படி இருக்கிறது என்று பார்ப்போம். என்னுடைய கொள்ளுத் தாத்தா அந்த மரத்தை நட்டார். சென்ற குளிர்காலத்தில் வீசிய பனிப் புயலுக்குப்பின் அது பிழைக்குமா என்று கவலைப் பட்டோம். ஆனால், நான் நினைத்ததைவிட எங்கள் மரம் நன்றாகவே சுதாரித்து நின்றது. அது இருக்கும் மண்ணின் தன்மையை வைத்துப் பார்க்கும் போது அது அபாரமாகப் பிழைத்து நின்றது. நாங்கள் எங்கள் அரிசிச் சாராயத்தோடு தோட்டத்துக்குப் போய் மாலையில் மகிழ்வோம். மழை பெய்யும் போதுகூடத் தோட்டத்தில் அரிசிச் சாராயத்தோடு அமர்வது மிகவும் பிடிக்கும்.' கண்கள் விண்மீன்களாக மின்ன, அவர் அந்தத் தொழிலாளியின் முகத்தைப் பார்த்தார். அந்த முதியவரின் பேச்சைப் பின்தொடர, அவன் சிரமப்பட்டுக் கொண்டிருந்த போதே, அவனுடைய முகம் அமைதியடைந்தது. முஷ்டிகள் தளர்ந்தன. 'ஆமாம்', 'ஆஹா' என்றான்.

பிறகு 'எனக்கும் பெர்சிமோன் பழ மரங்களைப் பிடிக்கும்' என்றான், அவன் குரல் தாழ்ந்திருந்தது. முதியவர், 'ஆம், உனக்கொரு அற்புதமான மனைவி இருக்கவேண்டுமே'

என்றார். 'இல்லை, என் மனைவி இறந்துவிட்டாள்' என்றான் தொழிலாளி. மெதுவாக ரயில் ஓட்டத்தில் ஆடியபடி அந்தக் கனத்த மனிதன் தேம்பி அழத் தொடங்கினான், 'எனக்கு மனைவி இல்லை, வீடில்லை, வேலையில்லை, எனக்கே என்னைப் பார்க்க வெட்கமாக இருக்கிறது' என்றான். கண்ணீர் அவன் கன்னங்களில் உருண்டோடியது; வாழ்வை இழந்த வேதனை அவனுடலில் அதிர்ந்து ஓடியது. இப்போது இது என் முறை. அங்கே இளைஞனுக்கு உரிய கள்ளமின்மையில், இந்த உலகை ஜனநாயக உரிமைக்குப் பாதுகாப்பானதாக ஆக்கத் துடித்த நான், சட்டென்று அவனைவிட அழுக்கானவனாக உணர்ந்தேன். பிறகு ரயில் எனக்கான நிறுத்தத்தில் நின்றது. கதவுகள் திறந்தன. அந்த முதியவர் பரிதாபத்துடன், 'அடடா' என்றவர், 'இது சிரமமான சூழ்நிலைதான், இங்கே உட்கார். எனக்கு அதைப் பற்றிச் சொல்' என்றார்.

கடைசியாக ஒருமுறை பார்ப்பதற்காகத் தலையைத் திருப்பினேன். தொழிலாளி கை கால்களைப் பரப்பி இருக்கையில் கிடந்தான். அவனுடைய தலை முதியவரின் மடியில் இருந்தது. முதியவர் அழுக்குப் படிந்து ஜடையாகக் கிடந்த அவனுடைய தலையைத் தடவிக் கொடுத்தார். ரயில் நகரவும், நான் ஒரு பெஞ்சில் உட்கார்ந்தேன். நான் என் தசைகளைக் கொண்டு செய்ய நினைத்ததை அவர் தன் இனிய சொற்களால் அடைந்திருக்கிறார். அய்க்கிடோ தற்காப்புக் கலை. இதோ நடந்த ஒரு சண்டையில் பயன்படுத்தப்பட்டதை என் கண்களால் கண்டேன். அதன் சாரம் அன்பு. நான் இந்தக் கலையை முற்றிலும் வேறான நிலையிலிருந்து கற்க வேண்டும்.

மோதலின் முடிவு பற்றி என்னால் பேச முடிவதற்கு வெகு காலம் ஆகும் எனக்கு.

## 171

# போர்களை நிறுத்துதல்

கொரிய யுத்த சமயத்தில், 'ஜென் சதை, ஜென் எலும்புகள்' புத்தகத்தின் ஆசிரியரான பால் ரெப்ஸ், கியோட்டோவில் உள்ள சில மடாலயங்களைப் பார்க்க ஆசைப்பட்டார். யுத்தத்துக்கான களமாகப் பயன்படுத்தப்பட்டு வந்தது ஜப்பான். ஆகவே இராணுவம் சாராத மேற்கத்தியர்களுக்கு விசா (நுழைவுச் சீட்டு) கொடுப்பதில்லை' என்று கூறினர். நேசத் துருப்புகளைச் சந்திக்க நான் வந்திருக்கவில்லை என ரெப்ஸ் சொன்னார். அவர் நுழைவுச் சீட்டுக்கான கோரிக்கை மனுவை திருப்பி, அதில் எழுதினார்,

'ஒரு கோப்பை பசுமைத் தேநீரைத் தயாரித்து, நான் போரை நிறுத்துகிறேன்' என்று எழுதி அதை அந்த அதிகாரியிடம் திருப்பிக் கொடுத்தார்.

அந்த அதிகாரி அதிலிருந்த கவிதையைப் பார்த்தார். பின்னர் அவர் ரெப்ஸிடம், 'இது மாதிரியான சமயத்தில் உங்களைப் போன்ற மனிதர்கள்தாம் எங்கள் நாட்டுக்கு அதிகம் தேவைப் படுகிறார்கள்' என்று சொல்லி நுழைவுச் சீட்டை அவருக்குக் கொடுத்தார். இந்தக் கதையைக் கேள்விப்பட்ட ஒருவர், 'புற்று நோயால் செத்துக்கொண்டு, நான் போரை நிறுத்துகிறேன்' என்று எழுதினார்.

***

வருத்தம் வரும்போது, வருத்தமாக இருங்கள்.
பயம் வரும்போது, பயந்தவாறு இருங்கள்.
'நிபந்தனையற்ற சுய ஏற்பு '
எல்லாத் துயரங்களும் பற்றுதலால்தான் ஏற்படுகின்றன.

## 172

# என் நிஜப் பெயரால் என்னைக் கூப்பிடுங்கள்

*12* வயதுடைய ஒரு சிறுமியை ஒரு கடல்கொள்ளையன் பலாத்காரம் செய்ததால் அந்தச் சிறுமி கடலுக்குள் குதித்து மூழ்கிப்போனார் என்பதைக் கேள்விப்பட்ட, திக் நாட் ஹான்ஹ் (வியாட்நாமைச் சேர்ந்த ஒரு ஜென் துறவி) மனம் ஆத்திரத்தாலும் துயரத்தாலும் நிரம்பியது.

அவர் தம்மிடமே கேட்டுக்கொண்டார், துப்பாக்கியைக் கையில் எடுத்து அந்தக் கொள்ளையனை ஏன் சுட்டுக் கொல்லக் கூடாது?

அவர் எழுதுகிறார்: 'மிக நீண்டகால தியானத்துக்குப் பிறகு, நான் இந்தக் கவிதையை எழுதினேன். அதில், மூன்று மனிதர்கள் இருக்கிறார்கள்; பன்னிரெண்டு வயது சிறுமி, கடல்கொள்ளையன் மற்றும் நான்.'

நான் நாளை போய்விடுவேன் என்று சொல்லாதே
ஏனென்றால் இன்றைக்குமே நான் இன்னும்
வந்துகொண்டிருக்கிறேன்.
ஆழமாகப் பார்: நான் ஒவ்வொரு நொடியும்
வந்துகொண்டிருக்கிறேன்.
இளவேனிற் காலத்துக் கொடியில் ஒரு மொட்டாக ஆவதற்கு,
இன்னும் மெல்லிய இறகுகளோடு சிறு பறவையாக இருப்பதற்கு,
என் புதிய கூண்டிலிருந்து பாடக் கற்றுக்கொள்ள,
ஒரு மலரின் இதயத்தில் ஒரு கம்பளிப்புழு ஆவதற்காக,
கல்லில் ஒளிந்துகொண்டிருக்கும் ஓர் ஆபரணமாவதற்காக.

நான் வந்துகொண்டிருக்கிறேன்.
சிரிக்கவும் அழவும்,
பயப்படவும் நம்பிக்கைகொள்ளவும்,
வாழுமுயிர் அனைத்தின் பிறப்பும் இறப்பும்
என் இதயத் தாளமே.

நதியின் மேற்பரப்பில் உருமாறும் ஈசல் நான்,
இளவேனில் வரும்போது
சரியான நேரத்தில் வந்து ஈசலை உண்ணும்
பறவையும் நானே.
குளத்தின் தெளிவான தண்ணீரில்
மகிழ்ச்சியாக நீந்தும் தவளை நான். அமைதியாக அணுகி
அந்தத் தவளையை உண்ணும் தண்ணீர்ப் பாம்பும் நான்தான்.
எலும்பும் தோலுமாக, கால்கள் மூங்கில் குச்சிகளைவிடச்
சிறிதாக உள்ள உகாண்டாக் குழந்தை நான்.
உகாண்டாவுக்குப் பயங்கர ஆயுதங்களை விற்கும்
ஆயுத வியாபாரியும் நான்.

ஒரு சிறுபடகிலிருந்து சமுத்திரத்தில் குதித்த
கடல் கொள்ளையனால் கற்பழிக்கப்பட்ட
12 வயது அகதிப் பெண் நான்.
பார்க்கவும், நேசிக்கவும் திராணியற்ற இதயத்தைக்கொண்ட
கடல்கொள்ளையனும் நான்தான்.

எக்கச்சக்கமான அதிகாரத்தைக் கையில்வைத்துக்
கொண்டிருக்கும் பொலிட்பீரோ உறுப்பினர் நான்.
உழைப்பாளர் முகாமில் அடைக்கப்பட்டுத் தன் ‘இரத்தத்தால்
கடனை அடைத்துக்கொண்டிருப்பவனும்’ நானே.
என் மகிழ்ச்சி வாழ்வின் அத்தனை தளங்களிலும்
மலர்களை மலரவைக்கும் ஊற்றைப் போன்றது.
என்னுடைய வலி கண்ணீர்த் துளிகளின் நதி,
அது நான்கு சமுத்திரங்களை நிரப்பக்கூடியது.

தயவுசெய்து என்னை என் நிஜப் பெயரால்
கூப்பிடுங்கள். அப்போதுதான்
நான் என் கதறல்களையும் என் சிரிப்புகளையும்

ஒருங்கே கேட்பேன். அப்போதுதான் என் மகிழ்ச்சியும் வலியும் ஒன்றே என்று உணர்வேன்.

தயவுசெய்து என் நிஜப் பெயரால் என்னைக் கூப்பிடுங்கள். அப்போதுதான் நான் விழித்து, என் இதயக் கதவைத் திறந்துவைக்க முடியும்,

அது கருணையின் கதவு.

173

## மறுபக்கம்

ஒரு நாள் ஓர் இளம் புத்த துறவி வீடு நோக்கிய பயணத்தின் பொழுது ஓர் அகண்ட நதியின் கரையை வந்தடைந்தார். தம் முன்னே இருந்த அப்பெரும் தடையை நம்பிக்கையின்றி வெறித்தபடி, அந்த அகண்ட தடுப்பை எவ்வாறு கடப்பதென்று மணிக்கணக்கில் யோசித்துக்கொண்டிருந்தார். அவர் பயணத்தைத் தொடரும் முயற்சியைக் கைவிட எண்ணும் தருணத்தில், நதியின் மறுபக்கத்தில் மாபெரும் குரு ஒருவர் நின்றுகொண்டிருப்பதைப் பார்த்தார். உடனே அந்த இளம் துறவி ஆசிரியரை நோக்கி உரத்த குரலெழுப்பனார்: 'ஓ அறிவார்ந்தவரே, நான் நதியின் மறுபக்கத்தை எப்படி அடைவது என்று சொல்வீர்களா?'

ஆசிரியர் ஒரு கணம் சிந்தித்தபடி, நதியை மேலும் கீழுமாகப் பார்த்துவிட்டு, உரத்து பதிலளித்தார்: 'என் மகனே, நீ மறுபக்கத்தில்தான் இருக்கிறாய்.'

## பயணம் செய்தல்

'ஆன்மிகப் பயணம் என்பது ஒருவர்
தன் சொந்த இதயத்தின் வழியே பயணம் செய்வதைத் தவிர
வேறொன்றும் இல்லை,
அதன் மலைகளிலும் பள்ளத்தாக்குகளிலும்
இருண்ட வனங்களிலும், வேகமான
அடிநீரோட்டங்களிலும்,
ஆசீர்வாதங்கள், மகிழ்ச்சி ஆகியவற்றின்
பொழிவிலும் பயணம் செய்வது.
விழிப்புணர்வை மெய்யாக்குவதுதான்
மனமாற்றத்தின் செயல்முறை.
மேலும் உங்கள் மனதுக்குள் பயணம் செய்வதே
உலகின் இதயத்துள் பயணம் செய்வதாகும்.'

# போதி ஜென்டோ பற்றி

போதி ஜென்டோ, தூய ஜோசப் தோட்டத்தில் கொடைக் கானலை அடைவதற்கு 11 கிலோமீட்டர் முன்னால் இருக்கும் பெருமாள் மலை கிராமத்தில் அமைந்துள்ளது. அங்கு இந்தியர் களும் இந்தியரல்லாதவர்களும் பணியாளர்களாக இருந்து மையம் நடக்க உதவுகிறார்கள்.

ஒடுக்கப்பட்டோர், மலைவாழ் மக்களின் குழந்தைகள், பெண்கள் ஆகியோருக்காகச் 'சிறுமலர்' என்ற பெயரில் சில சமூகத் திட்டங்களை போதி ஜென்டோ நடத்துகிறது. இது ஆமா சாமியின் மாணவர்களும் இங்குவரும் பலரும் தரும் நன்கொடைகளால் நடத்தப்படுகிறது. தியானமும் நசுக்கப் பட்டவர்களின் விடுதலையும் ஒன்றோடொன்று தொடர் புடையது. எல்லா உயிரினங்களும் தொடர்புகொண்டிருப்பதும், தொடர்புள்ள ஜீவன்களாயிருப்பதும் பிரதித்ய சமுத்பாதா எனப்படும் பௌத்த நோக்காகும். இதுவே சுயத்தையும் உலகத்தையும் இரண்டாகப் பார்க்காமல் ஒன்றாகப் பார்த்து அனைவருக்குமான விடுதலை என்னும் அழைப்புக்கான தூண்டுதல். மகாயான பௌத்தத்தில் —இதன் கிளையே ஜென் பௌத்தம்—அனைத்து ஜீவன்களும் முக்தியை (நிப்பனா) அடையாதவரை, போதிசத்துவர் முக்தியை அடையமாட்டார் என்று சொல்லப்படுகிறது. ஜென் புரிதலில் விடுதலையும் சுதந்திரமும் வெறுமை பற்றிய எல்லாப் புரிதல்களுக்கும் அப்பாற்பட்டது, மெய்யான சுயம்; சமூக- பொருளாதார

**போதி ஜென்டோ - ஜென் தியான மையம்**
பெருமாள்மலை, கொடைக்கானல் **624 104**
தமிழ்நாடு, தென்னிந்தியா

போதி ஜென்டோ, பங்குத்தந்தை ஆமா சாமியால் தொடங்கப்பட்டது. இது விழிப்புணர்வு / மெய்யுணர்வுக்கான ஜென் தியானப் பயிற்சி மையம்; அவருடைய சீடர்களும் ஆர்வமுள்ளவர்களும் ஜென் தியானம் பயிலுமிடமாகவும் இருக்கிறது.




இது சீடத்துவத்தைக் கற்றுக்கொள்வதற்கும் கற்றதை, தன்னோடும் மற்றவர்களோடும் ஆசிரியரோடும் தொடர்புபடுத்துவதிலும் ஈடுபடுகிறது. தொடக்க அடியையும் பொறுப்பையும் கற்றுக்கொள்ளஅழைக்கிறது.

ஒட்டுமொத்த உலகுக்குமான அக்கறையும் கருணையுமே விழிப்புணர்வுக்கான அளவுகோலாக வைத்திருக்கிறது.

போதி ஜென்டோ, ஏழைகளுக்காக குறிப்பாக குழந்தைகளுக்கான 'சிறுமலர்' திட்டங்களைச் செயல்படுத்துகிறது. உங்கள் உதவிக்கும் ஒத்துழைப்புக்கும் நாங்கள் கடமைப்பட்டவர்கள்.

Website : www.bodhizendo.org
Email : mail@bodhizendo.Org

விடுதலை என்பது அதன் ஒரு பகுதியே. நான் மத்சுஷிமாவின் ஜியுகாஞ்சி கோயிலின் ஜென் குருவை, இந்தியாவில் பணி யாற்றிய வந்த ஜப்பானிய அருட்சகோதரியோடு சென்று சந்தித்தேன். நாங்கள் எங்களை அறிமுகப் படுத்திக்கொண்ட போது குரு சகோதரியை நன்கு குனிந்து வணங்கிவிட்டு, 'எங்களிடம் ஞானமுள்ளது, கிறிஸ்தவர் களாகிய உங்களிடம் அது இல்லை. அருட்சகோதரிகளான நீங்கள் கருணை சேவையில் வலிமையாக இருக்கிறீர்கள், அது எங்களிடம் இல்லவே இல்லை. இரண்டும் இணைந்தால் நன்றாக இருக்கும். ஏனென்றால் கருணையற்ற ஞானம் பயனற்றது, ஞானமற்ற கருணையோ குருட்டுத்தனமானது' என்றார்.

எவ்வாறாயினும், ஜென்னைப் பொறுத்தவரை, விழிப்புணர்வு பெறுவதும் விடுதலைக்கான பணியும் இரண்டு வெவ்வேறு பக்கங்களோ, தளங்களோ அல்ல. விழிப்புணர்வும் கருணையும், பிரக்ஞையும் காருண்யமும் ஒரே புரிதலின் இரண்டு பக்கங்கள். விழிப்புணர்வடைவது என்பது உலகத்துக்கும்/மற்றவர்களுக்கும் சுயமாக விழிப்புணர்வடைவதும், சுயத்தை உலகமாகவும் / மற்றவராகவும் உணர்வதுமே. இவ்வாறு சுயத்தை உலகமாகவும், உலகத்தைச் சுயமாகவும் உணர்வதிலேயே கருணையின் மையமுள்ளது. மற்றவர் என்பது சொந்த சுயத்தை மற்றவராக ஆக்குவதே.

செயல்களும் பணிகள் அல்லது காரியங்களும் இந்தப் புரிதலில் இருந்தே தொடங்குகின்றன—இது காலில் அடிபட்டால் கைகள் தானாக உதவிக்குச் செல்வதைப் போல. எந்தச் செயல், எப்போது, எங்கே, எப்படி—இவை அனைத்தும் தனிமனிதனின் விருப்பத்துக்கும் நோக்கத்துக்கும் விடப்படுகிறது: நேசி, எதை ஆசைப்படுகிறாயோ அதைச் செய் என்று அகஸ்டின் சொன்னது போல. அன்பு சட்டத்துக்கு அப்பால் செல்கிறது. ஜென் முதலாவதாகவும் முற்றானதாகவும் விழிப்புணர்வையே மையப்படுத்துகிறது—இது போன்ற பணிகளால் அல்ல; இது நீங்கள் விழிப்புணர்வடைந்த பிறகுதான் உங்களைச் சுற்றியுள்ள துன்பத்தைப் போக்க வேண்டும் என்பதல்ல; சூழ்நிலைக்குத் தக்கபடி எப்படியெல்லாம் ஈடுபட முடியுமோ, ஈடுபடுங்கள். போதி ஜென்டோ, முழுமையான ஆசிரம் அல்ல; இது ஒரு

தியான மையம். இங்கு வருபவர்கள் காலநேரத்தைக் கடைப் பிடிக்கவும் தாங்கள் தங்கியிருப்பதற்குப் பணம் தரவும் எதிர்பார்க்கபடுகிறது. இப்படியிலான ஜென் தியான வகுப்புகளும் ஒவ்வொரு மாதமும் இரண்டரை நாள்கள் — ஐந்து நாள்கள், தீவிர பயிற்சிப் பாடங்களும் நடக்கின்றன. அனைவரும் ஜென் மாணவர்களல்ல; ஆனால், இங்கு பயிற்சி செய்வதன் மூலம் ஜென்னின் சுவை அனைவருக்கும் கிடைக்கும் என நம்புகிறோம். ஜென் எளிமையானது; அதே வேளையில் ஆழமானது. ஒருவர் எத்தனை ஈடுபாட்டோடு இருக்கிறார், ஜென்னில் அவருடைய இலக்கு என்ன என்பது தனிமனிதரைப் பொறுத்தது.

ஜப்பானிய ஜென் கடுமையான ஒழுக்கத்தோடு பிணைந்தது; இங்கே, போதி ஜென்டோவில் ஒழுக்கமும் சுதந்திரமும் பிணைந்துள்ளன. இங்கே ஜென் ஒரு திறந்த மனத்து அணுகுமுறையைக் கொண்டுள்ளது. ஜாஜென் அல்லது வெறுமனே அமர்ந்திருத்தல், வேலை, அமைதி, கொஞ்சம் படிப்பு; கொஞ்சம் சூத்திரங்களைப் பாடுதல், மடங்கிக் குனிந்து வணங்குதல். ஆனால் அதிகம் பாடுவதோ, சடங்குகளோ பிற பயிற்சிகளோ இல்லை. ஜென் என்பது சுயமற்ற சுயத்தை விழித்தெழுப்புதலும் தற்கணத்தில் வாழ்தலும் ஆகும். ஜென் மொழியும் மரபுமே பயிற்சிக்கும் விழிப்புணர்வுக்குமான சட்டகங்கள். ஆனால் அவசியமானவையல்ல. ஜென் நிறுவன ரீதியான மதத்தையும் சித்தாந்தத்தையும் கடந்து செல்கிறது, அது பௌத்தத்தில் வேர் விட்டிருந்தாலும், உதவக்கூடிய எந்தப் பதத்தையும் பயன் படுத்துகிறது. பௌத்தத்தில் வேர்விட்டிருந்தாலும், ஒருவர் பௌத்தத்தைக் கடந்து செல்ல வேண்டும்.

'ஒருவேளை புத்தரைச் சந்திக்க நேர்ந்தால் அவரைக் கொல்லுங்கள்!'

தியான மண்டப மேடையில் சிலுவையும் புத்தர் சிலையும் உள்ளன. நாங்கள் அவற்றை விழுந்து வணங்குகிறோம். விழுந்து வணங்கும் போது, வெறுமனே விழுந்து வணங்குங்கள்— சுயம், உலகம், புத்தம், கடவுள் போன்றவற்றில் உள்ள கருத்துப் படிவங்களையும் சித்தாந்தங்களையும் தூக்கி எறியுங்கள்.

ஜென் பௌத்தத்தில் வேர் கொண்டுள்ளது, இருப்பினும் ஒருவர் பௌத்தத்தைக் கடந்துசெல்ல வேண்டும். எல்லா வடிவங்களையும் படிமங்களையும் கடந்து சுயத்திடம் விழிப்படையுங்கள், அதே சமயத்தில் கருணையின் வெறுங் கைகளோடு சந்தைக்குள் நுழையுங்கள்.

ஆமா சாமி





## ஜாஜென் (தியானம்)

ஜாஜென் என்றழைக்கப்படும் தியானத்தில்,
பாதகமான உள்ளுணர்வும் உணர்வெழுச்சியும் தொடர்பில்
இருக்கும். அதே சமயத்தில் அமைதி, மகிழ்ச்சி,
கருணை ஆகியவையும் அதில் இருக்கட்டும்.
உங்களுடைய அச்சம், பதற்றம், பொறாமை, கோபம்,
தோற்றத்திற்கு அர்த்தமின்மை, குருட்டுத்தனம், வாழ்வு
போன்றவற்றைப் பற்றியும் உங்களைப் பற்றியுமான
முக்கியமின்மையை மறுக்கவோ, அடக்கி வைக்கவோ
முயலாதீர்கள்; இவை அனைத்துக்கும் நடுவில் இவற்றை
அரவணைத்தபடி போதி சித்தத்தில் உறைந்திருங்கள்.
நம்பிக்கை, துணிவு, அமைதி, கருணை
ஆகியவற்றில் உறைந்துவிடுங்கள்.
உங்களுக்குள்ளும், உங்களுடைய அண்டை வீட்டுக்காரர்
மனத்திலும் ஒளிரும் நற்பண்பைப் பாருங்கள்.
இறுதியில், 'அனைத்தும் நன்றாகும்,
விஷயங்களின் எல்லாப் பாங்குகளும் நன்றாகும்.'

## மாபெரும் வழி

ஜென் குரு வூ-மென் ஹூய்-காய்ஸினுடையது *(1183-1260)*

மாபெரும் தர்மவழி வாசல்களைக் கொண்டிருப்பதில்லை,
அதில் ஆயிரக்கணக்கான பாதைகள் நுழைகின்றன;
நீங்கள் இந்த வாசலற்ற வாசல் மூலம் கடக்கும்போது,
சொர்க்கத்துக்கும் பூமிக்கும் இடையே
சுமையின்றி நடக்கிறீர்கள்.

('வாசலற்ற வாசல்' என்னும் நூலில் அவருடைய
முன்னுரையின் இறுதியில் உள்ள வாக்கியம்.)

## இராகுலன் தியானம் செய்கிறான்

(தம் மகன் இராகுலனுக்குப் புத்தர் போதித்தது)

'இராகுலா, தியானத்தை அன்பான தயவோடு
வளர்த்தெடு; ஏனென்றால் அன்பான தயவோடு
தியானத்தை வளர்த்தெடுக்கும் போது,
எந்த மோசமான ஆசையும்
தடுக்கப்பட்டுவிடும். இராகுலா, கருணையில் தியானம் செய்;
ஏனென்றால், கருணையில் தியானத்தை
வளர்த்தெடுக்கையில் எந்தக் குரூரமும் தடுக்கப்படும்.
இராகுலா, பாராட்டும் மகிழ்ச்சியில் தியானத்தை வளர்த்தெடு;
ஏனென்றால், பாராட்டும் மகிழ்ச்சியில்
தியானத்தை வளர்த்தெடுத்தால்,
மன நிறைவின்மை தடுக்கப்படும்.
இராகுலா, பற்றற்ற தன்மையில்
தியானத்தை வளர்த்தெடு; ஏனென்றால் பற்றற்ற
தன்மையில் தியானத்தை வளர்த்தெடுத்தால்
எந்த அருவருப்பும் தடுக்கப்படும்.'

# இளவேனில் மலர்ச்சி
# அல்லது குளிர்காலக் காற்று

கண் தெரியாத மனிதர் ஒருவர் நகரப் பூங்காவில் பிச்சை யெடுத்துக் கொண்டிருந்தார்.

யாரோ ஒருவர் அவரை அணுகி மக்கள் தாராளமாகத் தருகிறார்களா என்று கேட்டார்.

கண் தெரியாத மனிதர் ஏறத்தாழக் காலியாக இருந்த தகரப் பாத்திரத்தை ஆட்டினார்.

அந்த மனிதர் அவரிடம், 'உங்களுடைய பாத்திரத்தில் என்னை எழுதவிடுங்கள்' என்றார். கண்தெரியாதவர் ஏற்றுக் கொண்டார். அன்று மாலை திரும்பி வந்தார் அந்த மனிதர். 'நல்லது. இன்றைக்கு எப்படிப் போச்சு?' என்று கேட்டார்.

கண்தெரியாதவரின் காசு நிரம்பிய பாத்திரத்தைக் காட்டிக் கேட்டார் எழுதியவர்.

'உலகத்தில் இல்லாதத்தை அப்படி என்னதான் என்னுடைய பாத்திரத்தில் எழுதினீங்க' என்று கேட்டார் கண் தெரியாதவர். அந்த மனிதர், நான் வெறுமனே இதைத்தான் எழுதினேன்:

'இன்று ஒரு வசந்த காலத்தின் நாள்.
நானோ பார்வையற்றவன்.'

௨௯௨